# சங்கு

ந.அதியமான்
இணைப் பேராசிரியர்
நீரகழாய்வு மையம்



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ISBN : 81-7090-353-X

தமிழ்ப் பல்கலைக்கழக வெள்ளி விழா ஆண்டு வெளியீடு - 10

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 292

திருவள்ளுவராண்டு 2036- ஐப்பசி - நவம்பர் 2005

| | |
|---|---|
| நூல் | : சங்கு |
| ஆசிரியர் | : ந. அதியமான் |
| மொழி | : தமிழ் |
| பொருள் | : வரலாறு |
| பதிப்பு | : முதற்பதிப்பு 2005 |
| பக்கம் | : 8 + 296 |
| தாள் | : டி.என்.பி.எல் மேப்லித்தோ 18.6 கிலோ |
| அளவு | : டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : சாதாக்கட்டு |
| விலை | : உரூ. 110/- |
| படிகள் | : 1000 |
| அச்சு | : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம் தஞ்சாவூர் |



# தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005 இந்தியா
வெள்ளிவிழா ஆண்டு




---

முனைவர். சி.சுப்பிரமணியம்
துணைவேந்தர்

## அணிந்துரை

தமிழ்ப் பல்கலைக்கழகம், தொடங்கிய நாள் முதல் வெள்ளிவிழாக் காணும் இவ்வாண்டு வரை தமிழியல் உயர் ஆய்வுகளுக்கு முக்கியத்துவம் அளித்து வருகிறது. இம்முயற்சியின் பலன்கள் மக்களைச் சென்றடைய வேண்டுமென்பது இப்பல்கலைக்கழகத்தின் முக்கிய நோக்கமாகும். இவ்வகையில் மகுடத்திற்கு மற்றுமொரு மணிக்கல்லாக இந்நூல் அமைகிறது.

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு

என்றார் புரட்சிக் கவிஞர். கவிஞர் கூறும் சங்கு பற்றி இதுவரை மேற்கொள்ளப்படாத ஆய்வை ஆசிரியர் அரிதின் முயன்று வெளிக்கொணர்ந்துள்ளார். மிகச்சிறிய ஒரு பொருள் பற்றியும் நுணுகி ஆராய்ந்து அளப்பறிய செய்திகளைக் கொணரலாம் என்பதற்கு இந்நூல் நல்லதோர் சான்றாகும்.

தமிழ்ச் சமுதாயம் தோன்றிய நாள் முதல் இந்நாள் வரை நமது பண்பாடு, சமுதாயம், மருத்துவம் மற்றும் பிற துறைகளில் சங்கு எவ்வகையில் முக்கியத்துவம் பெற்று விளங்கியது என்பதை நூலாசிரியர் நுண்மாண்நுழைப் புலத்துடன் விளக்கியுள்ளார். உலகில் வெறெங்கும் காணப்படாத வெண்சங்கு இந்தியாவின் கடல்பகுதிகளில் குறிப்பாக தமிழகக் கடற்பகுதியான மன்னார் வளைகுடாவில் அதிக அளவில் கிடைக்கிறது என்பது வியப்பான செய்தியாகும்.

சங்கு குறித்த உயிரியல் செய்திகள், சங்கு எடுக்கும் தொழில் நுட்பம், அணிகலன்கள் செய்யும் நுட்பம் ஆகியனவற்றை வரலாற்று நோக்கில் நூலாசிரியர் நிரல்படத் தந்துள்ளார். மேலும் இவை குறித்த அறிவியல் கருத்துக்களை ஆங்காங்கே தேவையுணர்ந்து அளித்துள்ளார்.

சமுதாயப் பண்பாட்டில் சிந்து சமவெளி நாகரிகம் முதல் இந்நாள்வரை எவ்வாறெல்லாம் சங்கு முக்கியத்துவம் பெற்று விளங்கியது என்பதைத் தகுந்த சான்றுகளுடன் விளக்குவது சிந்துசமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் என்பதற்கு வலுச்சேர்ப்பதாக அமைகிறது. அது மட்டுமல்லாது சங்கு குறித்த தொன்மங்களை இலக்கியச் சான்றுகளோடு அறிவியற் கருத்துக்களை ஒப்பிட்டு நூலாசிரியர் கொண்டு வரும் முடிவுகள் உற்று நோக்கத்தக்கன. சங்கு குறித்த பழமொழிகள், நாட்டுப்புறப்பாடல்கள், சங்கொலி, மருத்துவம் மற்றும் பிற பயன்கள் குறித்த ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன.

இந்நூல் பொது மக்கள் மட்டுமன்றி சமூகவியல் ஆய்வாளருக்கும் மிகப்பயனுடையதாக அமையும்.

நூலாசிரியர் திரு. ந.அதியமான் அவர்களுக்கும் செவ்வனே வெளிக் கொணர்ந்த பதிப்புத் துறையினருக்கும் எனது பாராட்டுதல்கள்.

*சி.சுப்பிரமணியம்*

# நன்றியுரை

சங்கு என்னும் தலைப்பில் நான் அளித்த குறுந்திட்ட ஆய்வேட்டினை தமிழ்ப் பல்கலைக்கழக நூலாக வெளியிட அனுமதி வழங்கிய ஆட்சிக்குழுவிற்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை வெளியிட அனைத்து உதவிகளையும் அளித்து, நிறைந்த அலுவல் பணிகளுக்கு இடையிலும் நல்லதொரு அணிந்துரை வழங்கிய தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர். சி.சுப்பிரமணியம் அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். நூல் விரைவில் வெளிவர அனைத்து அலுவல்வழி நடைமுறைகளையும் எளிதாக்கி உதவிசெய்த பதிவாளர்(பொ) முனைவர் க.பாஸ்கரன் அவர்களுக்கு எனது நன்றி.

ஆய்வுக்காலத்தில் களப்பணியின்போது உதவிய இராமேஸ்வரத்தைச் சார்ந்த சங்கு மற்றும் சிப்பித்தொழிலக உரிமையாளர்கள் மற்றும் பணியாளர்கள், கீழக்கரையைச் சார்ந்த ஜமாலியா சங்குத்தொழிலக உரிமையாளர்கள் மற்றும் பணியாளர்கள் ஆகியோரின் அன்பான உதவியை நன்றியோடு நினைவு கூறுகிறேன்.

இந்நூலில் மேற்கோள்களாகப் பயன்படுத்தப்பட்ட ஆய்வு நூல்கள், நாட்டுப்புறப் பாடல்கள், நிழற்படங்கள் ஆகியன பல ஆய்வாளர்களின் கடும் உழைப்பால் விளைந்தவை. அவர்கள் அனைவரையும் நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

பேராசிரியர் எ.சுப்பராயலு, முனைவர் செ.இராசு, முனைவர். கா.ராஜன்-கல்வெட்டியல் துறை; முனைவர் சி.இலட்சுமணன் - அரியகையெழுத்துச்சுவடித் துறை; முனைவர் மோ. கோ. கோவைமணி- ஓலைச்சுவடித் துறை; முனைவர் சு.பரிமளா, தொல்லறிவியல் துறை; முனைவர் இ.அங்கையற்கண்ணி, இசைத்துறை; முனைவர் பா.ஜெயக்குமார் - சென்னைப் பல்கலைக்கழகம்; முதுமுனைவர் ம.சா.அறிவுடைநம்பி மையப் பல்கலைக்கழகம், பாண்டிச்சேரி; முனைவர் வல்லிப்புரம் மகேஸ்வரன்,

பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை ஆகியோர் இந்நூலுக்குத் தேவையான கருத்துக்களை பயனுற எடுத்துரைத்தனர். அவர்களுக்கும் எனது நன்றி.

நூலுக்குத் தேவையான ஒளிப்படங்களைத் தந்துதவி தனது கருத்துக்களையும் அளித்த நண்பர் திரு. ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூல் உருவாக்கத்தின் போது உதவிய கல்வெட்டியல் துறையைச் சார்ந்த முனைவர் மா.பவானி, முனைவர் ஆ.துளசேந்திரன், திரு. எம்.ராஜேஷ், திருமதி சு.செந்தமிழ்ச்செல்வி, ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள் திரு.வி.ப.யதீஸ்குமார், திரு.க.வெங்கடாசலம், திரு. சி.செல்வகுமார் ஆகியோருக்கும் எனது நன்றி.

எனது பெற்றோர் திருவாளர் மூ. நடராசன், திருமதி ந.பங்காரு ஆகியோரின் அன்பும் ஆதரவும் எனது துணைவியார் திருமதி அ.கல்பனா தேவி மற்றும் குழந்தைகள் செல்வி அ.காயத்ரி, செல்வி அ. சுகி நந்தினி ஆகியோரின் பொறுமையும் இந்நூலைச் செம்மைச் செய்ய என்னால் இயன்றது. அவர்களை இவ்வேளையில் நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

இந்நூல் அச்சாக்கத்திற்காக அனைத்து உதவிகளையும் செய்துகொடுத்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர்(பொ) முனைவர் ஆறு.இராமநாதன் அவர்களுக்கும். அச்சாக்கத்தின் போது உடனிருந்து உதவி நன்முறையில் பதிப்பித்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறைப் பணியாளர்கள் அனைவருக்கும் எனது நன்றி.

ந. அதியமான்
இணைப் பேராசிரியர்
நீரகழாய்வு மையம்

# பொருளடக்கம்

# சொற்குறுக்கங்கள்

| | |
|---|---|
| *AI* | *Ancient India* |
| *ARE* | *Annual Reports on Epigraphy* |
| *EI* | *Epigraphica Indica* |
| *IA* | *Indian Archaeology - A Review* |
| *IPS* | *Inscriptions of Pudukkottai State* |
| *SII* | *South Indian Inscriptions* |
| *TDI* | *Tirupati Devasthanam Inscriptions* |
| *TL* | *Tamil Lexicon* |

# 1. முன்னுரை

இந்திய நாகரிகத்தின் தொட்டில் எனக் கருதப்படும் சிந்து சமவெளி நாகரிகம் முதல் இன்றுவரை சமுதாயத்தில் சங்கு முக்கியப் பங்கு வகிக்கிறது. உருவ வேறுபாடுகள் பலவற்றைக் கொண்ட இவற்றுள் வெண்ணிறச் சங்கு முக்கியத்துவம் வாய்ந்தது. இவ்வெண்ணிறச் சங்குகள் இந்தியக் கடற்பகுதிகளைத் தவிர வேறெங்கும் கிடைக்காதவை. ஒலியெழுப்பும் கருவி, அணிகலன்கள், அடுக்களைப் பாத்திரங்கள், விளையாட்டுப் பொருட்கள் ஆகியன செய்ய இவை பயன்படுகின்றன. எனவே இந்தியச் சமூக, பண்பாட்டுச் சூழலில் முக்கியத்துவம் பெற்று விளங்கும் இச்சங்கு குறித்துப் பன்முக நோக்கில் ஆய்வு செய்வதே இந்நூலின் நோக்கமாகும். சமயம் மற்றும் பண்பாட்டில் சங்கின் முக்கியத்துவம், அணிகலன்கள் செய்யும் விதம் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் இந்நூலில் குறிப்பிடத்தக்க கூறுகளாகும்.

20ஆம் நூற்றாண்டின் தொடக்க நிலையில் தமிழகக் கடற்பகுதியில் மீன் வளத்துறை கண்காணிப்பாளராய் இருந்த ஜேம்ஸ் ஹார்னல் என்பார் சங்கு பற்றிய ஆய்வை முதன் முதலில் தொடங்கியவராவார். இவர் தமது ஆய்வு முடிவுகளைப் *புனிதச் சங்கு* (Sacred Chank) என்னும் நூலில் அளித்துள்ளார்[1]. இந்நூல் சங்கு வாழும் இடங்கள், சங்கு வளம், சங்கெடுக்கும் முறை, அவற்றின் பொருளாதார நிலை குறித்த செய்திகளைத் தருகிறது. இதற்குப் பின்னர் சங்கு குறித்த ஆய்வுகள் சிலவே நிகழ்த்தப்பெற்றன. 1970க்குப் பிறகு உயிரியல் நோக்கிலான ஆய்வுகள் மைய அரசு மீன்வளத் துறையினரால் நிகழ்த்தப் பெற்று அவற்றின் முடிவுகள் கட்டுரைகளாக வெளியிடப்பட்டுள்ளன. சமூக நோக்கிலான

---

[1] Hornell 1914

ஆய்வுகள் வானமாமலை[1], ஸ்ரீநிவாசன்[2] ஆகியோரால் சிறு அளவில் மேற்கொள்ளப்பட்டன. சுந்தரராஜ் மற்றும் கிருஷ்ணதாஸ்[3] ஆகியோரால் வெளியிடப்பட்ட *சங்குவளம்* என்னும் நூலும், கிருஷ்ணமூர்த்தி[4] என்பாரால் வெளியிடப் பட்ட *தமிழர் பண்பாட்டில் சங்கு* என்னும் நூலும் பல செய்திகளைக் கொண்டிருப்பினும் அவை ஆய்வு நூல்களாக அமையவில்லை. பரிமளா அவர்களின் சங்கு பற்றிய நூல் அறிவியல் நோக்கிலும் சமயப் பண்பாட்டு நோக்கிலும் அமைந்துள்ளது[5]. மருத்துவ நோக்கில் சங்கு பற்றிய ஆய்வுகளும் செய்யப் பெற்றுள்ளன[6].

பரந்த அளவில் ஆய்வு செய்த ஹார்னலின் நூல் ஆங்கிலத்தில் உள்ளதாலும், அந்நூல் வெளியிடப்பட்டு ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு முடியும் தறுவாயில் உள்ளதாலும் முன் குறித்த அறிஞர்களின் ஆய்வை மேம்படுத்தி பன்முக நோக்கில் வெண்சங்கு பற்றிய ஆய்வை மேற்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது.

சமூக, பண்பாட்டு முக்கியத்துவம் பெற்ற சங்கு பற்றிய இந்நூல் கீழ்க்காணும் நோக்கங்களைக் கொண்டது. அவை பின்வருமாறு:

1. சங்கு பற்றிய உயிரியல் கோட்பாடுகள், சங்கு கிடைக்கும் இடங்கள், சங்கெடுக்கும் முறை, சங்கெடுத்தலின் வணிகப் பொருளாதார வரலாறு அகியவற்றைக் கண்டறிதல்
2. சங்கின் பெயர்கள் மற்றும் சங்கு குறித்த தொன்மங்களைச் சமூகப் பண்பாட்டின் அடிப்படையிலும் அறிவியல் நோக்கிலும் ஆய்வு செய்தல்

---

[1] வானமாமலை 1969

[2] ஸ்ரீநிவாசன் 1984

[3] சுந்தரராஜ் மற்றும் கிருஷ்ணதாஸ் 1989

[4] கிருஷ்ணமூர்த்தி 1999

[5] பரிமளா 2004

[6] Sadique 1985, பிரேமா 2001

3. பண்டைக் காலம் முதல் பயன்படுத்தப்பட்டுவரும் சங்கு அணிகலன்கள், பிற பொருள்கள், அவை செய்யப் பெறும் தொழில் நுட்பம் ஆகியன குறித்து ஆய்வு செய்தல்
4. சமயம், பண்பாடு ஆகியவற்றில் சங்கின் முக்கியத்துவம் குறித்தச் செய்திகளை வரலாற்று நோக்கில் ஆய்வு செய்தல்
5. மருத்துவத்தில் சங்கின் முக்கியத்துவம் குறித்த செய்திகளைத் தொகுத்தல்
6. சங்கின் பிற பயன்களைப் பற்றி ஆய்வு செய்தல்

இந்நூல் சங்கு பற்றிய பன்முக நோக்கிலான கருத்துக்களை ஒருங்கிணைப்பதால், அறிஞர்கள் மட்டத்தில் மட்டுமல்லாது, படிப்போர் அனைவரும் சங்கு பற்றி எளிதாக அறிய உதவியாக அமைகிறது.

இவ்வாய்விற்குக் கால எல்லையாகச் சிந்து சமவெளி நாகரிகம் முதல் இன்றுவரை அமைகிறது. இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் இவ்வாய்வின் நில எல்லையாக கொள்ளப்படுகிறது. மேலும் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றுகளாக அகழாய்வு அறிக்கைகள், கல்வெட்டுகள், இலக்கியங்கள் ஆகியன எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், *மணிமேகலை, சிலப்பதிகாரம்* ஆகியன சங்க காலம் மற்றும் அதற்குப் பிந்தைய காலங்களுக்கான இலக்கியச் சான்றுகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இடைக்கால இலக்கியங்களில் *நந்திக் கலம்பகம், சீவக சிந்தாமணி, பெருங்கதை, பாண்டிக் கோவை, கம்பராமாயணம், கலிங்கத்துப்பரணி, தக்கயாகப் பரணி* முதலியனவும் உரிச்சொல் பனுவல்களும் (நிகண்டுகள்) பயன்படுத்தப் பட்டுள்ளன. அக்கால கட்டங்களில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளும் சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன. தமிழகமல்லாது இந்தியாவில் பிற பகுதிகளிலும் நிகழ்த்தப் பெற்ற அகழாய்வு முடிவுகளும் இவ்வாய்விற்குச் சான்றுகளாகப் பயன்பட்டுள்ளன. இதற்கு இந்தியத் தொல்லியல் துறையின் ஆண்டறிக்கைகளும், அகழாய்வு அறிக்கைகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றுகளாகச் சங்கு பொறித்த நாணயங்கள், சங்கு பற்றிய உயிரியல் கருத்துக்கள்,

மருத்துவப் பயன்கள் ஆகியன பற்றி எழுதப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளுடன் சங்கு பற்றி வெளிவந்த ஏனைய ஆய்வுக் கட்டுரைகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேலும் சங்கு பற்றிய நாட்டுப்புறப் பாடல்கள், பழமொழிகள் ஆகியனவும் சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

சங்கு அணிகலன்கள் செய்யும் தொழில்நுட்பம் குறித்த கள ஆய்வில் கைவினைக் கலைஞர்கள், வணிகர் ஆகியோரிடம் கண்ட நேர்காணலில் திரட்டிய தரவுகளும் இவ்வாய்விற்குச் சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

இந்நூல் பத்து இயல்களாகப் பகுக்கப்பட்டு சங்கின் அறிவியற் பெயர், பிற சங்கு வகைகள், இனப்பெருக்க முறை, கிடைக்கும் இடங்கள், சங்கெடுக்கும் முறை, சமூக வணிக வரலாறு ஆகிய செய்திகள் தரப்பட்டுள்ளன. இலக்கியங்களில் காணப்படும் சங்கின் பெயர்கள், சங்கின் வகைகள், சங்கு பற்றிய தொன்மக் கருத்துக்கள், சிந்து சமவெளி நாகரிகம் தொட்டு இதுவரை பண்பாட்டில் பயன்படுத்தி வரும் சங்கு அணிகள் குறித்த விளக்கங்கள் போன்றன இந்நூலில் தரப்பட்டுள்ளன. மேலும் பண்டைக் காலம் தொட்டு, இந்தியாவில் செய்யப்பட்டுவரும் சங்கு அணிகலன்களின் தொழில் நுட்பம் குறித்தும் தொழில் புரிவோரைப் பற்றிய செய்திள் குறித்தும் விரிவாக விளக்குகிறது.

சங்கு பெற்ற சமய முக்கியத்துவமும், அதன் வரலாறும் குறிப்பிடப்படுவதோடல்லாமல், தமிழ் மற்றும் பிற பண்பாட்டில் இவற்றின் முக்கியத்துவம் குறித்தும், சங்கொலி பற்றிய விவரங்கள், சங்கின் மருத்துவ குணங்கள் பற்றிய செய்திகளும் தரப்பட்டுள்ளன. பண்பாட்டில் சங்கின் பிற பயன்பாடுகளைப் பற்றிய செய்திகளையும் இந்நூல் ஆய்வு செய்கிறது. இறுதியில் ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்நூலில் தேவையான இடங்களில் நிழற்படங்களும் இறுதியில் அட்டவணைகளும், பின்னிணைப்புகளும் அளிக்கப்பட்டுள்ளன.

# 2. சங்கு

சங்கஸ்பைரம் (*Xancus pyrum*) அல்லது டர்பினெல்லா பைரம் (*Turbinella pyrum*, Linnaeus) என்பது சங்கின் அறிவியற் பெயராகும். நத்தையைப்போன்று சங்கு ஒற்றைச்சிப்பியை (Univalve) உடையது. மெல்லுடலித் (Molluscus) தொகுதியின் வயிற்றுக்காலி (Gastropod) வகுப்பைச் சார்ந்தது. இதன் மெல்லிய உடற்பகுதி திருகலான ஓட்டுக்குள் இருக்கும். இவ்வோடே சங்கு ஆகும். ஓரளவிற்கு ஒத்த உருவமும், பண்புகளும் உடைய இவ்வுயிரினம் அறிவியல் முறைப்படி ஐம்பெரும் வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை டர்பினெல்லா பைரம் (*Turbinella pyrum*, Linnaeus), சிக்கரியஸ் ராமோசஸ் (*Chicoreus ramosus*, Linnaeus), லாம்பிஸ் ட்ரன்கேட்டா செபே (*Lambis truncata sebae*, Roding), ஃபாஸியோலாரியா ட்ரபீஸியம் (*Fasciolaria trapezium*, Linnaeus) ப்யூஜிலினா பூசேஃபலா (*Pugilina buchephala*, Lamarck) என்பனவாகும். இவற்றுள் சங்கஸ் பைரம் வகையைச் சார்ந்த சங்கு தூய வெண்ணிறம் உடையதாகும்.

உலகில் இந்தியக் கடற்பகுதியின்றி வேறெங்கும் கிட்டாத சங்கஸ் பைரம் என்னும் வெண்சங்குகளைப் பற்றிய உருவ அமைப்பு, அவற்றின் வளர்ச்சி ஆகியவற்றை ஹார்னல் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்[1]. முட்டை வடிவுடைய இச்சங்குகளின் மேற்புரிகள் சமச்சீராகவும் மேல் பகுதியில் புடைப்புக்கள் அற்றும் காணப்படும். முதிர்ந்த சங்குகள் சராசரியாக 15 செ.மீ.லிருந்து 20 செ.மீ. வரை நீளமும் 10 செ.மீ. லிருந்து 15 செ.மீ. வரை அகலமும் உடையதாக இருக்கும் (படம் 1அ,ஆ). ஓடுசூழ் (periostracum) பகுதியின் அடியூடாக உள்ள வெண்மையான சங்கின் பகுதி

---

[1] Hornell 1951:24-26

கடினமாகவும் கட்டுறுதி வாய்ந்ததாகவும் இருக்கும். ஒருவழியமைப்புடன் கூடிய இதன் திண்ணிய கட்டமைப்பில் மொத்தமான திருகலாய் அமைந்த சுவர் சுருளச்சுடன் (columella) வலுவேற்றிய பொருந்து வாய்க்காலால் (suture) பின்னப்பட்டிருக்கும். வாய்ப்பகுதி அகலமாக இருக்கும். அதன் உட்பகுதி சுருண்ட ஆழமான தூம்புக்குழாய் (siphon) போன்று காணப்படும். இப்பகுதியில்தான் உயிருள்ள பன்மடி மெல்லிழையம் (operculum) சுற்றப்பட்டிருக்கும்.



அகப்பக்கத் தோற்றம்



குறுக்கு வெட்டுத் தோற்றம்

படம் 1அ. சங்கஸ் ஃபைரம் எனப்படும் வெண்சங்கு
(நன்றி **Kenoyer 1985**)

மற்ற வயிற்றுக்காலிகள் போலன்றி டர்பினெல்லா பைரம் சுருளச்சில் மூன்று அல்லது நான்கு முகடுகள் (ridges) காணப்படும். நீரோட்டமுள்ள குறைந்த ஆழமுள்ள இடங்களில் வாழும் சங்குகளின் இம்மடிப்புகள் உறுதியாக இருக்கும். சங்கின் மேல்பகுதி வழுவழுப்பாக இருக்கும். கடல்தரையின் நிறத்தை ஒத்த மண் ஓடுகளின் மேல் படிவதால் அதன் வெண்மைநிறம் தெரியாமல் மறைந்திருக்கும். இவற்றில் ஆண்பெண் வேறுபாடுகளைக் கண்டுபிடிப்பது எளிதன்று.



ஃபாசியோலோரியா ட்ரபீசியம்



லாம்பீஸ் ட்ரங்காடா சபே



சிக்கோரஸ் ரமோஸஸ்

படம் 1ஆ. வெண்சங்கு போன்ற பிற சங்குகளின் குறுக்கு வெட்டுத்தோற்றம் (நன்றி **Kenoyer 1985**)

*இவற்றின் இனப்பெருக்கம் ஜனவரியில் தொடங்கி மார்ச் மாத இடைக்காலம் வரை நடைபெறும். இவற்றின் முட்டைப்புழு வளர்ச்சி ஏனைய வயிற்றுக்காலி வகுப்பைப் போலவே இருக்கும். கரு உயிரணுக்கள் பல அறை கொண்ட தோல் போன்ற உறையினால் வைக்கப்பட்டிருக்கும் (படம் 2).*



படம் 2. சங்குப்பூ எனப்படும் முட்டையுறை (நன்றி **Hornell 1914**)

இவ்வுறையைச் சங்குக் குளிப்பார் சங்குப்பூ எனவும் 'எளநாடு' எனவும் அழைப்பர்[1]. இவ்வுறையில் நீண்டு, புரியுடன் வளைந்த உருளைபோல் 25 முதல் 30வரை சூழ் வளையங்கள் காணப்படும். ஒவ்வொரு வளையமும் ஓர் அறையைக் கொண்டதாகும். மொத்தத்தில் இவ்வமைப்பு செம்மறியாட்டுக் கிடாயின் கொம்பை ஒத்துக் காணப்படும். அடியில் தட்டை விளிம்புடன் கூடிய சங்குப்பூவை பெண் சங்கு செங்குத்தாகத் தரையில் ஊன்றி வைக்கும்போது இது வெளிர் மஞ்சள் நிறத்தில் காணப்படும். பின்னர் இதன் மேல் கடற்பாசிகள் படிவதால் இதன் நிறம் மங்கி மாறிவிடும். இது 17 செ.மீ. முதல் 25 செ.மீ. வரை உயரம் கொண்டதாக இருக்கும். இச்சங்குப்பூவின் கழுத்துப்பகுதி சிறுத்துக் காணப்படும். இதனுள் கடல் நீர் உள்ளே சென்று வருவதற்கு ஏற்றவாறு ஒவ்வொரு சூழ் வளையத்தின் கீழும் பிறை போன்ற சிறு துளை இருக்கும். இத்தகைய சூல் வளையங்களின் தடுப்புச் சுவர்கள் மெல்லியதாகக் காணப்படும். கிளியோனா (Cliona) எனும் கடற்பாசியான ஒட்டுண்ணி வகையினால் ஏற்படும் ஆபத்தினைத் தடுக்கும் வகையில் சங்குப்பூவின் வெளிச்சுவர் காணப்படும். ஒவ்வொரு சூல் வளையத்தின் உட்புறமும் நிறமற்ற புரதம் நிரம்பி இருக்கும். இதனுள் முட்டைக் கருவுயிர்கள் பம்பரவடிவமான புரியுடன் கூடிய சங்குகளாய் வேகமாய் வளர்ந்து விடும். இதுகாறும் கண்டவை சங்கின் முதற்பருவமாகும். இச்சங்குகள் 7மி.மீ. நீளத்திற்கு வளரும்போது இவற்றின் சுற்றுப்புரிகள் இரண்டரை முதல் மூன்று சுற்றுப் புரிகள் வரை நன்கு உருவாயிருக்கும். ஆரம்பக் காலக்கட்டங்களில் இக்கருமுட்டைகளுக்கு இடையே பிணக்குகள் ஏற்பட்டு வலிமையான இளஞ்சங்குகள் எளிமையானவையைக் கொன்று வளரும். இதனால் ஒரு சூழ் வளையத்தில் ஐந்து அல்லது ஆறு சங்குகளே உயிருடன் இருக்கும். இம்முதற் பருவத்திலிருந்து அடுத்தகட்டத்தின் வளர்ச்சி மிக வேகமாக இருக்கும். இதன் ஒட்டு வளர்ச்சியைச்

[1] முருகானந்தம் 1990:49

சார்ந்து வாய்ப்பகுதியும் அகலமாக விரியும். இந்நிலையில் இச்சங்குகளின் நிறம் சற்று வேறுபட்டு முழுவளர்ச்சி அடைந்த சங்கைப்போல் காட்சியளிக்கும். இவை 12 செ.மீ. அளவுவரை வளர்ந்தபின்னர் சூல் வளையத்தில் உள்ள புரதச்சத்து தீர்ந்துவிடும்.

எனவே இவ்விளஞ்சங்குகள் சூழ்வளையத்திலுள்ள அறைச் சவ்வுகளைத் தின்று ஒன்றன்பின் ஒன்றாக 200 லிருந்து 250 எண்ணிக்கையில் வெளிவருகின்றன. பின்னர் இவை அனைத்தும் ஏதேனும் ஓர் இடத்தை தேர்ந்தெடுத்து அங்குக் கூட்டமாக வாழ்கின்றன. இங்ஙனம் இவை முழுவளர்ச்சியடையப் பல ஆண்டுகள் ஆகும்.

சங்கின் மெல்லுடலுக்கு அவற்றின் ஓடு இயற்கையிலேயே தற்காப்பு அளிப்பதாகும். மேலும் மீன்களால் ஆபத்து ஏற்படாவண்ணம் இதன் கடினமான ஓடு பாதுகாக்கிறது. இவற்றிற்குத் தரையில் புதைந்து கொள்ளும் ஆற்றல் சற்றுக் காணப்படுவதால் மீன்கள் தாக்காவண்ணம் காப்பாற்றப்படுகின்றன. சங்கு ஓடுகள் உருவாகும் விதம் குறித்த ஆய்வுகள் ஏற்கெனவே நிகழ்ந்துள்ளன. இவ்வாய்வின் விவரங்கள் *பார் புகழும் பால் சங்கு* என்னும் நூலில் தரப்பட்டுள்ளன[1]. இச்சங்குகள் முதிர்வடையும் போது இவ்வோடுகளின் எதிர்ப்புத்தன்மை குறைந்து கிளியோனா என்னும் ஒருவகைப் புழுக்கள் ஓடுகளில் ஒட்டுகின்றன. இவை பல ஓட்டில் துளைகளை ஏற்படுத்தித் தேன்கூடு போன்ற தோற்றத்தை உருவாக்குகின்றன. பெரும்பாலான சங்குகளில் புரிகள் (spirals) பெரும்பாலும் வலமிருந்து இடமாக இருக்கும். இவை இடம்புரிச் சங்கு என அழைக்கப்படுகின்றன. அரிதாக இடமிருந்து வலமாகவும் காணப்படும். இவை வலம்புரிச் சங்கு என அழைக்கப் படுகின்றன.

---

1 பரிமளா 2004

## சங்கு கிடைக்கும் கடற்பகுதிகள்

சங்கு கிடைக்கும் பகுதிகளை ஹார்னல், நாயர் மற்றும் மகாதேவன் ஆகியோர் விரிவாக ஆய்வு செய்து நூலாக வெளியிட்டுள்ளனர்[1]. இவர்கள் ஆய்வில் இந்திய, இலங்கை கடற்பகுதியில் சங்கு கிடைக்கும் இடங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

கூடிவாழும் இயல்புடைய சங்குகள் குறிப்பிட்ட சூழல் கொண்ட கடற்பகுதியிலேயே வாழ்கின்றன. வழுவழுப்பான மென்மணற்பகுதியிலும், வண்டல் கலந்த மணற்பகுதியிலும், நெருக்கம் குறைந்த பவளப்பாறைகள் உள்ள பகுதியிலும் வாழும் இயல்புடையன. மேலும் கடற்பாறைத் துகள்களால் உருவான மணற்பகுதியிலும் சிறுசிறு பள்ளத்தாக்குகள் போன்ற பகுதியிலும் பச்சைக் கடற்பாசிகள் நிறைந்த பகுதியிலும் இவை வாழும் இயல்புடையன.

6,667 கிமீ நீளம் கடற்கரை கொண்ட இந்தியாவில் கட்ச் வளைகுடா கடற் பகுதியில் 130 கிமீ நீளகடற்பகுதியிலும்,- கேரளாவில் 65 கிமீ நீளமும், தமிழகத்தில் 720 கிமீ நீளமுள்ள கடற்பகுதியிலும் சங்குகள் கிடைக்கின்றன. இவை கடற்கரையிலிருந்து 16 கிமீ தூரம் வரை மன்னார் வளைகுடாவிலும், 12 கிமீ தூரம் வரை பாக் விரிகுடாவிலும், 10 கிமீ தூரம் வரை சோழமண்டலக் கடற்பகுதியிலும் வாழ்கின்றன. ஏறத்தாழ 10,000 ச.கி.மீ கடற்பரப்பில் சங்குகள் வசிப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது (படம் 3).

தமிழ்நாட்டில் சோழமண்டலக் கடற்கரையில் மன்னார் வளைகுடாவில் 10-20மீ ஆழமுள்ள மணற்பாங்கான கடற்பகுதியும், பாக் விரிகுடாவில் 12மீ ஆழம்வரை உள்ள மணற் பகுதியும் சங்குகள் வாழ்வதற்கு ஏற்ற இடங்களாகத் திகழ்கின்றன. அடர்த்தி குறைந்த வெண்பவளப்பாறை நிறைந்த கன்னியாகுமரி, திருவனந்தபுரம் கடற்பகுதியில்

---

[1] Hornell 1914, Nayar and Mahadevan 1974

10-20மீ ஆழத்தில் இவை வாழ்கின்றன. இலங்கைப் பகுதியிலும் 20மீ ஆழம்வரை சங்குகள் கிடைக்கின்றன. இந்நாட்டின் யாழ்ப்பாணக் கழிமுகப் பகுதிகளில் இறந்த சங்குகள் அதிக அளவில் கிடைக்கின்றன.




படம் 3. இந்தியக்கடல் பகுதிகளில் சங்கு கிடைக்கும் இடங்கள்

இப்புள்ளி விவரத்தின் அடிப்படையில் இந்தியாவில் சங்குகள் கிழக்குக் கடற் பகுதியிலேயே மிகுதியாகக் கிடைக்கின்றன எனலாம். மேலும் கன்னியாகுமரியிலிருந்து சென்னைக் கடற்பகுதிவரை ஏராளமாகவும், கோதாவரி நதிமுகத்துவாரம் வரை குறைந்த அளவிலும் வாழ்கின்றன.

இப்பகுதிக்கு வடக்கே சங்குகள் வாழ்வதில்லை எனக்கூறலாம். மேற்குக் கடற்பகுதியில் கட்ச் வளைகுடாவில் இவை அதிகம் காணப்பட்டாலும் தெற்குப் பகுதியில் கேரளக் கடற்பகுதிவரை இவை வாழ்வதில்லை. கிழக்குக் கடற்பகுதி போலல்லாமல் கேரளப் பகுதியிலும் ஓரளவிற்கே சங்குகள் கிடைக்கின்றன. இவை தவிர அந்தமான் நிக்கோபர் கடற்பகுதியிலும் இவை குறைந்த அளவில்கிடைக்கின்றன. சிந்து நதி கடலில் கலக்கும் மக்ரான் கடற்பகுதிகளிலும் குறைந்த அளவில் சங்குகள் கிடைக்கின்றன[1]. தற்சமயம் சங்குகள் வாழும் இடங்களில் பண்டைக்காலத்திலும் சங்குகள் வாழ்ந்தனவா என்பதற்கான சான்றுகள் இல்லை.

ஆனால் பண்டைக் காலங்களில் சிந்து சமவெளி மக்களுக்குக் கிடைத்த சங்குகள் எங்கிருந்து பெறப்பட்டன என்ற ஆய்வு அறிஞர்களால் மேற்கொள்ளப்பட்டது. இவை குஜராத் கடற்பகுதியில் பெறப்பட்டன எனக் கருதப்படுகிறது. பண்டைய காலங்களில் பாகிஸ்தானிலுள்ள மக்ரான் பகுதில் அதிக அளவில் கிடைத்து, பின்னர் ஏற்பட்ட நிலவியல் மாற்றங்களால் தற்பொழுது குறைந்த எண்ணிக்கையிலான சங்குகள் கிடைக்கின்றனவா என்பதான ஆய்வுகளும் செய்யப்பட்டன. கடந்த 5000 ஆண்டுகளில் ஏற்பட்ட கடல்மட்ட வேறுபாடுகளின் அறிவியல் ஆய்வுகளைக் கருத்தில் கொண்டு நோக்கும் போது சங்கு வாழும் பகுதிகளில் எவ்விதப் பெருமாற்றங்களும் ஏற்படவில்லை எனவும், தற்பொழுது வாழும் இடங்களிலேயே அவை உயிர் வாழ்ந்திருக்க வேண்டும் எனவும் தெரியவருகிறது. சிந்து சமவெளி மக்கள் சங்கு மற்றும் பிற சிப்பி வகைகளைக் கட்ச் வளைகுடா மற்றும் கராச்சிச் கடற்பகுதிகளிலிருந்தும் சேகரித்திருக்கலாம். இவை சிந்து சமவெளி சங்குகளைப் பற்றி ஆய்வு செய்த கெனாயர் என்பாரின் கருத்துரைகளாகும்[2]. எனவே சங்கு கிடைக்கும் இடங்கள்

---

[1] Kenoyar 1984:51

[2] Kenoyar 1984:49-63

பண்டைக் காலத்திலிருந்து மாற்றமேதும் இல்லாமல் உள்ளது எனலாம்.

இந்தியக் கடற்பகுதியில் கிடைக்கும் சங்குகளோடு ஒத்தவை கரிபியன் கடற்பகுதியில் கிடைக்கின்றன. ஆயினும் அவற்றின் புரிகளின் மேற்பகுதி சற்றே புடைப்புகளுடன் காணப்படுகின்றன[1]. மேலும் கடல் பகுதிக்குத் தெற்குப் பகுதியான பிரேசில் நாட்டுக் கடலோரப் பகுதிகளிலும் இவை கிடைக்கின்றன[2].

வளரும் சூழ்நிலையான கடலின் ஆழம், நீரின் வேதியல் தன்மை, வண்டல் கலந்த நீர், கடல்தரைப்பகுதி ஆகியவற்றினால் இவற்றிடையே உருவ வேறுபாடு காணப்படுகிறது. இவ்வேறுபாடுகளின் அடிப்படையைக் கணக்கில் கொண்டு ஹார்னல் வெண்சங்கு வகையினை ஐந்து சிறு பிரிவுகளாகப் பிரித்துள்ளார்[3]. அவை 1. அப்டியூசா (*obtusa*) 2. அக்யூடா (*acuta*) 3. குளோபோசா (*globosa*) 4. கொமொரினெசிஸ் (*comorenesis*) 5. பூயூசஸ் (*fusus*) ஆகியனவாகும் (படம் 4).

அப்டியூசா

தமிழகம் மற்றும் இலங்கைக் கடற்பகுதியில் ஏராளமாகக் கிடைக்கும் சங்குகளில் பெரும்பாலானவை அப்டியூசா வகையைச் சேர்ந்தவையாகும். இவை, குறிப்பாக பாக் விரிகுடாவில் கோடியக்கரைப்பகுதியிலிருந்து சென்னை கடற்பகுதிவரை ஏராளமாகக் கிடைக்கின்றன. இவற்றின் புரிகள் (spire) குறுகலான தோற்றத்திலிருந்து நீளமான தோற்றம் வரை காணப்படுகின்றன. அப்டியூசா வகை சங்குகள் ஆதாம்பாலம், இராமேஸ்வரம், மன்னார் தீவுகளைச் சுற்றியுள்ள பாறைத் திட்டுக்களின் வடக்குப்பகுதியிலும் கிடைக்கின்றன.

---

1 Sabelli 1979:126

2 பரிமளா 1994:24

3 Hornell 1914



படம் 4. அப்டியூசா, அக்யூடா வகைச் சங்குகள்

**அக்யூடா**

அக்யூடா வகை சங்குகள் நீண்ட உயரம் கொண்டவை. குறுகிய சமச்சீரான புரிகள் கொண்டவை. இவ்வகைச் சங்குகள் கட்ச் வளைகுடா, தூத்துக்குடி, கீழக்கரை, இராமேஸ்வரம் ஆகிய இடங்களில் கிடைக்கின்றன. இராமேஸ்வரத்திற்குத் தென்பகுதியான மன்னார் வளைகுடாப் பகுதியிலும் வாழ்கின்றன. இவற்றின் உருவ அளவு இவை கிடைக்கும் இடத்திற்கிடம் வேறுபட்டிருக்கும். அக்யூடா வகைச் சங்கு *ஜாதி* (Jadhi) எனவும் அப்டியூசா வகைச் சங்கு *பட்டி* எனவும் சங்கு வணிகர்களால் அழைக்கப்படுகின்றன. கீழக்கரை, தூத்துக்குடியில் கிடைக்கும் *ஜாதி* வகைச் சங்குகள் வளையல்கள் செய்ய மிகவும் பயனுடையன.

அக்யூடா வகைச் சங்குகள் புரியில் அப்டியூசா போன்றும் வழுவழுப்பில் அக்யூடா போன்றும், தோற்றம் கொண்ட இருபிறவி எனப்படும் சங்குகள் இராமேஸ்வரத்தில் இருந்து மண்டபம் வரையுள்ள கடற்பகுதியில் வாழ்கின்றன.

## குளோரபோசா, கொமொரினெசிஸ், பூயூசஸ்

குளோரபோசா, கொமொரினெசிஸ் வகைச் சங்குகள் கன்னியாகுமரியிலிருந்து கிழக்குக்கடற்கரையின் 20 கி.மீ. அளவிலும் மேற்குக் கரைப்பகுதியில் 64 கி.மீ. நீள அளவிலும் கிடைக்கின்றன. குளோரபோசா ஆழமான பகுதியிலும் கொமொரினெசிஸ் ஆழம் குறைந்த அலை நிறைந்த பகுதியிலும் வாழ்கின்றன. பூயூசஸ் வகைச் சங்குகள் அந்தமான் தீவுப் பகுதியில் வசிக்கின்றன. கட்ச் வளைகுடாப் பகுதியில் வளரும் சங்குகள் இராமேஸ்வரம் பகுதியின் சங்கின் வகையை ஒத்தவை.

## சங்கு குளிக்கும் கடற்பகுதிகள்

இந்திய கடற்பகுதிகளில் சங்கெடுக்கும் பகுதிகளைக் கரைசேரும் இடம், நிர்வாகக் காரணம் ஆகியவற்றின் அடிப்படையில் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. தமிழகக் கடற்பகுதி:

அ. திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டக் கடற்பகுதி
ஆ. இராமநாதபுரம் மாவட்டக் கடற்பகுதி
இ. சிவகங்கை மாவட்டக் கடற்பகுதி
ஈ. தஞ்சாவூர், நாகபட்டினம் மாவட்டக் கடற்பகுதி
உ. கடலூர், செங்கல்பட்டு மாவட்டக் கடற்பகுதி
ஊ. கன்னியாகுமரி மாவட்டக் கடற்பகுதி

என ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஆங்கிலேயர் காலத்திலிருந்தே இப்பகுதிகளில் கிடைக்கும் சங்குகள் நிர்வாக முறையில் பிரிக்கப்பட்டிருந்தன.

2. கேரளக் கடற்பகுதி : திருவனந்தபுரம் சங்கு குளிப்புப் பகுதி எனவும்,

3. குஜராத் கடற்பகுதி : கட்ச் வளைகுடாப் பகுதி எனவும் பிரிக்கப்பட்டுள்ளது.

சங்கெடுக்கும் பகுதிகள் அந்தந்த மாநில அரசின் எல்லையின் கீழ் இருந்தாலும் சங்கெடுக்கும் தொழிலின் நிர்வாகம் இடத்திற்கிடம் வேறுபடுகிறது. உதாரணமாகத் தமிழகத்தில் திருநெல்வேலி கடற்பகுதியில் எடுக்கப்படும் சங்குகளைத் தமிழக அரசு விலைக்குப் பெற்றுக்கொள்கிறது. பிற பகுதிகளில் எடுக்கும் சங்குகளை வாங்கும் உரிமை தனியாருக்கு ஏலம் விடப்படுகிறது. சங்கு அதிக அளவில் காணப்படும் தமிழகக் கடற்பகுதியைப்பற்றி விரிவாக இங்கு தரப்படுகிறது.

### திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டக் கடற்பகுதி

தூத்துக்குடியை மையமாகக் கொண்டு திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டக் கடற்பகுதியில் கூடப்புளி என்னும் ஊரிலிருந்து கன்னிராசபுரம் என்னும் ஊர் வரையுள்ள சுமார் 136 கிமீ நீளமுள்ள கடற்பகுதியில் சங்கெடுத்தல் நடைபெறுகிறது. இங்கு கிடைக்கும் சங்குகள் தமிழக அரசால் விலைக்கு வாங்கப்பட்டு மேற்கு வங்காளத்திற்கு அனுப்பப்படுகிறது[1]. இப்பகுதியில் சங்கு கரை சேரும் முக்கிய மையங்கள் இடிந்தகரை, உவரி, திருச்செந்தூர், காயல்பட்டினம், தூத்துக்குடி ஆகியனவாகும். வடகிழக்குப் பருவக்காற்று தொடங்கும் நவம்பர் மாத இடைக்காலத்தில் தொடங்கி மே மாதத்தில் தென்மேற்குப் பருவக்காற்று தொடங்கும் வரை இக்கடற்பகுதியில் சங்கெடுத்தல் நடைபெறுகிறது. ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 5,00,000 சங்குகள் இப்பகுதியில் பிடிக்கப்படுகின்றன.

### இராமநாதபுரம் மாவட்டக் கடற்பகுதி

மன்னார் வளைகுடாவில் உள்ள கன்னிராச புரத்திலிருந்து பாக் விரிகுடாவில் உள்ள காரங்காடு என்னும் ஊர் வரை அமைந்துள்ள 190 கிமீ நீளமுள்ள கடற்பகுதியில் சங்கெடுத்தல் நடைபெறுகிறது. இங்கு எடுக்கப்படும் சங்குகள் தனியாருக்கு ஏலம் விடப்படுகிறது. இங்குள்ள

---

[1] Nair and Mahadevan 1977:126

இடங்களில் சங்கெடுக்கும் காலம் இடத்திற்கிடம் வேறுபடுகிறது. மன்னார் வளைகுடாவில் கன்னிராசபுரத்தைத் தலைமையிடமாகக் கொண்டு டிசம்பர் முதல் மார்ச் வரையிலும், கீழக்கரை, பெரியப்பட்டினம், வேதாளை முதலிய பகுதிகளில் செப்டம்பர் முதல் டிசம்பர் வரையிலும், பாக் விரிகுடாவில் இராமேஸ்வரத்தீவுப் பகுதியில் மார்ச் முதல் ஜூன் வரையிலும், தேவிப்பட்டினம், திருப்பாலைக்குடி ஆகிய இடங்களில் ஜூன் முதல் செப்டம்பர் வரையிலும், இருமேனிப்பகுதியில் மே முதல் ஆகஸ்டு வரையிலும் சங்கெடுத்தல் நடைபெறுகிறது. இங்குச் சுமார் 3,00,000 சங்குகள் ஆண்டொன்றிற்கு எடுக்கப் படுகின்றன.

சிவகங்கை கடற்பகுதி

காரங்காட்டிலிருந்து வடக்கே சுந்தரபாண்டியன் பட்டினம் வரையுள்ள 30 கிமீ நீளமுள்ள இப்பகுதியில் ஏப்ரல் முதல் அக்டோபர் வரை சங்கெடுக்கப்படுகிறது. காரங்காடு முள்ளிமுனை, தொண்டி, பாசிப்பட்டினம், வட்டனம் ஆகிய இடங்களில் சங்குகள் கரைக்குக் கொண்டுவரப்படுகின்றன. இங்கு குறைந்த அளவே சங்குகள் கிடைக்கின்றன. இப்பகுதியில் சங்கெடுக்கும் உரிமை தனியாருக்கு ஏலம் விடப்படுகிறது.

தஞ்சாவூர், நாகப்பட்டினம் கடற்பகுதி.

கோடியக்கரையிலிருந்து புதுக்குடி வரையிலான கடற்பகுதி தவிர தஞ்சாவூர், நாகப்பட்டினம், திருவாரூர் மாவட்டக் கடற்பகுதியில் எடுக்கப்படும் சங்குகள் தனியாருக்கு ஏலம் விடப்படுகிறது. ஆண்டிற்கு ஏறத்தாழ 30,000 சங்குகள் இப்பகுதியில் கிடைக்கின்றன. ஆண்டில் அனைத்து நாட்களிலும் சங்குகள் கிடைக்கின்றன. சுமார் 20 இடங்களில் சங்குகள் கரை சேர்கின்றன. அவற்றில் மல்லிப்பட்டினம், சின்னமுனை, செந்தளை, பெரியதம்பிரான் பட்டினம், கோபாலபட்டினம், அதிராம்பட்டினம் சேதுபாவாசத்திரம் ஆகியன முக்கிய ஊர்களாகும்.

பரங்கிப்பேட்டைப் பகுதியில் கிடைக்கும் சங்குகள் அப்டியூசா என்னும் அறிவியல் பெயர் கொண்டவை. இவற்றை மீனவர்கள் 'பட்டி' எனவும், தொழிற்கூடங்களில் 'கர்பகி' எனவும் அழைக்கின்றனர். இதன் உருவ அமைப்பு தூத்துக்குடி, இராமநாதபுரம் கடல் பகுதியில் கிடைக்கும் சங்குகள் போலல்லாமல் நீளம் குறைந்து குட்டையாக இருப்பதால் வளையல்கள் அறுக்க ஏற்றவை அல்ல[1]. 1980 வரை பரங்கிப்பேட்டைப் பகுதியில் கிடைத்த சங்குகளை வணிகர்கள் விலைக்கு வாங்கி வங்காளத்திற்கு அனுப்பினர். அதற்குப் பின்னர் படகுகள் மற்றும் ஒவ்வொரு சங்கெடுப்போரும் ஆண்டுக் கட்டணமாக ஒரு குறிப்பிட்ட தொகையை அரசுக்கு செலுத்த வேண்டும். மேலும் எடுக்கப்படும் சங்குகளை அரசு விலைக்குப் பெற்று வங்காளத்திற்கு அனுப்புகிறது[2].

கடலூர், செங்கல்பட்டு கடற்பகுதி

தஞ்சாவூர், நாகப்பட்டினம் கடற்பகுதி போலவே இங்குப் பிடிக்கப்படும் சங்குகள் எண்ணிக்கையில் மிகக் குறைந்தன. ஆண்டொன்றிற்கு ஏறத்தாழ 15,000 சங்குகளே பிடிக்கப்படுகின்றன.

கன்னியாகுமரி கடற்பகுதி

கன்னியாகுமரியிலிருந்து துட்டூர் வரையிலான 65 கிமீ நீளமுள்ள கடற்பகுதியில் பிடிக்கப்படும் சங்குகள் எடுக்கும் உரிமை தனியாருக்கு ஏலம் விடப்படுகிறது. முட்டம், குளச்சல், தேங்காப்பட்டினம், எனயப்புதந்துறை, கொடிமுனை, இராமநாதன் துறை போன்றவை சங்கு கரைசேரும் முக்கிய இடங்களாகும். ஜனவரி தொடங்கி ஏப்ரல் வரை நடைபெறும் சங்கெடுத்தலில் ஆண்டுதோறும் ஏறத்தாழ 10,000 சங்குகள் பிடிக்கப்படுகின்றன.

---

[1] Sreenivasan 1991:85

[2] Sreenivasan 1991:86

திருவனந்தபுரம் சங்கு குளிப்புப் பகுதி

பூவார், விழிஞம், கோவளம், செரியத்துறை, வலியத்துறை, சங்குமுகம், வெளி, செறுமங்கரை ஆகிய ஊர்களை உள்ளடக்கிய 60 கிமீ நீளமுள்ள கடற்பகுதியில் டிசம்பர் முதல் ஏப்ரல் வரை ஏறத்தாழ 20,000 சங்குகள் பிடிக்கப்படுகின்றன. திருவனந்தபுரத்தில் சங்கு வாங்கும் உரிமையைக் கூட்டுறவு நிறுவனத்திற்கு அரசு குறைந்த ஆண்டு வாடகைக்கு அளித்துள்ளது[1]

கட்ச் வளைகுடாப்பகுதி

கட்ச் வளைகுடாப் பகுதியில் ஸச்ஹனா (Sachhana) முதல் ஒக்கா (Okha) வரை சுமார் 200 கிமீ நீளக் கடல் பகுதிகளில் சங்குகள் கிடைக்கின்றன. இவை ஆழம் குறைந்த வெண்பவளப் பாறைகள் நிறைந்த ஓதப்பகுதியில் (inter-tidal zone) 4-6மீ ஆழம் வரையுள்ள கடற்பகுதிகளில் கிடைக்கின்றன. ஓத ஏற்ற இறக்கம் இப்பகுதியில் 6மீக்கு மேலிருப்பதால் நீர்மட்டம் குறைந்த கீழ் ஓத நேரத்தில் சங்குகள் பிடிக்கப்படுகின்றன. கட்ச் வளைகுடாவில் சுமார் 26 கிராமப் புறக் கடற்பகுதியில் எடுக்கப்பட்டாலும் பேடி (Bedi), சிக்கா (Sikka), சலயா (Salaya), ஒக்கா (Okha), பைரோடன் தீவு (Pirotan Island), அரம்டா (Aramda), போசித்ரா (Poshitra) ஆகிய பகுதிகளில் விலைக்குப் பெறப்படுகின்றன[2]. இப்பகுதியில் கிடைக்கும் சங்குகள் அப்டியூசா வகையைச் சேர்ந்தவை. ஆண் சங்குகள் உயரமான உச்சிப் பகுதியையும், பெண் சங்குகள் குட்டையான உச்சிப் பகுதியையும் கொண்டவை. இப்பகுதியில் செப்டம்பர் மாதத்திலிருந்து மே மாதம் வரை சங்குகள் பெருமளவில் எடுக்கப்படுகின்றன. சிக்கா கடல் பகுதிகளில் மார்ச் முதல் ஜுன் வரையிலும் சங்குகள் கிடைக்கின்றன. இச்சங்குகள் குஜராத் அரசால் விலைக்கு பெறப்படுகிறது. இங்குக்

---

[1] Nair and Mahadevan 1974:131

[2] Pota and Patel 1991:446

குறைந்தது 6,000 முதல் 25,000 சங்குகள் ஒவ்வோர் ஆண்டும் பிடிக்கப்படுகின்றன[1].

## அந்தமான் நிக்கோபார் பகுதி

அந்தமான் நிக்கோபார் பகுதியிலும் சங்குகள் கிடைக்கின்றன. ஆனால் அவை வணிக முக்கியத்துவம் பெருமளவிற்குப் பிடிக்கப்படவில்லை.

## சங்கெடுக்கும் முறை

மேற்கண்ட கடல் பகுதிகளில் சங்கெடுக்கும் முறை இடத்திற்கிடம் வேறுபடுகிறது. பண்டைக் காலந்தொட்டு இக்காலம் வரை சங்கெடுக்கும் முறை பற்றி ஏற்கெனவே விரிவான ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது[2]. எனினும் முக்கியத்துவம் கருதிச் சங்கெடுக்கும் முறைகள் இங்குத் தரப்படுகின்றன.

## நீர்மூழ்கிச் சங்கெடுத்தல்

நீர்மூழ்கிச் சங்கெடுக்கும் தொழில் *சங்குக் குளித்தல்* அல்லது *சங்குச் சலாபம்* எனக் கூறப்படுகிறது. இதைச் *சங்கு அரித்தல்* எனவும் வழங்குவர்[3]. நீர்மூழ்குபவர்களைச் *சங்குக்குளியாள்* என அழைக்கின்றனர். நீர்மூழ்கும் பகுதிகள் *சலாபத்துறை, சங்குப்படுகை, சங்கு நிலம்* என அழைக்கப்படுகின்றது. நீர் மூழ்கும்போது கடல் நீர் தெளிவாக இருந்தால் மட்டுமே சங்கெடுக்க இயலும். எனவே சங்கெடுக்கும் காலம் இடத்திற்கிடம் வேறுபடும். இராமேஸ்வரம் கடற்பகுதியில், மன்னார் வளைகுடாவில் செப்டம்பர் முதல் டிசம்பர் மாதம் வரையிலும், நீர் தெளிவாக இருப்பதால் அக்காலங்களில் சங்கெடுத்தல் நடைபெறுகிறது. தூத்துக்குடிப் பகுதியிலும், பாக் விரிகுடாவிலும் பிப்ரவரி மாதம் தொடங்கி ஏப்ரல் இறுதி வரையிலும் சங்கெடுத்தல்

---

1 Pota and Patel 1991:447

2 Athiyaman 2000

3 முருகானந்தம் 1990:82

நடைபெறும். பெரும்பாலும் மீன் பிடித்தொழிலில் ஈடுபடுவோரே இத்தொழிலையும் செய்கின்றனர். சங்கெடுக்கும் காலம் இடத்திற்கு இடம் வேறுபடுவதால் இவர்களில் பலர் இடம்பெயர்ந்து சங்கெடுக்கும் தொழிலில் ஈடுபடுவதுமுண்டு. சங்குப் படுகைகளை அறிந்து சங்கெடுக்க உதவுபவரை *பரமந்தாடி* என அழைப்பர். *பரமந்தாடி* என்னும் சொல் பார்மன்றாடியின் மரூஉ ஆகலாம் (பார்> சங்குப்படுகை[1], மன்றாடி> மன்னாடி > சில சாதியாரின் பட்டப்பெயர்[2]).

சங்கெடுப்பதற்குச் செல்வதற்கு மரபுவழியில் கட்டப்படும் *வள்ளம்* எனப்படும் படகுகளைப் பயன் படுத்துகின்றனர். இவை இராமேஸ்வரம் பகுதியில் பயன்படுத்தப் படுபவை பெரும்பாலும் 10 மீட்டரிலிருந்து 15 மீட்டர் நீளமும் 0.9 மீட்டரிலிருந்து 1.2 மீட்டர் அகலமும் உடையதாக இருக்கும் (படம் 5).



படம் 5. சங்கு குளிக்கப் பயன்படும் படகுகள்

---

[1] *Tamil Lexicon* 1982:2616

[2] *Tamil Lexicon* 1982:3128

தூத்துக்குடியில் பயன்படுத்தப்படும் படகுகள் இவற்றைவிடச் சற்றே பெரியதாக இருக்கும். ஒரு படகில் சுமார் 15 இலிருந்து 20 பேர் வரை இருப்பர். இப்படகுகளின் உரிமையாளர் *சம்மாட்டி* என அழைக்கப்படுகிறார். படகு உரிமையாளரும் நீர்முழ்குதலில் பங்கேற்பதுண்டு. சங்கெடுக்கச் செல்லத் தொடங்கும் நேரம் முதல் திரும்பிக் கரைசேரும் வரை படகில் உள்ளோருக்கு இவரே பொறுப்பாவார். திரும்பி வந்தவுடன் அன்று கிடைக்கும் மொத்த வருமானத்தில் ஒரு பங்கு அவர் பெற்றுக்கொள்வார்.

### நீர்மூழ்கு கருவிகள்

தற்பொழுது சங்கெடுப்போர் ஒவ்வொருவரும், அரச்சா எனப்படும் வலைப்பையையும், கண்ணாடியையும், காலில் அணிய அலுமினியத்தாலான வட்டத்தட்டையும், ஏறத்தாழ 10 கிலோ எடையுடைய கயிற்றால் இணைக்கப்பட்ட கல் அல்லது இரும்பாலான உருளையையும் வைத்திருப்பர். இவற்றின் பயனும் அணியும் விதமும் குறிப்பிடத் தக்கவையாகும்.

#### அரச்சா

கடலில் மூழ்கி எடுக்கப்படும் சங்கு மற்றும் பிற வகைப் பொருட்களை சேகரித்து வைக்க அரச்சா எனப்படும் வலைப்பை பயன்படும். இது 2-4 மி.மீ அளவுள்ள மெல்லிய நைலான் கயிறுகளால் தயாரிக்கப்பட்டது (படம் 6). இதன் வாய்ப் பகுதி ஏறத்தாழ 60 செமீ சுற்றளவும், உயரம் 70 செமீ இருக்கும் வாய்ப்பகுதியில் 1 செமீ விட்டமும் 2மீ நீளமுள்ள கயிறும் இருக்கும். இக்கயிறு கொண்டு சங்குக் குளிப்பார் இதை இடையில் கட்டிக் கொள்வார்கள். நைலான் கயிறு கண்டுபிடிப்பதற்கு முன் இவ்வலைப்பைகள் தேங்காய் நாற்றின் கயிறுகளால் செய்யப்பட்டிருந்தன. இச்சங்குவலை *கவுளிப் பாத்திரம்* எனவும் வழங்கப்படுவது உண்டு[1].

---

[1] முருகானந்தம் 1990:45



படம் 6. அரச்சா என்னும் வலைப்பை



படம் 7. சங்கு குளிக்கப் பயன்படும் கண்ணாடி



படம் 8. துடுப்புத் தட்டு

### கண்ணாடி

அறிவியல் முறைப்படி நீர்மூழ்குபவர்கள் பயன்படுத்தும் கண்ணாடி போன்றே மரபுவழித் தொழில் நுட்பத்தில் தயாரிக்கப்படும் கண்ணாடி நீரில் உள்ள பொருட்களைத் தெளிவாகக் காணப்பயன்படுகிறன. தூத்துக்குடிப் பகுதியில் இக்கண்ணாடிகள் செய்யப் படுகின்றன (படம் 7). ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கண்ணாடி புழக்கத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. மேலை நாட்டில் உருவாக்கப்பட்ட நீர்மூழ்கு கண்ணாடிகளைத் தூத்துக்குடிப் பகுதியைச் சார்ந்த கடல் ஆய்வறிஞர்களோ மேலை நாட்டினரோ பயன்படுத்தியதைக் கண்டு இவற்றைத் தயாரிக்கக் கற்றிருக்கலாம். நீள்வடிவக் கண்ணாடியைச் சுற்றி அலுமினியத்தகடு பொருத்தப்பட்டு இடைவெளியில் வாகனங்களின் சக்கரங்களில் பயன்படுத்தப்படும் காற்றுக் குழாய் இரப்பர் கொண்டு சுற்றி இணைக்கப் பட்டிருக்கும். முகத்தில் இறுக்கமாகப் பொருத்த மெல்லிய இரப்பர் வார் பொருத்தப்பட்டிருக்கும். ஒருவர் நீர் மூழ்கும்போது கண்ணில் கடல் நீர் எளிதாகப் புகுந்துவிடாமல் காக்கப்படுவதோடு பொருட்களைத் தெளிவாகப் பார்க்கவும் இக்கண்ணாடி உதவும்.

### துடுப்புத்தட்டு

அலுமினியத்தால் செய்யப்பட்ட 1 அடி விட்டமுள்ள இத்தட்டு காலில் செருப்பணிவதுபோன்ற அமைப்புடன் இரப்பர் வார் பொருத்தப்பட்டிருக்கும். இதை நீர் மூழ்குபவர் ஒரு காலில் அணிந்து கொள்வார் (படம் 8). கடற் பகுதியிலிருந்து உந்தி வேகமாகக் கீழே செல்வதற்கு இத்தட்டு துடுப்புபோல் பயன்படுகிறது. இத்தட்டின் உபயோகம் ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்குப் பின்பே ஏற்பட்டிருத்தல் வேண்டும். துடுப்புத்தட்டு சங்குக் குளிப்போரின் வேலைத் திறனை அதிகரிக்கின்றது.

## கல்/ இரும்பு உருளை

நீளக் கயிற்றால் கட்டப்பட்ட கல் அல்லது தடித்த இரும்பு உருளை தூத்துக்குடி முத்துக்குளிக்கும் பகுதிகளில் பயன்படுத்தப்படுகிறது (படம் 9). ஆழமான இடத்தில் நீர் மூழ்கும்போது கல் அல்லது இரும்பு உருளை படகின் பக்கங்களில் தொங்கவிடப்பட்டிருக்கும். நீர் மூழ்குபவர் அக்கல்லில் கால் பெருவிரலை வைத்து கயிற்றை பிடித்துக்கொள்வார். அக்கயிறு அவிழ்த்துவிடும் போது கல்லின் எடையால் சங்கு குளிப்பார் வேகமாகத் தரைக்குச் செல்வார். தரையை அடைந்தபின் கயிற்றைவிட்டு சங்குகளைத் தேடிச் சேகரிப்பார். இராமேஸ்வரம் பகுதியில் ஆழம் சற்றே குறைந்த பகுதியில் சங்கு கிடைப்பதால் இக்கல்லை அவர்கள் பயன்படுத்துவதில்லை.



படம் 9. கடல் தரைக்கு வேகமாகச் செல்லப் பயன்படும் கல்

## இராமேஸ்வரம் பகுதியில் சங்கெடுத்தல்

அதிகாலையில் 15லிருந்து 20 பேர் வரை தத்தமது கருவிகளுடன் வள்ளங்களில் கிளம்பிச் செல்வர். சங்கு கிடைக்கும் பகுதிகளுக்குச் செல்லக் குறைந்தது ஒருமணி நேரம் ஆகும். சங்கு கிடைக்கும் பகுதிக்குச் சென்றவுடன், படகு நங்கூரமிட்டு நிறுத்தப்படும். ஒருவர் அல்லது இருவர் தவிர ஏனையோர் இடையில் அரச்சா என்னும் வலைப் பையைக்கட்டி, காலில் தட்டு மாட்டிக்கொண்டு, முகத்தில்

கண்ணாடி அணிந்து கடலில் இறங்குவர். அதற்கு முன் தத்தமது மத அடிப்படையில் கடவுளை வணங்குவர். சங்கெடுப்போர் ஒவ்வொருவரும் கடல் மேலேயே நீந்தி வெவ்வேறு இடங்களுக்குச் சென்று மேல்பரப்பிலிருந்தே கண்ணாடி உதவியுடன் முகத்தைக் கீழ்நோக்கி சங்கு போன்ற வயிற்றுக்காலிகளைத் தேடுவர். கீழே சங்கிருந்தால் வேகமாகக் காலை உதைத்துத் தரைக்குச் சென்று எடுத்து மேல்வருவர். சங்குகளை அரச்சாவில் போட்டு மீண்டும் தேடும் முயற்சியில் ஈடுபடுவர். படகிலிருந்து 300 மீ தூரம் வரை சங்குகளைத் தேடிச் செல்வர். சங்குகள் வலையில் அதிகமாக இருந்தால் படகிற்கு வந்து சங்குகளை இறக்கி மறுபடியும் தேடுவர். நீர்மூழ்கும்போது ஒரு நிமிடம் வரை மேலே வராமல் சங்கு தேடுவோரும் உண்டு. அரைமணிக்கு ஒருமுறை படகிற்கு வந்து சற்று ஓய்வெடுத்து மீண்டும் பணிபுரிவது அவர்கள் வழக்கம். இடையில் கொண்டுவந்த உணவையும் அவர்கள் உண்பர். நங்கூரமிட்ட பகுதிகளில் சங்கு சரியாகக் கிடைக்கவில்லையெனில் அனைவரையும் அழைத்துக்கொண்டு வேறு இடங்களுக்குச் சென்று தேடுவர். மாலை இரண்டு, மூன்று மணியளவில் அவர்கள் கரையை நோக்கிச் செல்வர். நான்கு மணியளவில் அவர்கள் கரை சேர்ந்ததும் வணிகர்கள் கிடைத்த சங்குகளை விலைக்குப் பெற்றுச் செல்வர்.

### தூத்துக்குடிப் பகுதியில் சங்கெடுத்தல்

இராமேஸ்வரம் பகுதியில் சங்கெடுக்கும் முறையே இங்கும் கையாளப்படுகிறது. இங்கு சங்குகள் ஆழமான பகுதிகளில் கிடைக்குவதால் வேகமாகத் தரைக்குச் செல்ல கல்/இரும்பு உருளைகள் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கு படகின் ஓரத்தில் கயிற்றில் தொங்கவிடப்பட்டிருக்கும் கல்லின்மேல் சங்கு குளிப்பார் தமது காலை வைத்துக் கயிற்றைப் பிடித்துக் கொள்வார். கயிறு பிரித்துவிடப் பட்டதும் அவர் வேகமாகத் தரைக்குச் செல்வார். தரையை அடைந்ததும் கயிற்றை விட்டுவிட்டுச் சங்குகளைத் தேடுவார். படகில் உள்ள அவருடைய துணையாள் கல்லை மேலே

இழுத்துக் கட்டி வைப்பார். சங்கெடுத்து அவர் மேலே வந்ததும் மீண்டும் கல்லைப் பயன்படுத்திக் கீழே செல்வார்.

## தமிழகத்தில் பிற பகுதிகளில் சங்கெடுத்தல்

தொண்டிக்கு வடக்கே உள்ள தஞ்சாவூர் கடற் பகுதியில் *வெள்ளைவலை* எனப்படும் மீன் வலைகளில் எதிர்பாராமல் கிடைக்கும் சங்குகளே பிடிக்கப்படுகின்றன[1]. கடலூர் மாவட்டத்தில் *தூரிவலை* எனப்படும் மீன்பிடி வலைகளில் சிக்கும் சங்குகள் கரைசேர்கின்றன[2].

பரங்கிப்பேட்டைப் பகுதியில் பெரும்பாலான சங்குகள் இயந்திரப் படகுகளின் இழுவை வலைகளில் தற்செயலாகக் கிடைப்பனவாகும். 10மீ ஆழம் வரை பயன்படுத்தப்படும் *திருகுவலை* எனப்படும் மீன்பிடி வலைகளிலும், *கரைமடி* எனப்படும் கடற்கரையோரமாகப் பயன்படுத்தப்படும் வலைகளிலும் ஓரளவிற்குச் சங்குகள் கிடைக்கின்றன[3].

## கேரளப் பகுதியில் சங்கெடுத்தல்

கேரளாவில் டிசம்பர் மாதத்திலிருந்து ஏப்ரல் மாதம் வரை பூவார், விழிஞ்ஞம், கோவளம், செரியத்துறை, வலியதுறை, சங்குமுகம், வேலி, செருமான்கரை முதலிய கடற்பகுதிகளில் தமிழகக் கடற்பகுதியான மன்னார் வளைகுடாவில் சங்கெடுக்கும் முறையையே பின்பற்றுகின்றனர்[4].

## குஜராத் பகுதியில் சங்கெடுத்தல்

*மச்சஹவாஸ்* (Machhavas) எனப்படும் மரபுவழிப் படகுகளில் சங்குகள் பிடிக்கப்படுகின்றன. இப்படகுகள் சுமார் 8மீ நீளமுள்ளவை. இப்பகுதியில் சங்கெடுப்போர்

---

[1] Nair and Mahadevan 1974:131

[2] Nair and Mahadevan 1974:132

[3] Sreenivasan 1991:84

[4] Nayar and Mahadevan 1974:131

எவ்விதக் கருவிகளையும் எடுத்துச் செல்வதில்லை. கும்பா (Gumbha) எனப்படும் வலைகளில் சங்கைச் சேகரித்து, படகிற்குக் கொண்டு செல்கின்றனர்[1].

குறைந்த ஓதக்காலங்களில் (low tide) சங்கு கிடைக்கும் பகுதிகளில் கடைசி வரை செல்வர். பிறகு கரையை நோக்கியவாறு நடந்து சென்று கும்பா வலைகளில் சங்குகளைச் சேகரிப்பர். சில நேரங்களில் 1.2-1.5 மீ ஆழமுள்ள பகுதிகளில் கால்களில் படும் சங்குகளை மூழ்கி எடுப்பர். சங்குகள் அனைத்தையும் குஜராத் அரசின் மீன்துறை விலைக்கு வாங்கி மொத்தமாக விற்பனை செய்யும்[2].

## இலங்கைப் பகுதியில் சங்கெடுத்தல்

இலங்கையில் ஆழமான கடலில் தூத்துக்குடிப் பகுதியில் சங்கெடுக்கும் முறையையே பின்பற்றுகின்றனர். ஆழம் குறைந்த பகுதிகளில் இரும்புக் கம்பிகளைத் தரையில் குத்திச் செல்வர். கடினமான பகுதியில் இரும்பு தட்டுப்பட்டால் மூழ்கிப் பார்த்து, சங்காயிருப்பின் அவற்றைச் சேகரிப்பர்[3].

## சங்கெடுப்போரின் வருமானம்

சங்கெடுத்தல் சூழ்நிலை சார் வருமானத் தொழில் என்பதால் சங்கெடுப்போரின் ஒருநாள் வருமானம் சில ரூபாய்களிலிருந்து ஆயிரம் ரூபாய் வரையில் இருக்கும். சங்கெடுப்போரின் வருமானத்தைச் சரியாகக் கணக்கிட இயலவில்லையாயினும் சராசரி நாள் வருமானமாக ரூபாய் இருநூறு வரை கிடைக்கும். இவ்வருமானம் சராசரிக் குடும்பத்தின் தேவைக்குப் போதுமானதாகும். சங்குக் குளிப்பாரில் பெரும்பாலோர் தமது வருமானத்தில் பெரும்பகுதியைத் தமக்கும் ஒரு பகுதியைக் குடும்பத்திற்கும்

---

1 Pota and Patel 1991:447

2 Pota and Patel 1991:447

3 Nayar and Mahadevan 1974:133

செலவிடுகின்றனர் என நேர்காணலில் தெரிய வருகிறது[1]. ஆயினும் மீனவக்குடும்பப் பெண்களும் மீன்விற்றல், சோழியெடுத்தல் ஆகிய தொழில் செய்து வருமானத்தைத் தேடிக்கொள்வதால் குடும்பச் செலவுக்குத் தேவையான பணம் கிடைக்கிறது.

மரபுவழியில் சங்கெடுப்போருக்குக் காற்றுக் குப்பிகளைப் பயன்படுத்தி நீர்மூழ்கக் கற்றுக் கொடுத்து மூலதன உதவியும் செய்தால் சங்குகள் பெருமளவில் கிடைக்கும்[2].

பண்டைய காலங்களில் பரதவர் சங்கெடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். 12-13ஆம் நூற்றாண்டுகளில் மன்னார் வளைகுடாக் கடற்கரைப் பகுதிகளில் குடியேறிய இசுலாமியரும் சங்கெடுத்தல் தொழிலில் ஈடுபட்டனர். எனவே இத்தொழிலில் ஆளுமைப் போட்டி இருந்து வந்துள்ளது. தூத்துக்குடிப் பகுதியைச் சார்ந்த பரதவர்களுக்குப் போர்த்துக்கீசியர் பாதுகாப்பு அளித்து, கிருத்துவர்களாக ஏராளமானோரை மதமாற்றம் செய்தனர். ஆகையால் தற்பொழுது சங்கு குளிப்போர் மூன்று மதங்களையும் சார்ந்தோராக உள்ளனர். அமாவாசை, முழுநிலா நாட்களில் இராமநாதபுரம் மாவட்டத்தின் தீவுகளுக்குச் செல்லும் வலையர்குலப் பெண்கள் நீர் வடியும்போது சங்குகளை எடுக்கின்றனர் என்று ஸ்ரீநிவாசன் குறிப்பிடுகின்றார்[3]. இம்மாவட்டத்தில் உள்ள தீவுகளுக்குச் செல்லும் வலையர்குலப் பெண்கள் நீர் வடியும்போது கடற்பாசி மற்றும் பிறவகைச் சோழிகளையே எடுக்கின்றனர் எனக் கள ஆய்வின் மூலம் தெரியவருகிறது.

---

1 Athiyaman 2000:105

2 Nayar and Mahadevan 1974:138

3 *ஸ்ரீநிவாசன் 1914:4-5*

சங்கெடுப்பதற்கான அரசின் சட்டமுறைகள் (1980) உண்டு. *சங்கு வளம்* என்னும் நூலில் அவ்விதிமுறைகள் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன[1].

சங்கெடுக்கும் போது, சங்கின் விட்டம் $2\frac{1}{4}$"க்கு குறைவாக இருந்தால் அவற்றை சேகரிக்காமல் கடலிலேயே விட்டுவிடவேண்டும் என்ற சட்டமும் உள்ளது. இந்த அளவைவிட பெரிய சங்குகள் தரவாரியாகப் பிரிக்கப்படும். அவ்வாறு பிரிப்பதற்கு துளையிட்ட பலகைகள் பயன்படுத்தப்படுகின்றன. மொத்தம் எட்டு அளவுடைய பலகைகள் பயன்படுத்தப்படுகின்றன (படம் 10). சங்கு எப்பலகையின் துளைவழியாகச் செல்லாமல் தடுக்கப்படுகிறதோ அப்பலகைக் கட்டையில் உள்ள எண்ணால் சங்கின் அளவு குறிக்கப்படும் (படம் 11).

சங்கின் தரம் துளைப்பலகையிலிருந்து பல்வேறு வகைகளில் பிரிக்கப்படுகிறது.

| பலகை எண் | | விட்டம் (செ.மீ) |
|---|---|---|
| 8 | - | 5.6 |
| 7 | - | 6.3 |
| 6 | - | 6.6 |
| A6 | - | 6.9 |
| 5 | - | 7.5 |
| 4 | - | 7.8 |
| 3 | - | 8.3 |
| 2 | - | 9.1 |
| 1 | - | 9.4 |
| O | - | 10 |
| OO | - | 10 செ.மீக்கு மேல் |

[1] சுந்தர ராஜ் மற்றும் கிருஷ்ணதாஸ் 1989:174-176




படம் 10. சங்கின் அளவை அளக்கப் பயன்படும் துளைப்பலகைகள்



படம் 11. சங்கின் அளவறியும் முறை

படத்தில் காட்டியுள்ளது 00 எனப்படும் அளவாகும். இது விலை மிகுந்தது. துளைப் பலகைகள் பயன்படுத்தப்பட்டாலும் நீர்மூழ்குபவரிடம் பெறும்போது பெரும்பாலும் கண்ணளவிலேயே விலை பேசப்படுகிறது.

1999ஆம் ஆண்டில் சங்குகள் கீழ்க்கண்ட விலைக்குப் பெறப்பட்டன.

| | |
|---|---|
| சிறிய அளவிலானவை | ரூ. 30 |
| இடைத்தரம் | ரூ. 120-140 |
| O வகை | ரூ. 200 |
| டபுள் O | ரூ. 300 |

குஜராத் கடற்பகுதிகளில் சங்கின் அளவுகளை அறிய தமிழகத்தில் காணப்படுபது போன்ற ஃபுர்மோ (Furmo) எனப்படும் இரும்பாலான வட்டத்துளைத் தட்டுகள் பயன்படுத்தப்படுகின்றன[1].

தற்பொழுது டிராலர் எனப்படும் இயந்திரப் படகுகளில் இழுவை வலைகள் பயன்படுத்தப் படுகின்றன. இதனால் *சங்குப்பூ* எனப்படும் *எளநாடுகள்* ஏராளமாக வலையில் சிக்கிச் சேதப்படுத்தப்படுகின்றன. எனவே தற்பொழுது எடுக்கப்படும் சங்குகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகின்றது.

## வலம்புரிச் சங்கு

சங்குகளின் வாய்ப்பகுதியைக் கீழ்நோக்குமாறு பார்த்தால் அனைத்துச் சங்குகளின் வாய்ப்பகுதி இடப்புறமே (Dextral) காணப்படும். இவை இடம்புரிச் சங்கு எனப்படும். மிக அரிதாகவே வலப்புறம் வாய்ப்பகுதி காணப்படும். இத்தகைய சங்குகள் வலம்புரிச் சங்குகள் எனப்படும் (படம் 12). மேலிருந்து நோக்கினால் இதன் புரிகள் வலப்பக்கமாகச் செல்லும். இவ்வலம்புரி சங்குகள் மிக அரிதாகவே கிடைக்கின்றன. இராமேஸ்வரம் கடற்பகுதியிலேயே இவை கிடைக்கின்றன. திருநெல்வேலி கடற்பகுதியில் கடந்த நூற்றாண்டில் 1920, 1957, 1970ஆம் ஆண்டுகளில் மூன்று முறை வலம்புரிச் சங்குகள் கிட்டியுள்ளதாக அரசு ஆவணங்கள் தெரிவிக்கின்றன. ஒரு வலம்புரிச் சங்கெடுப்பவருக்கு 1,000

---

1 Pota and Patel 1991:447

இடம்புரிச் சங்கின் விலையை அரசு அளிக்கும். இராமேஸ்வரம் பகுதியில் ஏலம் எடுக்கும் தனியார் ஒருவர் ஆண்டிற்கு ஒரு வலம்புரிச் சங்கையோ அல்லது அதற்கு ஈடாக 1,000 இடம்புரிச் சங்கையோ அரசுக்கு வழங்க வேண்டும். வலம்புரிச் சங்கு கிட்டினாலும் இவர்கள் 1,000 இடம்புரிச் சங்குகளையே அரசுக்கு அளித்து வந்துள்ளனர். அரசுக்குக் கிடைக்கும் வலம்புரிச் சங்குகள் தேசிய அளவில் ஏலம் விடப்படும்[1]. 19ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் வலம்புரிச் சங்குகள் 1 இலட்சம் ரூபாய்களுக்கு மேல் மதிப்புள்ளதாகக் கருதப்பட்டது[2]. வலம்புரிச் சங்குகளின் சமய, பண்பாட்டு முக்கியத்துவம் பற்றி பிறிதோர் இயலில் காணலாம்.



படம் 12. வலம்புரிச் சங்கு

[1] Nayar and Mahadevan 1974:137

[2] Maclean 1893:187

## சங்கெடுத்தலின் அரசியல் மற்றும் வணிக வரலாறு

சங்க காலத்திற்கு முன்பிருந்தே மன்னார் வளைகுடாவில் சங்கெடுத்தல் நிகழ்ந்து வந்திருக்க வேண்டும் என்பதைச் சங்க இலக்கியங்களும், அகழாய்வுகளும் மெய்ப்பிக்கின்றன. அக்காலத்தில் தமிழகக் கடற்கரைப் பகுதியில் நடைபெற்ற சங்கு குளித்தலைப் பற்றி வெளிநாட்டுப் பயணியரின் குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை. எனினும் முத்துக்குளித்தலைப் பற்றி அவர்கள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர். சங்கெடுத்தல், முத்துக்குளித்தல் ஆகிய இரு தொழில்களையும் பரதவர்கள் மேற்கொண்டதாலும், சங்கைவிட முத்து மிக மதிப்புள்ளதாலும் அவர்கள் சங்கு குளித்தல் பற்றிக் குறிப்பிடாமல் விட்டுவிட்டனர் என்று கூறலாம். மேற்கண்ட சான்றுகளில் பண்டைய தமிழகப் பகுதியில் சங்கெடுப்போர், தொழிலின் உடைமையாளர், வணிகம் பற்றிய செய்திகளைக் காண இயலுகிறது.

*மகாவம்சம்* என்னும் பாளி மொழி நூல் பல இடங்களில் சங்கு பற்றிய குறிப்புகளைத் தருகிறது. இந்நூலில் தேவானம்பிரிய திசன் (கி.மு.250-கி.மு.210) என்னும் இலங்கை அரசன் அசோகருக்கு அன்பளிப்பாக அனுப்பிய விலை உயர்ந்த பொருட்களில் வலம்புரிச் சங்கும் ஒன்றாகும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது[1]. எனவே இலங்கைப் பகுதியில் நடைபெற்ற சங்கெடுத்தல் இலங்கை மன்னன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது எனக் கருதலாம். மேலும் *அர்த்தசாஸ்திரம்* கருவூலங்களில் சேர்க்கப்படும் பொருட்களின் பட்டியலில் *பாண்டிய கவடஹ* என்னும் பொருளையும் கூறுகிறது[2]. சாமா சாஸ்திரி *பாண்டிய கவடஹ* என்பதைப் பாண்டிய நாட்டிலிருந்து பெறப்பட்ட மணியாகும் எனக் கூறியுள்ளார். அக்காலத்தில் தமிழகத்தில் சங்கு என்னும் பெயர் வழங்கப்படாமல் கோடு, வளை, பணிலம் என்றே வழங்கப்பட்டது. ஆகையால் பாண்டிய நாட்டிலிருந்து பெறப்பட்ட கோடு என்பதை பாண்டிய கவடா என

---

[1] Geiger 1950:78

[2] Shamasastry 1967:77

*அர்த்தசாஸ்திரம்* குறிப்பிட்டு இருக்கலாம். படகில் சங்கு பிடிக்கச் செல்வதற்கு அரசுக்குச் செலுத்தும் வாடகை எவ்வளவு என்பதையும் *அர்த்தசாஸ்திரம்* குறிக்கிறது. அவ்வாறாயின் சங்க காலத்திலிருந்தே பீகார் பகுதிக்குச் சங்குகள் பாண்டிய நாட்டிலிருந்து ஏற்றுமதியாயின என உறுதியாகக் கூறலாம். சங்க இலக்கியங்களில் சங்கெடுத்தல் மற்றும் முத்துக் குளித்தலைப் பற்றிய குறிப்புகள் ஏராளமான உள்ளன.

பரதவர்கள் சங்கெடுத்தல் மற்றும் முத்துக் குளித்தல் தொழிலில் ஈடுபட்டிருந்தனர் என்பதை

விளைந்து முதிர்ந்த விழுமுத்தி
னிலங்கு வளையிருஞ்சேரி (*மதுரைக்காஞ்சி* 135-136)

எனக் குறிப்பிடுகிறது. சூல்முற்றி ஒளி முதிர்ந்த சிறிய முத்தினையும் அதாவது, விளங்குகின்ற சங்கினையுமுடைய பெரிய சங்கு குளிப்பார் இருப்பினையும் உடைய கொற்கை[1] என்னும் மேற்கண்ட குறிப்பாலும்,

எறிசுறா நீக்கி வலம்புரி மூழ்கிய
வான் திமில் பரதவர் (*அகநானூறு* 350:10:11).

என்னும் கூற்றில் பரதவர் கொடிய சுறாக்களைத் தவிர்த்துச் சங்குகளை எடுக்கும் திறன் பெற்றிருந்தனர் என்னும் கூற்றாலும் தெளிவாகிறது. சென்ற நூற்றாண்டில் பரதவர்களின் 13 பிரிவுகளில் முத்துக்குளிப்போர் என்ற ஒரு பிரிவும் சங்கு குளிப்போர் என்ற ஒரு பிரிவும் இருந்தது என்னும் கூற்றிலிருந்து பரதவர் சங்க காலத்திலிருந்தே சங்கெடுத்தல் தொழிலில் ஈடுபட்டனர் எனக்கூறலாம்[2].

ஆயினும் இத்தொழில் யாருடைய ஆளுகைக் கீழ் இருந்தது என்பதற்கான சான்றுகள் இல்லை. முத்துக் குளிப்போரையும், சங்கெடுப்போரையும், வளையல் அறுப்போரையும் கொண்ட கொற்கைத் துறைமுகம் பாண்டியருடைய ஆட்சியின் கீழ் இருந்ததை *மதுரைக்*

---

1 சாமிநாதையர் 1961:352

2 Simon Casie Chetty 1934:49-50

*காஞ்சி*(133-138) சுட்டுகின்றது. *சிறுபாணாற்றுப்படை*(55-56) கொற்கைப் பாண்டியரின் எல்லைக்கு உட்பட்டதாகக் கூறுகிறது. மேலும் பான் கௌ (Pan Kou) என்னும் சீனப்பயணி முதலாம் நூற்றாண்டில் இந்தியப் பகுதியிலிருந்து முத்து ஏற்றுமதி செய்யப்பட்டதாகவும் ஒரு முத்து ஏழு அங்குலம் அளவிருந்ததாகவும் தமது *சீயென் ஹன் சௌ* (*Ts'ien han chou*) என்னும் நூலில் குறிக்கிறார்[1]. அது முத்தாக இருந்திருக்க வாய்ப்பில்லை என்பதால் வெண்சங்கைக் குறிப்பதாகலாம். முத்துக் குளிக்கும் தொழில் பாண்டியரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது எனவும் அடிமைகள் இத்தொழிலில் ஈடுபட்டிருந்தனர் எனவும் *பெரிப்ளுசு* குறிப்பிடுகிறது[2]. எனவே சங்குக் குளிக்கும் தொழிலும் பாண்டியரின் ஆளுகைக்கு உட்பட்டதாகவே இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. மேலும் சங்க காலத்தில் பாண்டியர் பெருவழுதி நாணயங்களில் சங்கு பொறிக்கப் பட்டுள்ளமை இதற்குப் பிறிதொரு சான்றாக அமைகிறது[3]. சங்க கால நகரங்களான கொற்கை, அழகன்குளம், ஆதிச்சநல்லூர், கொடுமணல், பூம்புகார், அரிக்கமேடு, திருக்காம்புலியூர், அழகரை, உறையூர் ஆகிய இடங்களில் நிகழ்த்தப்பெற்ற அகழாய்வில் அதிக அளவில் உடைந்த சங்கு வளையல்களும், சங்குக்கழிவுகளும் கிட்டின. சங்க காலத்தில் சங்குகள் தமிழகத்தில் மன்னார் வளைகுடாவில் எடுக்கப்பட்டன என்பதுடன் அதன் பயன்பாட்டையும் வணிக முக்கியத்துவத்தையும் இதன் வழி அறியலாம்.

உப்பு, முத்து, சங்கு, பவளம், இரத்தினக் கற்களைக் கடலிலிருந்து எடுக்கும்போது கடற்பொருட்களின் கண்காணிப்பாளர் பார்வையிட்டு வணிகத்தை முறைப்படுத்த வேண்டும் என *அர்த்தசாஸ்திரம்* குறிப்பிடுகிறது[4]. முத்து, சங்குக் குளிக்க மன்னரது படகுகளைப் பயன்படுத்துவோர் *நவ்காஹாதகம்* (nauka hatakam) எனும் படகு வாடகையை

[1] Sastri 1972:44

[2] Mc Crindle 1987:140

[3] கிருஷ்ணமூர்த்தி *1997:33,46-49*

[4] Shamasastry 1967:89

அளிக்க வேண்டும் அல்லது ஒருவர் தனது சொந்தப் படகைப் பயன்படுத்திக் கொள்ளலாம் எனவும் *அர்த்தசாஸ்திரம்* குறிப்பிடுகிறது[1]. இது குஜராத் கடற்பகுதியைக் குறிப்பத்தாகலாம்.

இலங்கைக்கு மேலுள்ள கண்டத்தில் மாரல்லோ (Marallo) என்னுமிடத்திலிருந்து சங்குகள் ஏற்றுமதி செய்யப்பட்டதாக கி.பி.545ல் காஸ்மாஸ் (Cosmos) என்னும் எகிப்து துறவி கூறுகிறார்[2]. அவர் குறிப்பிடும் பகுதி தமிழகக் கடற் பகுதியைக் குறிப்பதாகலாம்.

இதற்குப் பின்னர் இத்தொழிலில் ஈடுபட்டோரைப் பற்றிய குறிப்பைத் *திணைமாலை நூற்றைம்பது* தெரிவிக்கிறது.

> பெருங்கடல் வெண்சங்கு காரணமாய் பேணா
> திருங்கடன் மூழ்குவர் (*திணைமாலை நூற்றைம்பது 33*)

பெருங்கடல் வெண்சங்கு பெறுதல் காரணமாகத் தங்களுயிரைப் பாதுகாவாது கடலினுள்ளே குளிப்பார்[3] என்று பரதவரைக் குறிக்கிறது. ஆயினும் இத்தொழில் வணிகம், ஆளுமை குறித்த சான்றுகள் ஏதும் அதில் இல்லை. இத்தொழில் அக்கடற்கரைப் பகுதியை ஆண்ட மன்னர்களின் ஆளுகையின் கீழ் இருந்திருத்தல் வேண்டும். 10ஆம் நூற்றாண்டில் முதலாம் பராந்தகன் சிதம்பரம் நடராசர் கோயிலுக்குப் பொன்கூரை வேய்ந்தபொழுது விலை உயர்ந்த முத்துக்களை அளித்ததையும், முதலாம் இராசேந்திர சோழன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு முத்துக்கள் பரிசளித்ததை நோக்கும் போது இக்கடற்கரைப்பகுதி சோழர்களின் ஆளுகையின் கீழிருந்தது எனலாம்[4]. ஆயினும் அச்சமயத்தில் இத்தொழில் அவர்களின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ் இல்லாமல் இருந்ததை முதலாம் குலோத்துங்கன் *முத்தின் சலாபத்தை* வென்றான் என்னும் மெய்கீர்த்தியின் கூற்றால்

---

1 Shamasastry 1967:142

2 Yule and Burnell, 1996:184

3 *இராகவையங்கார் 1927:13*

4 *SII* ii:395-396

அறியலாம்[1]. இச்சமயத்திலேயே மன்னார் வளைகுடாப் பகுதியில் நடைபெற்ற சங்கு குளித்தல் தொழிலும் இவர்கள் கீழ் வந்திருக்க வேண்டும். ஆனால் இத்தொழில் பண்டைய காலத்திலிருந்து தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது என்பதற்குப் பக்தி இலக்கியங்களில் சுட்டப்பெறும் சங்கு வகைகளும் அணிகலன்கள் ஆகியனவும் இடைக்காலத்தில் கோயில்களில் அளிக்கப்பட்ட எழுத்துப் பொறித்த சங்குகளும் சான்றாக அமைகின்றன[2]. ரெய்னாட் (Reinaud) என்பார் கி.பி.851இல் இலங்கைக்கு வருகைபுரிந்த பொழுது சங்கு ஏற்றுமதித் தொழில் நடைபெற்றதைக் குறித்துள்ளார்[3]. இலங்கையைப் பற்றிய குறிப்புகள் எழுதிய சுலைமான் (Suleiman) மற்றும் அபு ஜெய்த் (Abu Zaid, கி.பி. 916) என்பாரும் இலங்கைக் கடற்பகுதியில் நடைபெற்ற சங்கெடுத்தல் மற்றும் முத்துக் குளித்தலைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர்[4].

இடைக்காலப் பாண்டியர் ஆளுகைக்குட்பட்ட மன்னார் வளைகுடாப்பகுதியில் எடுக்கப்பட்ட முத்து சீனாவிற்கும் அரேபியாவிற்கும் வணிகப் பொருட்களாக எடுத்துச் செல்லப்பட்டது என்பதை சௌ-சு-குவா (Chau-Ju-Kua, கி.பி.1225), மார்கோபோலோ (Marcopolo, கி.பி.1260-1300), ஜான் மான்டே கார்வினோ (John of Montecorvino கி.பி. 1292-3) ஆகியோர் குறிப்பிடுகின்றனர்[5]. எனவே, சங்கெடுத்தலும் பாண்டியரின் கீழ் இருந்தது எனலாம். மேலும், வாங் த-யுவான் (Wang Ta-Yuan, கி.பி.1330) இக்கடற்கரைப் பகுதியில் நடைபெற்ற முத்துக் குளித்தலைப் பற்றிய விரிவான செய்திகளைக் கூறினாலும்

---

[1] *SII* iii:145

[2] *வசந்த கல்யாணி 1994:94-95*

[3] Yule and Burnell 1996:184

[4] Sastri 1972:122-129

[5] Hirth and Rockhill 1966:229-230, Yule and Cordier 1993:331-332, Sastri 1972:189

சங்கு குளித்தல் பற்றிய குறிப்புகள் எதனையும் அளிக்கவில்லை[1].

இக்காலகட்டத்தில் மன்னார்வளைகுடாப் பகுதியில் வணிகர்களாகக் குடியேறிய அரேபியர்களும் இத்தொழிலில் ஈடுபட்டனர். இதனால் இத்தொழிலில் இந்து பரதவருக்கும், இசுலாமியருக்கும் இடையே போட்டி நிலவத் தொடங்கியது. 15-16ஆம் நூற்றாண்டில் நாயக்கர் காலத் தொடக்கத்தின்போது இராமேஸ்வரம் பகுதி சேதுபதி மன்னர்களிடம் இருந்தது. எனவே சங்கு குளித்தலில் கிடைக்கும் வருவாயைச் சேதுபதி மன்னர்கள் தொடர்ந்து அனுபவித்து வந்தனர். ஆனால் காயல்பட்டினம் பகுதியில் பரதவர், இசுலாமியர் இடையே நடைபெற்ற போட்டியால் மன்னரின் ஆதரவாளர்களான இசுலாமியர் முத்து எடுத்தலிலும் சங்கெடுத்தலிலும் ஆதிக்கம் செலுத்தினர். இதனால் நசுக்கப்பட்ட பரதவர்கள் 1523இல் போர்த்துக்கீசியரின் உதவியை நாடினர். இவர்களில் பெரும்பாலோர் கிருத்துவ மதத்திற்கு மாற்றப்பட்டதோடு, முத்துக் குளித்தலிலும் சங்கு குளித்தலிலும் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது[2]. எனினும் இவர்கள் கடற்பகுதியில் மட்டும் ஆளுமை செலுத்தியதால் காலந்தோறும் போர்த்துக்கீசியரின் ஆதிக்கம் வேறுபட்டு இருந்ததைப் பல்வேறு சான்றுகளால் அறியலாம்.

போர்த்துக்கீசியர்கள் முத்துக் குளித்தலில் கிடைக்கும் வருமானத்தைக் குறிக்கோளாகக் கொண்டு அப்பகுதியில் உள்ள முத்துக் குளிப்போரிடமும் சங்குக் குளிப்போரிடமும் வரி வசூலித்தனர்[3]. புன்னைக்காயல் பகுதியில் 1543ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நடைபெற்ற சங்கெடுத்தலுக்காக ரூ.28,000 பணம் வரியாகப் பெற்றனர். எனவே தூத்துக்குடிக் கடல் பகுதியில் முத்துக் குளித்தலில் மட்டுமன்றி, சங்கு குளித்தலிலும் அவர்கள் வருமானத்தை எதிர்நோக்கினர்[4].

---

1 Rockhill 1915:385-7

2 Hornell 1922:16

3 Jayaseela Stephen 1998

4 Jayaseela Stephen 1998:72

1564ஆம் ஆண்டு முதல் 1572ஆம் ஆண்டு வரை இராமநாதபுரம் மாவட்டம் வேதாளை கிராமத்திலிருந்த முத்து மற்றும் சங்கு குளிப்பவர்கள் 20 கூறு சங்குகளை வரியாகப் போர்த்துக்கீசியர்களுக்கு அளித்தனர். 1595ஆம் ஆண்டில் இலங்கை மன்னார் பகுதியிலிருந்த மீனவர்களிடமும் 40 கூறுகள் சங்கு வரியாகப் பெற்றனர்[1]. தூத்துக்குடிக் கடற்பகுதிகளில் கிட்டிய சங்குகள் அனைத்தையும் வாங்கும் உரிமை 1552இலிருந்து போர்த்துக்கீசியரிடமே இருந்தது[2]. ஆயினும் அப்போதைய போர்த்துக்கீசிய மன்னர் இச்சட்டத்தை ரத்து செய்தார். எனவே போர்த்துக்கீசியரால் கிருத்துவ மதத்திற்கு மாற்றம் செய்யப்பட்ட பரதவர்கள் சங்குகளை வாங்கி விற்பனை செய்யும் உரிமைபெற்று வங்கத்திற்கு அனுப்பி, செல்வ உயர்வடைந்தனர்[3].

டச்சுக்காரர்கள் கிபி.1658இல் இலங்கைக் கடற்கரையைக் கைப்பற்றிய பின் வணிக இலாபத்தைக் கணக்கில் கொண்டு 1670இல் இந்திய வணிக நகரங்களுடனான அனைத்து வணிகப் பொருட்களின் ஏற்றுமதி இறக்குமதியைத் தனது வசமாக்கினர். இவ்வணிகப் பொருட்களில் சங்கும் முக்கியமானதாகும். இதனால் சங்குப்பொருளின் வணிகத்தை ஏற்று நடத்திய வணிகர் பெரிதும் பாதிக்கப்பட்டனர்[4]. மேலும் 1670க்கு பிறகு வங்காளத்திற்கான மற்ற வணிகப் பொருட்களுடன் சங்கு ஏற்றுமதியையும் கிழக்கிந்தியக் கம்பெனியே ஏற்று நடத்தியது[5]. இக்கால கட்டத்தில் இலங்கை மற்றும் தூத்துக்குடி ஆகிய கடல் பகுதியில் எடுக்கப்பட்ட சங்குகள் வங்காளத்திற்கு டச்சுக்காரர்களாலும் பின்னர் ஆங்கிலேயர்களாலும் மற்ற வணிகப்பொருட்களுடன் அனுப்பப்பட்டதை 17ஆம் நூற்றாண்டின் *பலசார் நாட்குறிப்பு* (*Balasar Diary*)

---

[1] Jayaseela Stephen 1998:72
[2] Jayaseela Stephen 1998:82
[3] Jayaseela Stephen 1998:81
[4] Arasaratnam 1996:109
[5] Arasaratnam 1996:127

சுட்டியுள்ளது[1]. கி.பி.1644இல் பொக்கேரோ (Bocarro) எனும் போர்த்துக்கீசியர் எழுதிய சுவடியில் தூத்துக்குடியிலிருந்து சங்கு வங்கத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டதாகவும் அவற்றைக் கறுப்பு நிறத்தவர் வளையல்களாகச் செய்ததாகவும் குறிப்பிடுகிறார்[2]. கி.பி.1673இல் வருகைபுரிந்த ஜான் ஃபிரையர் (John Fryer) தூத்துக்குடிப் பகுதியில் சங்குகள் பிடிக்கப்பட்டதாகவும், அதில் முத்து உருவாகும் எனவும் குறிப்பிடுகின்றார்[3]. கி.பி.1700இல் சங்கு, முத்து ஆகியன அதிக வருமானம் தரும் தொழிலாக இருந்தது. இக்கடல்பகுதியில் எடுக்கப்படும் சங்குகள் யாவும் டச்சுக்காரர்களிடம் அளிக்கப்படவேண்டும் எனவும், அவ்வாறு அளிக்காமல் வேறு வணிகர்களிடம் விற்க முனைந்தாலோ அல்லது மறைத்து வைக்க முற்பட்டாலோ அவர்களைக் கொல்லவும் தயங்கவில்லை என ஃபாதர் மார்டின் (Father Martin) குறிப்பிடுகிறார். இவற்றை மிகக்குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு வங்காளத்தில் விற்பதாகவும் அவர் குறிப்பிடுகிறார்[4]. மேலும் இந்தியப் பகுதியில் கிடைத்த சங்குகளின் வணிகத்தையும் டச்சுக்காரர்களே மேற்கொண்டனர். இதற்கு முன்னர் வணிகர்களின் போட்டியினால் ஆண்டிற்காண்டு வங்காளத்தில் சங்கின் விலை மாறுபட்டிருந்தது. ஆனால் டச்சுக்காரர்கள் சங்கு வணிகத்தைச் சொந்தமாக்கியதால் இதன்விலை 1680களில் கூடியது[5].

சேதுபதி மன்னரின் கி.பி.1678ஆம் ஆண்டு செப்பேட்டில் ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களில் சங்கு குறிப்பிடப்படுகிறது. மேலும் பிறபொருட்களுடன் சங்கிற்கும் வரி விதிக்கப்பட்டது என்பதனையும் குறிப்பிடுகிறது[6]. இக்குறிப்பினால் இராமநாதபுரம் கடல் பகுதியில் சங்கெடுக்கும்

---

[1] Bowrey 1967:208-9

[2] Yule and Burnell 1996:184

[3] Yule and Burnell 1996:185

[4] Lockman 1743:381

[5] Om Prakash 1988:167

[6] *கமால் 2001:91*

உரிமை முழுவதுமாகக் காலனியாதிக்கத்தின் பிடியில் இல்லாதிருந்தது எனலாம்.

1727இல் ஹேமில்டன் (Hamilton) என்பார் வணிகப் பொருட்களில் சங்கைப்பற்றியும், வங்கத்தில் இவை வளையல்களாகச் செய்யப்படுவதாயும் கூறுகின்றார்[1]. 1770இல் ராய்னல் (Raynal) என்னும் போர்த்துக்கீசியர் தூத்துக்குடியில் சங்கெடுக்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறார்[2]. இச்சான்றுகளை நோக்கும்போது தூத்துக்குடி, இராமேஸ்வரம் ஆகிய கடல் பகுதிகளில் காலனியாதிக்கக் காலங்களில் சங்கெடுக்கும் உரிமை அரசியல் காரணங்களால் வேறுபட்டு வந்துள்ளது எனலாம். கடல் ஆளுமை போர்த்துக்கீசியர், டச்சுக்காரர்களிடம் இருந்திருந்தாலும் தமது வணிக நோக்கத்திற்காகவும், நல்லிணக்கத்திற்காகவும் தூத்துக்குடிப் பகுதியில் மதுரை நாயக்கருக்கும், நவாப் மன்னர்களுக்கும் சங்கெடுத்தலில் சில உரிமைகளை அவர்கள் அளித்து வந்துள்ளனர். இதே போன்று இராமேஸ்வரம் பகுதியில் நிகழ்ந்த சங்கு குளித்தலில் சேதுபதி மன்னர்களும் தமது பங்கைப் பெற்றனர் என்பதை வரலாற்றுச் சான்றுகள் மூலம் அறியமுடிகிறது. 18ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி வரை டச்சுக் கம்பெனியாருக்கும், மதுரையை ஆண்ட நவாப்பிற்கும் கருத்து வேறுபாடுகளும், குழப்பங்களும் இருந்துள்ளன. 1801ஆம் ஆண்டு நவாப் மன்னர்களிடம் இருந்து ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனி மதுரையைக் கைப்பற்றிய பின் சங்கெடுக்கும் முழு உரிமையும் ஆங்கிலேயர் வசமானது. இராமநாதபுரம் சேதுபதி மன்னருக்கும், ஆங்கிலேயருக்கும் இராமேஸ்வரம் சிவகங்கைப் பகுதியில் சங்கெடுப்பதில் போட்டி நிலவியது. ஆங்கிலேயர் காலங்களில் நிகழ்ந்த சங்கெடுத்தலின் வரலாறு பற்றிய செய்திகளை ஹார்னல் தெளிவாகத் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்[3]. இக்காலத்தில் சங்கெடுக்கும் தொழில் மற்றும் முத்துக்குளித்தல் அத்துறையின் கண்காணிப் பாளர்களின் ஆளுகையின் கீழ் நடைபெற்றது. அரசு தாமாகவோ, அல்லது தனியாருக்கு

[1] Yule and Burnell 1996:185

[2] Yule and Burnell 1996:186

[3] Hornell 1914:12-40

இதனை வாடகையாகவோ அளித்தது. இம்முறை ஆண்டாண்டுக்கு மாறுபட்டுள்ளது. முத்துக்குளித்தல் தொழிலைவிடச் சங்கெடுத்தல் வருமானம் உள்ள தொழிலாக இருந்துள்ளது.

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மீன் துறைக் கண்காணிப்பாளராயிருந்த ஹார்னல், அவ்வருமானத்தை அறுதியிட்டுக் கூற முடியாது என்பார். மேலும் முத்துக் குளித்தலை விட்டு நிரந்தர வருமானம் கிடைக்கும் சங்குக் குளித்தல் மேன்மையானது என ஆங்கில அரசுக்குப் பரிந்துரைத்துள்ளதைக் கொண்டு, சங்கெடுக்கும் தொழிலில் கிடைக்கும் நிரந்தர வருவாயை அறியலாம்[1]. விடுதலைக்குப் பின்னர் சங்கெடுக்கும் உரிமை மாநில அரசுகளுக்கு விடப்பட்டு சங்கெடுத்தல் நடைபெற்று வருகிறது.

இராமேஸ்வரம்; கீழக்கரைப் பகுதிகளில் சங்குக் குளிப்போர் மற்றும் வணிகர்களிடம் நிகழ்த்திய நேர்காணலின்போது பல விவரங்கள் அறியப்பட்டன. 1972ஆம் ஆண்டுவரை சங்கு குளித்தல் தனியாருக்கு வாடகைக்கு விடப்பட்டது. எனவே சென்னை முதல் குமரி வரையுள்ள கடலில் எடுக்கப்படும் சங்குகளை நீர்மூழ்குபவரிடம் குத்தகை எடுப்போர் விலைக்குப் பெற்றனர். இவை ஓரிடத்தில் சேமிக்கப்பட்டு மொத்தமாக வங்காளத்திற்கு அனுப்பப்பட்டன. கீழக்கரையில் கிட்டங்கி என்னும் இடத்தில் இராமேஸ்வரம் பகுதிகளில் எடுக்கப்படும் சங்குகள் சேமிக்கப் பட்டன. 1972க்குப் பிறகு அரசு குத்தகை முறையை நீக்கிச் சங்கு குளிப்போரிடம் தனித்தனியாக உரிமக்கட்டணம் பெறுகிறது. இதனால் சங்குகளை வாங்கும் வணிகர்கள் அதிகமாயினர். மேலும் சங்குகள் கிட்டாதபோது நீர்மூழ்குநர் வருமானமற்று இருந்தனர். குத்தகைதாரர்களின் தொழிற்கூடங்கள் ஆதரவற்றுப்போயின. தற்போது தமிழகத்தில் குறைந்தது 15 சங்கு வணிகர்கள் பெரிய அளவிலான தொழிலை மேற்கொண்டுள்ளனர். கிடைக்கின்ற சங்குகளில் பெரும்பகுதியை எவ்வித மாற்றமுமின்றி வங்காளத்திற்கு அனுப்புகின்றனர்.

---

[1] Hornell 1922:2

இச்சான்றுகளை நோக்கும்போது இடைக்காலங்களில் பெரும்பாலான சங்குகள் வங்கப்பகுதிக்கு ஏற்றுமதி செய்யப் பட்டதை அறிய முடிகிறது. வங்கத்திற்கு அனுப்பப்பட்ட சங்குகள், வளையல்களாகச் செய்யப்பட்டு கிழக்கிந்தியப் பகுதிகளான அஸ்ஸாம், திபெத் ஆகிய இடங்களுக்கும் அனுப்பப்பட்டன.

18ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தமிழகக் கடற்கரைப் பகுதியிலிருந்து சங்கு மற்றும் சிப்பிகள் தொடர்ச்சியாக ஏற்றுமதி செய்யப்பட்டன[1]. பிரம்மபுத்ரா, மேக்னா நதிகளின் வழியாக வங்காளத்தில் இருந்து அஸ்ஸாமிற்குப் படகுகள் மூலம் பொருள்கள் அனுப்பப் பட்டன. அவ்வகைப் பொருட்களில் பாக்கு, புகையிலை மற்றும் தொழில்கூடங்களில் உருவாக்கப்பட்ட பொருட்களும் அடங்கும்[2]. இச்சங்கு வளையல்கள் வங்காளத்தில் செய்யப்பட்டு அனுப்பப்பட்டிருக்க வேண்டும்.

மேற்கு வங்காளத்தில் 12-13 ஆயிரம் தொழிலாளர்கள் சங்கு அணிகலன்கள், அழகுப் பொருட்கள் செய்யும் பணியில் தற்பொழுது ஈடுபட்டுள்ளனர்[3]. பண்டைக்காலம் முதல் இந்திய விடுதலைக்கு முன்னர்வரை இலங்கைக் கடற்பகுதியில் சங்குக் குளிக்கும் தொழிலில் இந்திய மீனவர்களே ஈடுபட்டிருந்தனர். இந்திய விடுதலைக்கு பின்னர் அப்பகுதியில் சென்று சங்கெடுக்க முடியாத காரணத்தால் இலங்கையில் இருந்து வங்காளத்திற்கு அனுப்பப்படும் சங்குகளின் எண்ணிக்கை குறைந்துள்ளது. எனவே தமிழகம் மற்றும் ஏனைய இந்தியக் கடற்பகுதியில் பிடிக்கப்படும் சங்குகள் மட்டுமே மேற்கு வங்காளத்திற்கு அனுப்பப் படுகின்றன. தற்பொழுது வங்காளத்தின் தேவையில் 40 விழுக்காடு சங்குகளே கிடைக்கின்றன. இவை தமிழகத்திலிருந்து 96 விழுக்காடும் கேரளத்திலிருந்து 3 விழுக்காடும் குஜராத்திலிருந்து 1 விழுக்காடும் அனுப்பப்படுகின்றன[4].

---

[1] Datta 1930:410

[2] Datta 1930:413

[3] Nayar and Mahadevan 1974:122

[4] Devaraj and Ravichandran 1991:100

# 3. சங்கின் பெயர்களும் தொன்மங்களும்

*சங்கு* என்னும் சொல் வடமொழியிலிருந்து பிறந்தது. *சங்கா* (Sankha) என்பது சமஸ்கிருதச் சொல். இச்சொல்லே தமிழில் பெயர்ந்து சங்கு எனக் குறிக்கப்பெறுகிறது. சங்க இலக்கியங்களில் சங்கு என்னும் சொல் எவ்விடத்திலும் சுட்டப்பெறவில்லை. வலம்புரி, வளை, கோடு, பணிலம், நந்து, நாகு என்றே அது அழைக்கப்பட்டுள்ளது. போரின் நிமித்தம் சங்கொலிப்பதும், தலைவனின் ஊர்வலம் செல்லும்போதும், காலை வேளைகளில் சங்கொலிப்பதுமே சுட்டப்பெற்றுள்ளது. எனவே சங்க காலத்தில் சங்கு, சமய முக்கியத்துவம் பெறவில்லை. சங்கம் மருவிய காலத்தில் தமிழகத்தில் வைணவத்தின் பரவல் காணப்பட்டதால் திருமாலின் ஐம்படைகளுள் ஒன்றாகச் சங்கு இலக்கியங்களில் சித்திரிக்கப்பட்டுள்ளது. *பரிபாடலில்* திருமாலின் ஐம்படைகளுள் ஒன்றாகச் சங்கு குறிக்கப்பட்டாலும் வலம்புரி என்றே அது வழங்கப்பட்டது. பின்னர் வந்த காப்பியங்களான *சிலப்பதிகாரத்தில் (11:43)*, பகையணங்காழியும் பால் வெண் சங்கமும் என்று திருமாலின் படைக் கருவிகளாகச் சங்கு குறிக்கப்பெறுவதும், *மணிமேகலையில் (8:5-6)* சங்குழு தொகுப்பின் முத்துவிளை கழனி எனச் சுட்டப்பெறுவதும், *பெருங்கதையில் (1.57:58)* சங்கப் படவும்ம் கம்பளவிதானமும் என்னும் வரிகளிலும் சங்கு என்ற சொல் தொடக்கநிலையில் காணப்படுகிறது. பின்னர் எழுந்த இலக்கியங்களில் சங்கு என்னும் சொல்லோடு பழந்தமிழ்ச் சொற்களான வலம்புரி, கோடு, வளை, பணிலம், நாகு, நந்து என்னும் சொற்களும் பயின்று வந்தன. ஆனால் இலக்கியங்கள் தவிரப் பேச்சு வழக்கில் இவை பயன்படுத்தப்படவில்லை. காட்டாக, இடைக்காலச் சோழர்களின் கல்வெட்டுகளில் சங்கு என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. அன்று தொட்டு இன்றுவரை

இச்சொல்லே தமிழ் வழக்கில் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

காலத்தால் முற்பட்டதாகக் கருதப்படும் *திவாகர நிகண்டில்* சங்கு, நந்து, பணிலம், வளை, நாகு, சுரிமுகம், கம்பு, கோடு, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் எனக் குறிக்கப்படுகிறது[1]. பின்னர் இயற்றப்பட்ட நிகண்டுகளைக் காலவரிசையில் நோக்கினால் பல புதிய சொற்கள் மிகுந்து வருவதைக் காணலாம் (அட்டவணை-1). *சூடாமணி, அகராதி, ஆசிரிய, நாமதீப* நிகண்டுகளில், சுத்தி, வண்டு, வெள்ளை, இடம்புரி, வாரணம், சலஞ்சலம், பாஞ்சசன்னியம், கம்புள், மனவு, ஏறு ஆகிய சொற்கள் புதியதாகப் பயன்படுத்தப்பெறுவதைக் காணலாம்.

*திவாகர நிகண்டு* வலம்புரியிற் சிறந்தது சலஞ்சலம் எனவும் சலஞ்சலத்தினுஞ் சிறந்தது பாஞ்சசன்னியம் எனவும் குறிப்பிடுகிறது. *ஆசிரிய நிகண்டு* சங்கினில் சலஞ்சலம் சிறந்ததெனக் குறிக்கிறது. *சூடாமணி நிகண்டு* வலம்புரியின் பெயர் கொக்கரை எனவும், சலஞ்சலத்தின் பெயர் பணிலம் எனவும் சுட்டுகிறது. இவை தவிர *பிங்கல, சூடாமணி, நாமதீப* நிகண்டுகள் சிப்பி ஆயிரம் சூழ்ந்தது இடம்புரி எனவும், இடம்புரி ஆயிரம் சூழ்ந்தது வலம்புரி எனவும், வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம் எனவும், சலஞ்சலம் ஆயிரம் சூழ்ந்தது பாஞ்ச சன்னியம் எனவும் குறிப்பிடுகின்றன. மேலும்

சங்கும் பிறவும் சலஞ்சலம் ஒன்
றினுக்குஆ யிரம் சூழ் வலம்புரியும்
கலந்து வளர்த்த வலம்புரி ஒன்
றினுக்குஆ யிரம் சூழ் இடம்புரி வெண்
சங்கும் தவழும் தமிழ்நாடா!

(*செழியதரையன் பிரபந்தங்கள் 45:5-7*)

என்று *செழியதரையன் பிரபந்தங்கள்* குறிக்கிறது.

---

[1] தாண்டவராய முதலியார் 1904

மெல்லுடலியான சங்கிற்கு வளைந்த அகம் உடைய ஓடு உள்ளதால் வளையகம் எனவும் வழங்கப்பெற்றது[1].

சிப்பிகள் கடலில் பாறைகளிலோ அல்லது வேறு திண்மப் பொருள்களிலோ ஒட்டி இறுதிவரை வாழும் இயல்புடையன. சங்கு இடம்பெயர்ந்து வாழும் தன்மையதாகையால், பாஞ்சசன்னியம் சலஞ்சலங்கள் சூழ்ந்தது, சலஞ்சலம் வலம்புரிகள் சூழ்ந்தது என்னும் கூற்றில் உண்மையில்லை எனலாம். உலகில் இடம்புரி, வலம்புரி என்னும் இருவகைச் சங்குகளைத் தவிர வேறு வகைச் சங்குகள் எங்கும் இல்லை.

சங்குகள் கூடி வாழும் இயல்புடையனதாயினும் அவை வலம்புரியைச் சுற்றி இருப்பதோ, வலம்புரிகள் சலஞ்சலத்தைச் சுற்றி இருப்பதோ அறிவியல் நோக்கில் உண்மையல்ல. வலம்புரிச் சங்குகள் மிக அரிதாகவே கிட்டுகின்றன. அவை உயர்வாகக் கருதப்படுவதால் கோயில்களில் பெரும்பாலும் பயன்பாட்டில் உள்ளன. சலஞ்சலம், பாஞ்ச சன்னியம் ஆகிய சங்குகள் உலகில் வேறெங்கும் இருப்பதற்கான சான்றுகளும் இல்லை. ஆங்கிலேய அலுவலர் மெக்லீன் என்பார் சலஞ்சலம் என்ற வகைச் சங்கு பாடல்களில் பயன்படுத்தப்படுகிறதென்றும் ஆனால் அவை இதுவரை அறியப் படவில்லை எனவும் கூறுவது இங்குச் சுட்டத்தகுந்தது[2]. சங்கு பற்றிய நீண்ட ஆய்வுகள் செய்த ஹார்னலும் சலஞ்சலம், பாஞ்சசன்னியம் பற்றிக் குறிப்புகள் எதுவும் தரவில்லை.

சமயப் பயன்பாட்டில் இறைவனின் ஐம்படைகளுள் ஒன்றான சங்கை மனிதருக்கு இயல்பாகக் கிட்டாத பொருளாக உயர்த்திச் சொல்லுதல் மரபாயிருந்திருக்கலாம். இவ்வகையிலேயே சலஞ்சலம், பாஞ்சசன்னியம் ஆகிய சொற்கள் இறைவனின் உடைமையாகக் காட்டப்பட்டிருத்தல் வேண்டும். காட்டாக, நாலாயிர திவ்ய பிரபந்தப் பாடல்களில்

---

1 கதிரைவேற்பிள்ளை 1918

2 Maclean 1893:187

இறைவனைப் பற்றிச் சங்கிடம் வினவும் ஏழாம் திருமொழியில் 'நற்சங்கே', 'கோலப்பெருஞ்சங்கே', 'சலஞ்சலமே', 'வலம்புரியே', 'பாஞ்சசன்னியமே' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

வலம்புரிச் சங்குகள் எந்த இல்லத்தில் இருக்கிறதோ அங்கு அனைத்து செயல்களும் வெற்றியடையும், ஆயுள், செல்வம், பசு, மக்கட்பேறு, ஐஸ்வரியம் முதலியன பெருகும் என்றும் *சங்கபரீக்ஷா* என்னும் நூல் கூறுகிறது. வலம்புரிச் சங்கினால் மஹாவிஷ்ணுவிற்கும், சிவபெருமானுக்கும் அபிஷேகம் செய்து வழிபட்டால் ஒருவருக்கு ஏழு பிறவிகளில் செய்த பாவமும் தொலைந்து விடும் என்று *வராக புராணத்திலும், ஆன்னிக ஆரை தத்துவம்* என்னும் நூலிலும் கூறுப்பட்டுள்ளது[1].

சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என்ற சொற்களும் வடமொழியின் தாக்கத்தால் தமிழில் வழங்கி வருகின்றன என உறுதியாகக் கூறலாம். சலஞ்சலம், பாஞ்சசன்னியம் ஆகிய சங்கு வகைகளைப் பற்றிச் சமஸ்கிருத நூல்கள் குறிப்பிடுகின்றன[2].

ஆயிரம் வலம்புரிச் சங்குகளுக்கு ஒப்பாக இவ்வகைச் சங்கு இருப்பதாக இந்நூல்கள் சுட்டுகின்றன. "இது தீயின் ஒளியை (வெளிர் சிவப்பு நிறத்தை) உடையதாகவும், இச்சங்கு நம் அருகிலிருக்கும் போதே இனிமை பயப்பதாகவும் இதன் உட்புறத்தே வெள்ளை நிறத்தில் மூன்று கோடுகள் மேல் நோக்கிச் செல்வதாகவும் இருக்கும். இந்த மூன்று கோடுகளும் மும்மூர்த்திகளைக் குறிக்கும். இம்மூன்று கோடுகள் மூன்று வேதங்களின் உருவமாகும். 'சலஞ்சலம்' என்ற இவ்வகைச் சங்குகளின் பெயரைக் கேட்டதுமே நாம் செய்த பாவங்கள் அழியும். இச்சங்கைத் தரிசனம் செய்தால் யானை, குதிரை, செல்வம் போன்ற செல்வத்தை உறுதியாக ஒருவன் அடைவான். இச்சங்கின் அடியில் பிரமனும், நடுவில்

---

[1] ஸ்ரீநிவாசன் 1984:6

[2] ஸ்ரீநிவாசன் 1984:6-7

விஷ்ணுவும், நுனியில் சிவனும் இருக்கின்றனர். இதனை மக்கள் வழிபட்டால் மும்மூர்த்திகளையும் வழிபட்ட பலனை அடைவார்கள். இந்தச் சங்கை எந்த அரசன் வழிபடுகிறானோ அவன் போர்க்களத்தில் எதிரியை வெல்வான். இதைச் சேகரித்துக் கருவூலத்தில் வைத்தால் கருவூலம் பெருகும். எந்த நாளும் அவன் சக்கரவர்த்தியாகவே இருப்பான்" என்றும் சமஸ்கிருத நூல்கள் கூறுகின்றன.

திருமாலாகிய நாராயணனின் ஐம்படைகளுள் பாஞ்ச சன்னியமும் ஒன்று. நாராயணன் என்ற சொல்லினாலேயே அவன் அப்பு தத்துவத்தின் அதிஷ்டான தேவதை என்பதை உணர முடியும். நாராயணனின் (நாரம் - தண்ணீர், அணான் - உற்பத்தியானவன்) தத்துவத்தைக் குறிக்கவே சங்கு நாராயணனின் கைகளை அலங்கரிக்கிறது. பாஞ்ச சன்னியம் என்ற பெயருள்ள சங்கு நான்கு வேதங்களிலும் அதன் சாகைகளிலும் பரவலாகச் சுட்டப்படுகிறது. இது தூய்மையான வெள்ளை நிறமாகவும் இதன் உட்பக்கமாக வெள்ளை நிறத்தில் ஐந்து கோடுகள் மேல்நோக்கிச் செல்லும் என்றும் அறிஞர்கள் கூறுவர்[1].

சங்கு, கடலில் இருந்து எடுக்கப்பட்டபின் அதன் உள்ளே உயிர் வாழும் மெல்லுடலி கொல்லப்பட்டு சுத்தப்படுத்தப்படும். மேல்பகுதியைத் தேய்த்து வழுவழுப்பாக்கினால் வெண்ணிறச் சங்கு கிட்டும். இதன் மேல் வடிவங்களை செதுக்குவது, வண்ணங்கள் பூசுவது, உச்சி, கீழ்ப்பகுதிகளை உயர்ந்த உலோகங்களால் அலங்கரிப்பது ஆகியன அதன் தேவைக்கேற்பச் செய்யப்பெறும். கடவுளரின் கையில் சங்கு காண்பிக்கப் பெறுவதால் இயல்பாக உள்ள சங்கு கைவினைக் கலைஞர்களால் மேலும் அழகுபடுத்தப்படுகின்றது. இவ்வகைச் சங்குகளை அடியார்கள் சலஞ்சலம் எனவும், பாஞ்சசன்னியம் எனவும் போற்றியிருக்கின்றனர். கடவுளரின் கையில் உள்ள சங்குகள் பல வடிவங்களில் காட்டப் பெறுகின்றன. இதற்கு முதன்முதலில் தென்னிந்தியாவில்

---

[1] ஸ்ரீநிவாசன் 1984:7

திருமாலின் உருவங்கள் படைத்த பல்லவ, சாளுக்கியச் சிற்பங்களைக் காட்டாகக் கொள்ளலாம். சாளுக்கியர் கால கட்டத்தில் பொறிக்கப்பட்ட சங்கின் அலங்காரங்களும், பல்லவர் காலத்தில் காட்டப்படும் சங்கும் அழகுறுத்தப் பட்டன[1](படம் 13அ,ஆ). இதைக் கண்ட அடியவர்கள் சங்குக்குப் புதிய சொற்களைப் பயன்படுத்தி இருக்கலாம். மேலும் விளங்கு கொடி நந்தின் வீங்கிசை நாவும் (*சிலப்பதிகாரம் 26:203*) என்னும் அடியில் கொடி நந்து என்னும் சொல்லுக்குக் கொடியும் நந்தும் முகத்துக் கட்டுவார் போலும் என உ.வே. சாமிநாதையர் விளக்கம் கொடுத்துள்ளார். இவை சங்கில் கொடிகளால் செய்யப்படும் அலங்காரமாகவே இருந்திருத்தல் வேண்டும். எனவே சலஞ்சலம், பாஞ்ச சன்னியம் ஆகிய சொற்கள் இறைவனிடம் உள்ள சங்கின் பெருமையை உயர்த்திக் காட்டுவதற்காகவே பயன்படுத்தப்பட்டன எனவும், உயிரியல் கோட்பாட்டின்படி தனித்த இயல்புடன் பிறப்பவையல்ல என்பதையும் உறுதியாகக் கூறலாம்.



படம் 13 அ. அழகூட்டப்பட்ட சங்குகள்
( நன்றி – Hornell 1914)

[1] Sivaramamurti 1950:47.

சங்கு பற்றி வழங்கும் பிற சொற்கள் எவ்விதம் உருவானவை என்பதற்கான சான்றுகள் இல்லை. ஆயினும், அவை கிடைக்கும் இடம், உருவம் ஆகியனவற்றைக் கொண்டு பிறசொற்கள் உருவாகியிருக்கலாம்.



படம் 13 ஆ. சாளுக்கியர், பல்லவர் காலச்சிற்பங்களில் அழகூட்டப்பட்டசங்கு வடிவங்கள் (நன்றி – Sivaramamurti, 1950)

நன்னீரில் வயலில் உயிர் வாழும் சிறிய வகைச் சங்குகளைப் பற்றிப் போதிய சான்றுகள் இல்லையெனினும் *செழியதரையன் பிரபந்தங்களில்* வயல்களின் சங்கும், செந்நெல், கரும்பு இரண்டிலுமுள்ள முத்துக்களும்

வயல்களின் பாய்ச்சலால் சோர்வுற்றன என்னும் செய்தியைக் கொண்டு வயல்புறத்தில் நன்னீர் நிலைகளில் காணப்படும் சிறிய சங்குகளைப் பற்றிய இலக்கியக் குறிப்பை உணரலாம்[1].

## வடமொழியில் சங்கு

சமஸ்கிருதத்தில் கம்பு, கம்போஜம், அப்ஜம், ஜலஜம், அர்ணோபவம், பாவனத்வனி, அந்த:, குடிலம், மகாநாதம், ஜீவா, ஸ்வேதம், பூத:, முகர:, தீர்க்க நாதம், பகுநாதம், ஹரிப்ரிய: என்னும் பல பெயர்களில் சங்கு அழைக்கப்படுகிறது. ஒரு சமஸ்கிருத வழக்கிலிருந்து துன்பத்தையொழித்து இன்பத்தைக் கொடுப்பதால் சங்கு எனப் பெயர் பெற்றது[2]. இதைப் போலவே மங்களமான இன்பத்தை விரும்புகின்றவர்களுக்கு விரும்பியதைக் கொடுப்பதால் 'கம்பு' என்ற பெயரைப்பெற்றது.

சமஸ்கிருதத்தில் வழங்கப்படும் சங்கின் வேறுபெயர்கள் அதன் குணத்தை உணர்த்துவதாகக் கொள்ளலாம். எம்.எம்.வில்லியம்ஸ் என்பார் தயாரித்த சமஸ்கிருத ஆங்கில அகராதி சங்கின் வேறு பெயர்களுக்குப் பல்வேறு பொருளைத் தருகிறது[3].

முகர (பக்.820), தீர்க்க நாதம் (482), பஹுநாதம் (724), மஹாநாதம் (794) ஆகியன மிகுந்த ஒலியைக் குறிப்பன. ஹரிப்பிரியா (1290) திருமாலுக்கு விருப்பமானது எனவும், ஸ்வேதா(1106) சிறிய வெண்மையான சங்கையும், ஜீவா (422) என்பது உயிர் மூச்சையும் அப்ஜம் (60), ஜலகம் (416), அர்ணோபவம் (90) என்பன வளைந்துள்ள உருவத்தைக் குறிப்பதால் சங்கு மேற்கூறிய பல பெயர்களால் அழைக்கப்பட்டது. மேலும் பாவனத்வனி (623), புத (640) ஆகியன அழுக்ககற்றும் ஆற்றலைக் குறிப்பதால் சங்கிற்கும் இப்பெயர் ஏற்பட்டது எனலாம். கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த *திவாகர நிகண்டில்* தமிழில் சங்கிற்குக்

---

[1] சண்முகம் பிள்ளை 1986:307

[2] ஸ்ரீநிவாசன் 1984:2

[3] Williams 1981

கம்பு எனவும் பெயரிட்டழைப்பதையும் *வால்மீகி இராமாயணத்தில்* இராமனின் கழுத்தை கம்புக்ரீவ: (சங்கு போன்ற கழுத்தையுடையோன்) என்று கூறுவதையும் இங்கு சுட்டத்தக்கது.

'சம்' அல்லது 'சங்' எனப்படும் ஒலி சமஸ்கிருதத்தில் உணர்ச்சிகளைத் தட்டிக்கொடு, மெல்லமையூட்டு, நோவு வகையில் ஆற்று என்னும் பொருளையும் அல்லது அதைச் சார்ந்த பொருளையும் உணர்த்தும்[1]. இது சங்கைக் காதருகில் வைத்தால் மன அமைதி கிடைக்கும் ஒலியைத்தரும் என்ற விளக்கம் பொதிந்ததாகலாம். சமஸ்கிருத நூல்களில் இடம்புரிக்குச் 'சங்கம்' என்றும், வலம்புரிக்குத் 'தக்ஷிணாவர்த்தம்' என்றும், 'சலஞ்சலம்', என்றும், 'பாஞ்சசன்னியம்' என்றும் வழங்கப் பெறுகின்றன.

ஆண், பெண், அலி என்ற மூன்று வகைச் சங்குகள் உண்டு என *அம்சுமதாகமத்தில்* குறிப்பிடப்பட்டுள்ளது. நுனியும், நடுவும், பின்பகுதியும் ஒத்த அளவில் இருக்கும் சங்கு ஆண்சங்கு என்றும், நுனி நீண்டு பின்பகுதி குறைவாக அமைந்த சங்கு பெண்சங்கு எனவும், குறைந்த நுனியும், நீண்ட பின்பகுதியும் அமைந்த சங்கு அலி சங்கு எனவும், சங்காபிஷேகம் படலத்தில் கூறப்படுகிறது[2].

*சங்க பரீக்ஷா* என்னும் நூல் சங்கு உண்டாகும் விதம் பற்றிக் குறிப்பிடுகிறது. கடல் மீது மழை பொழியும்போது சங்குகள் உற்பத்தியாகிறதென்றும் குறிப்பாகத் தென்னிந்தியாவில் ஆனிமாதம் விசாக நட்சத்திரத்தில் கடல் மீது மழை பொழியும்போது அந்த மழைத்துளியால் தக்ஷிணாவர்த்தம் என்ற சங்கினவகை (வலம்புரிசங்கு) உண்டாகின்றது என்றும் கூறுகின்றது[3]. ஏற்கெனவே சங்கு உருவாகும்விதம் பற்றிய குறிப்பு இரண்டாம் இயலில்

---

[1] Maclean 1893:187

[2] ஸ்ரீநிவாசன் 1914:4-5

[3] ஸ்ரீநிவாசன் 1984:3-4

விளக்கப்பட்டுள்ளதை நோக்கினால் இக்கூற்றில் உண்மையில்லை என்பது புலனாகும்.

சங்குகளுக்குத் தலைப்பகுதியில் காணப்படும் துளை (ஓட்டை) இல்லாமலிருந்தால் அதனைத் தரங்குறைந்ததாகக் கருதுவர். இவற்றைச் 'சங்க நாகம்' எனச் சமஸ்கிருதத்தில் அழைப்பர். இவ்வகைச் சங்குகளை ஆநிரைகளின் கழுத்தில் கட்டினால் 'திருஷ்டி தோஷம்' நீங்கும் என்று சோதிட நூல் கூறுகிறது[1].

### சங்கு வகைகளின் வணிகப் பெயர்கள்

வங்காளத்தில் சங்கறுக்கும் தொழில்புரிவோர், வணிகர்கள் சங்கின் உருவ அமைப்பு, நிறம், அளவு, தரம் கொண்டு அவற்றைப் பலவாறு பெயரிட்டு அழைத்தனர். பார்வையிலேயே சங்கின் வகை, பெறப்பட்ட இடம், அதன் விலை ஆகியவற்றைக் கணிக்கும் திறமையை அவர்கள் பெற்றிருந்தனர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சங்குகளைப் பலவேறு வகைப்படுத்தி அழைத்தனர்[2]. பெரும்பாலும் அவை சங்கெடுக்கும் இடங்களைக் குறிப்பதாக அமைந்திருந்தன. எவ்வகைச் சங்கிலிருந்து வளையல்கள் செய்கிறார்களோ அவ்வளையல் பெரும்பாலும் அச்சங்கின் பெயரிலேயே வழங்கப்பட்டன.

*தூத்திக்குடி* (Tutikkudi): இவை திருநெல்வேலி கடற்கரைப் பகுதிகளில் பிடிக்கப்பட்டு சென்னை அரசால் வங்காளத்திற்கு அனுப்பப்பட்டன. தூத்துக்குடியைத் தலைமையகமாகக் கொண்டு இவ்வணிகம் நடைபெற்றதால் இவை தூத்திக்குடி என அழைக்கப்பட்டன எனலாம். இந்தியாவில் கிடைக்கும் சங்கு வகைகளில் இது வளையல் அறுப்பதற்கு உகந்த நேர்த்தியான சங்காகக் கருதப்படுகிறது. இவை அந்தமான் கடற்பகுதியில் கிடைப்பதைப் போல் குறுக்களவு குறைந்து நெட்டையாகவோ அல்லது தஞ்சாவூர் கடற்பகுதிகளில் கிடைக்கும் நீளம் குறைந்து அகலமாக உள்ள

---

[1] *ஸ்ரீநிவாசன் 1984:11*

[2] Hornell 1914:86

சங்குகளைப் போலல்லாமல் சரியான அளவில் இருப்பது அதன் சிறப்பாகக் கருதப்படுகிறது. வானவில் வண்ண மாறுபாட்டுடன் கூடிய பால்நுரை வெண்மையுடையதாலும், கடினத்தன்மையுடன் மேல்பகுதி சீராக இருப்பதாலும் இச்சங்கை வழுவழுப்பாக்குவது எளிமையானதாகக் கருதப்படுகிறது.

*ராமெசாரி* (Ramessari): இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களின் கட்டுப்பாட்டில் கீழக்கரை, இராமேஸ்வரம் ஆகிய கடல்பகுதிகளில் எடுக்கப்படும் சங்குகள் *ராமெசாரி* என வழங்கப்படுகின்றன. இச்சங்குகள் தூத்துக்குடியில் எடுக்கப்படும் சங்குகளைவிடச் சற்றே தரம் குறைந்தவை. நல்ல விலைக்கு விற்பதற்காக இவற்றை தூத்துக்குடிச் சங்குகளுடன் கலந்து விற்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது.

*ஜம்மைபட்டி* (Jammaipatti) : மண்டபம் வடக்குக் கடலான பாக் விரிகுடாவில் தொண்டி கடல்பகுதிவரை பிடிக்கப்படும் இவை தரத்தில் ராமெசாரியைவிடக் குறைந்தவை.

*பட்டி* (Patti) : இலங்கை[illegible]டக்கு - வடமேற்குக் கடல்பகுதியில் உயிருடன் பிடிக்கப்படும் சங்குகள் *பட்டி* எனப்படும். *பட்டி* வகைகள் உருவத்திற்கேற்றபடி வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றன.

*நொய்யகாட்பட்டி* (Noyakhad patti or Standard patti): இலங்கைக் கடல்பகுதியில் பிடிக்கப்படும் சங்குகளில் நொய்யகாட்பட்டி சிறந்த தரமுடையது. நொய்யகாட் என்பது இலங்கையின் நெடுந்தீவினைக் குறிப்பதாகலாம். இவை மன்னார் தீவிற்கருகிலும் மிக அதிகமாகக் கிடைக்கின்றன. அளவில் *சிறிய பட்டி* வகைகளும் *நீளமான பட்டி* வகைச் சங்குகளும் இங்குக் கிடைக்கின்றன. *கலப்புப் பட்டி* எனப்படும் சங்கு வகைகள் சிங்கப்பூர் கடல் பகுதியில் பிடிக்கப்பட்டு யாழ்ப்பாணம் வழியாக வங்காளத்துக்குக் கொண்டு வரப்படுகின்றன.

*தோலா* (Dhola) : இவை இலங்கை யாழ்ப்பாணக் கடல்கழிமுகங்களில் (lagoon) ஆழம் குறைந்த மணற்பாங்கான பகுதிகளில் கிட்டும் உயிரற்ற சங்குகளாகும். இச்சங்கெடுப்போர் இரும்புக் கம்பியைத் தரையில் குத்திப் பார்த்துத் தேடி எடுப்பர். இவை சுண்ணாம்புக்கல் போலவும் பளபளப்பற்றதாகவும் உள்ளதால் தரத்தில் குறைந்த வளையல்கள் இவற்றில் இருந்து செய்யப்படுகின்றன. இவற்றைப் பெரும்பாலும் வடக்கு வங்காளத்தில் பலியா சாதிப்பெண்கள் கையுறை (gaunlets or compound braclets) போன்று வரிசையாக அணிவர்.

*கர்பகி* (Gharbaki) : உயரம் குறைந்த அகலம் கூடிய (Squat) சங்குகளான இவை தஞ்சாவூர், கடலூர் (தென் ஆற்காடு) மாவட்டக் கடற்பகுதியில் பிடிக்கப்படுபவை. சற்றே வெண்சிவப்பு நிறமுடையவை. தூத்துக்குடிச் சங்குகளைவிட நொறுங்கும் தன்மை அதிகமுடையன. வழுவழுப்பு குறைந்தது கரமுகி (Karamukhi) எனவும் அழைக்கப்பெறும் இவற்றின் நிறம் வாய்ப்பகுதியில் மிகவும் சிவப்பாகக் காணப்படும்.

*துவானி* (Duani) : திருவிதாங்கூர்க் கடற்பகுதியில் பிடிக்கப்படுபவை. நேர்த்தியாகவும் அளவில் பெரியதாகவும் உள்ள இவை குறைந்த எண்ணிக்கையிலேயே கிடைக்கின்றன.

*சூர்தி* (Surti) : சூரத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட இச்சங்குகள் குஜராத் கத்தியவார் கடல் பகுதியில் பிடிக்கப்படுபவை. சூரத்திலிருந்து வாங்கப்படும் சங்கு என்பதால் இவை *சூர்தி* எனப்பெயர் பெற்றிருக்கலாம். இருவகைகளாகப் பிடிக்கப்படும் இச்சங்குகள் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலங்களில் மும்பைத் துறைமுகம் வழியாகப் பிற இடங்களுக்குக் குறிப்பாக வங்கப்பகுதிக்கு அனுப்பப்பட்டன.

**பிற சங்கு வகைகள்**

*சங்கஸ்பைரம்* என்னும் வெண்சங்கைப் போன்று ஆனால் உருவ அமைப்பிலும், வண்ணங்களிலும் வேறுபட்ட

பிற வயிற்றுக்காலிகளும் கடலில் வாழ்கின்றன. இவற்றுள் பல வகைச் சங்குகள் அதன் உருவ அமைப்பைக் கொண்டு பெயரிடப்பட்டுள்ளன (படம் *14,15,16*). இவ்வகைச் சங்குகளும் அழகுப் பொருட்களாகப் பயன்படுத்தப் படுவதால் வணிக முக்கியத்துவம் உடையனவாக விளங்குகின்றன. அவற்றின் அறிவியற் பெயர்களைச் சிப்பி குறித்த பல ஆங்கில நூல்களில் காணலாம்[1].





படம் 14. பிறவகைச் சங்குகள்



படம் 15. பிறவகைச் சங்கு

[1] Sabelli, 1980



படம் 16. பிறவகைச் சங்கு

சங்கு கடல் வாழ் உயிரினம் என்பதால் அது மற்றவைபோலச் சிப்பி எனவும் வழங்கப்பட்டதைக் கழகத் தமிழ் அகராதி சுட்டுகிறது[1]. இராக்கெட் சங்கு, இராவணன் சுழி, எழுத்தாணிச் சங்கு, ஐவிரலி, கவடை, கிளாச்சங்கு (குழாய் சங்கு), குதிரைமுள்ளிச்சங்கு, குருவிச் சங்கு, செவ்வாயன் சங்கு, சொறி சங்கு, பலகறை, பால் சங்கு, புள்ளிக் கௌடா, பிள்ளையார் சங்கு, முள்ளிச் சங்கு, யானை முள்ளிச் சங்கு, ரோஸ் வாயன், வாழைப்பூ சங்கு, வெள்வாயன் சங்கு, வெள்ளைப்பூண்டு சங்கு ஆகியன தற்பொழுது சங்கின் வகைகளாக வழங்கப்படுகின்றன[2]. வாய்ப்பகுதி அகன்ற சங்கைப் போன்ற வயிற்றுக்காலி தாழஞ்சங்கு எனப்படுகிறது[3]. இவைதவிர பூச்சிக்கூடு, வெள்ளை மூக்கு, வெரஞ்சான், சிகப்பு முள்ளி, குதிரைமுள்ளி, வெள்ளைச் சாவல், சர்ப்ப கூடு, சிவப்பு பாத்திரம், கருப்புக்குள்ளாய், கட்ட சங்கு, கருப்பு முள்ளி,

---

1 முருகானந்தம் 1990

2 முருகானந்தம் 1990

3 Rottler 1834:210

ஆறுவிரல் சங்கு, சிலந்தி சங்கு, மாட்டுத்தலைச் சங்கு ஆகிய வகைகளும்[1] புள்ளிப் பாத்திரம், வரிப்புள்ளிப் பாத்திரம், பால் கவடா ஆகிய சங்கு வகைகளும் சங்குக் குளிப்போராலும், வணிகர்களாலும் வகைப்படுத்தப்படுகின்றன.

மேற்கண்டவை *சங்கஸ்பைரம்* வகையைச் சாராதவை என்பது குறிப்பிடத்தக்கது. ஆயினும் இவை சங்கு என்றே பொதுவாக அழைக்கப்படுகின்றன.

## சில தொன்மங்கள்

சங்கு, கடலில் ஆழமான பகுதியில் வாழ்வதால் பண்டைக்காலங்களில் அதன் பிறப்பு வளர்ச்சி, வாழ்க்கை குறித்த போதிய அறிவியற் கோட்பாடுகள் இல்லை.எனவே சங்குக் குறித்த தொன்மக் கருத்துக்கள் இலக்கியங்களில் பலவாறு இடம் பெறலாயின.

1) சங்கில் முத்து பிறக்கும்
2) சங்கு கரைக்கு வந்து முத்து இட்டுச் செல்லும்
3) சங்கு உழுத கடற்கரைக் காட்சி
4) வலம்புரி தானே முழங்கும்

எனவே இவற்றைப் பற்றிய அறிவியல் நோக்கிலான குறிப்புகளை இங்கு ஆராய்வது தேவையாகும்.

### 1) சங்கில் முத்து பிறக்கும்

கடலில் 38 வகை முத்து விளையும் சிப்பிகள் இருப்பினும் மூன்று வகைச் சிப்பிகளில் மட்டுமே பளபளப்பான அழகிய மணிகள் போன்ற முத்துக்கள் விளைகின்றன. இவற்றிலேயே வணிகத்திற்குத் தேவையான பெருமளவு முத்துக்கள் உருவாகின்றன[2]. இவை தவிர நூற்றுக்கும் மேற்பட்ட பிற சிப்பிகள் கடலில் வாழ்கின்றன. இவை பாறையிலோ அல்லது வேறு அசையாத கடினப் பொருட்களிலோ ஒட்டி வாழும் இயல்புடையன. இவை இரட்டை ஓடுகளைக் கொண்டன (Bivalve). இவற்றின் வாய்

---

[1] Natarajan et.al 1991:107-8

[2] Victor et.al.1995:1

*திறந்திருக்கும்போது சிறிய மணற்றுகள் உள்ளே சென்றால் அத்துகளின் எரிச்சலைப் போக்கச் சிப்பியில் உள்ள மெல்லிழையம் மணற்றுகள் மீது உமிழ்நீரைச் செலுத்தும். இவ்வுமிழ்நீர் மணற்றுகள் மீது படிந்து தொடர்ந்து உருவாகும் பொருளே முத்து ஆகும்*[1]*. பெரிய அளவில் முத்து உருவாகப் பல ஆண்டுகள் பிடிக்கும். எனவே இரட்டைச்சிப்பி வகைகளில்தான் வணிக முக்கியத்துவம் பெற்ற முத்து விளைகின்றது. ஆனால், முத்து சங்கீன்றபிள்ளை, கோடுமுத்தம் என்ற சொற்கள் முத்து சங்கிலிருந்து பிறப்பதாகக் குறிக்கப்பெறுகிறது*[2]*.*

*வலம்புரிச் சங்கில் உருவான முத்தைச் சிலப்பதிகாரம்* மாசறு பொன்னே வலம்புரிமுத்தே ***(2:73)***, வலம்புரியீன்ற நலம்புரி முத்தம் ***(27:244)*** *என உயர்வாகக் குறிப்பிடுகிறது.*

எங்கு வருதி யிருங்கழித் தண் சேர்ப்ப
பொங்கு திரையுதைப்ப போந்தொழில் - சங்கு
நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கும்
வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து

*என்று திணைமாலை நூற்றைம்பது* ***(49)*** *குறிப்பிடுகிறது. அதாவது பொங்கும் திரைகளால் உதைக்கப்பட்டு நகர்ந்து கரையின் கண் வந்த சங்குகள் கதறி பொறையுயிர்த்த முத்துக்கள் எனச் சங்கிலிருந்து முத்துக்கள் பிறப்பது குறித்துக் காணப்படுகிறது*[3]*.*

*உயர்குலத்தில் பிறந்ததற்கு வலம்புரி முத்தை உவமையாகப் பெருங்கதை கீழ்வருமாறு குறிப்பிடுகிறது.*

தத்துநீர்ப் பெருங்கடற் சங்கு பொறையுயிர்த்த நித்திலம்
***(பெருங்கதை 1.48.254)***
வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
***(பெருங்கதை 15.30.1)***

---

[1] Victor et.al. 1995:38-9

[2] *கதிரைவேற்பிள்ளை 1918*

[3] *இராகவையங்கார் 1927:19*

10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் *முத்தொள்ளாயிரப்(7)* பாடலில் சங்கின் முட்டை முத்துபோலக் காட்சியளிப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது[1]. மேலும் சங்கிலிருந்து பிறந்த முத்தை பாண்டியன் கழுத்தில் அணிவதாகவும் *முத்தொள்ளாயிர(63)*த்தில் குறிப்பிடப்பட்டுள்ளது[2].

சங்கு சூல் முற்றியீன்ற முத்து எனச் சங்கில் பிறந்த முத்தைச் *சீவகசிந்தாமணி* (145,563) குறிப்பிடுகின்றது[3]. மேலும் இந்நூலில் கடற்சோலையில் சங்கானது முத்தையீன்று வருத்தமின்றித் தானேபோய் மேயுமெனவும் குறிக்கிறது[4].

இராகவையங்கார் தொகுத்த *பெருந்தொகையிலும்* வலம்புரி முத்து பற்றிக் கீழ்வரும் குறிப்புகள் காணப்படுகின்றன.

அந்த ணாரூர் வந்தருள் செல்வன்
வலம்புரி யொருமுத் தன்ன
நலம்புரி வைத்திய நாததே சிகனே
(*பெருந்தொகை* 1712:25-27)

சங்கு முத்தை ஈன்றதாக *நளவெண்பா* (187)வில் குறிப்புக் காணப்படுகிறது[5].

வலம்புரிச் சங்கில் விளையும் முத்து ஆலங்கட்டியின் நிறமும், புறாமுட்டையைப் போல் நல்ல குளுமையான ஒளியும் பெற்றிருக்கும். இது, மிகச் சிறந்தது என்று *ரத்ன பரிக்ஷா* என்னும் நூல் இயம்புகின்றது. சங்கில் உருவாகும் முத்து உருண்டு திரண்ட பெரிய காட்டு இலந்தைப் பழத்தின் அளவிருக்கும் என்று *ரத்ன தீபிகா* என்னும் நூல் கூறுகின்றது[6].

---

1 சிதம்பரநாத முதலியார் 1997:40
2 சிதம்பரநாத முதலியார் 1947:149
3 சாமிநாதையர் 1986:79,281
4 சாமிநாதையர் 1986:1261
5 புலியூர் கேசிகன் 1978:84
6 ஸ்ரீநிவாசன் 1984:9-10

மேற்கண்ட சான்றுகளினடிப்படையில் சங்கில் பிறந்த முத்து பற்றிய குறிப்புகளைப் பல இலக்கியங்களில் காணமுடிகின்றது எனலாம். மேற்கோள்களை நோக்கினால் முத்துச்சிப்பிக்குச் சங்கு, வலம்புரி என்ற சொல்லும் வழங்கப்பட்டு இருக்கலாமோ எனக் கருதவும் இடமுள்ளது. இரட்டை ஓடுகள் கொண்ட சிப்பிக்குச் சங்கு போன்ற புரிகள் இல்லை. வலம்புரி முத்து என இலக்கியங்களில் குறிக்கப்பெறுவதால் புரியுடைய சங்கில் பிறந்த முத்தாகவே இங்குக் கொள்ளுதல் தகும். அறிவியல் நோக்கில் முத்துக்களைச் சங்கு உருவாக்காது என உறுதியாகக் கூறலாம். ஆனால் எந்த ஒரு மெல்லுடலியும் ஒரு நுண்பொருள் எரிச்சலூட்டும் வகையில் தனது கூட்டினுள் நுழைந்தால் அவ்வெரிச்சலைப் போக்கும் வண்ணம் தனது உமிழ்நீரை அப்பொருளின் மீது செலுத்தும். சங்கின் வாய்ப்பகுதியில் எவ்வாறேனும் வேறு நுண்ணியப் பொருள் உள்ளே சென்றிருந்தால் அதன்மீது உமிழ்நீர் செலுத்தப்பட்டால் கால்சியம் கலந்த கடினப்பொருள் உருவாகும்[1]. இது பொதுவாக முத்துப் போன்று இருக்கும் என்பதற்கோ, அல்லது அதைவிட மிக அழகாக இருக்கும் என்பதற்கோ எவ்விதப் பொருட்சான்றுகளும் இல்லை. இலக்கியங்களில் ஒரு பொருளின் பண்பை உயர்த்திக் கூற இத்தகைய சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

2. சங்கு கரைக்கு வந்து முத்தை ஈன்று செல்லும்

பாண்டியன் மீது காதலுற்ற தலைவி கரையில் காத்திருந்தமைக்கு, கரைக்கு வந்து மணற்குன்றில் முத்தை ஈன்று திரும்பச் செல்ல அடுத்த அலையை எதிர்நோக்கும் சங்கு *முத்தொள்ளாயிரப்* பாடலில் உவமையாகச் சுட்டப் பெறுகிறது[2].

---

[1] தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லறிவியல் துறைப் பேராசிரியர் ச.பரிமளா தெரிவித்தது.

[2] சிதம்பரநாத முதலியார் 1943:166

உகுவாய் நிலத்த உயர் மணல் ஏறி
நகுவாய் முத்(து) ஈன்(று) அசைந்த சங்கம் – புகுவான்
திரைவரவு பார்த்திருக்கத் தென்கொற்கைக் கோமான்
உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு

*(முத்தொள்ளாயிரம் 73)*

*இது எவ்வளவிற்கு உண்மை என ஆராய்வது தேவை. சங்கின் ஓடு மிகக் கடினமானதாகவும், அதிக எடையுள்ளதாகவும் இருக்கும். இதனால், சங்கு ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு இடம்பெயர மிகுந்த காலம் ஆகும். இவை வாழும் ஆழமான இடங்கள் கடல் அலைகளின் தாக்கம் குறைந்து இருக்கும். இதை அறியாத சங்குகள் சிலவேளைகளில் கடல் அலைகளின் தாக்கமுள்ள ஆழம் குறைந்த பகுதிக்கு வரும்போது அவற்றின் இயக்கம் அதன் கட்டுப்பாட்டில் இல்லாது போகும். ஆகவே சங்குகள் அலையினால் மேலும் கீழும் தள்ளப்பட்டுக் கரைக்கு வந்து சேருகின்றன. அலையின் தாக்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் வந்த சங்கு தனது சொந்த முயற்சியால் திரும்பக் கடலில் சென்று சேர இயலாது. கரையோரங்களில் காணக் கிடக்கும் மற்ற வகை வயிற்றுக்காலிகளும் இவ்வாறு கரைசேரும்.*

*இவ்வாறு கடற்கரையில் சங்குகள் வந்து சேர்வதை உற்று நோக்கிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திரைமோதி ஏற்றுவதால் சங்கு அங்காந்து முத்தைச் சொரியும் என்று தேவாரத்தில் குறிப்பிடுகிறார்.*

அங்கைக் கடல் அருமாமணி உந்திகரைக் கேற்ற

*(திருமறைக்காடு)*

கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்
நெருங்கிய நெடும்பெணை அடும்பொடு விரவிய
மருங்கொடு வலம்புரி சலஞ்சலம் மணம் புணர்ந்(து)
இருங்கடல் அடைகரை இடம் வலம் புரமே

*(திருவலம்புரம்)*

*சங்குகளில் பெரும்பாலும் சிறிய வகைச் சங்குகளே கரை சேர்கின்றன. இவ்வாறு அலையினால் மேலும் கீழும் தள்ளப்பட்ட சங்குகளைக் கண்ட புலவர் பாண்டியனின்*

வருகையை எதிர்நோக்கியிருந்த பாட்டுடைத் தலைவியின் செயலுக்கு ஒப்பிட்டுள்ளார். எனவே சங்கு கரைக்கு வந்து முத்து இட்டுச் செல்லும் என்னும் கூற்றில் உண்மையில்லை.

3. சங்கு உழுத கடற்கரைக் காட்சி

சங்கு கரைக்கு வந்து உலவும்போது உழுததுபோன்று கரைப்பகுதி தோற்றமளிப்பதாகவும் *ஐங்குறுநூறு*, *சிலப்பதிகாரம்* முதலிய இலக்கியங்களில் சுட்டப்பெற்றுள்ளது.

வலம்புரி யுழுத வார்மண லடைகரை
இலங்குகதிர் முத்த மிருள்கெட விமைக்கும்
(*ஐங்குறுநூறு* 193:1-2).

வலம்புரிச் சங்குகள் ஊர்ந்து செல்வதால் உழப்பட்ட நீண்ட மணல் பரந்த கடற்கரைக்கண், விளங்குகின்ற கதிர்களையுடைய முத்துக்கள் இருள் நீங்குமாறு ஒளிரும் என இது பொருள்படும்[1]. இதையே இளங்கோவடிகளும்

துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத
தோற்ற மாய்வான் (சிலப்பதிகாரம் 7:8.1)

எனச்சுட்டுகின்றார்.

ஏற்கெனவே சுட்டியபடி எடையுள்ள ஓடுகளைக் கொண்ட சங்குகள் தானாகக் கரைக்கு வந்து உலவ முடியாது என்பதால் இக்கூற்றில் உண்மையில்லை எனலாம்.

4. வலம்புரிச் சங்கு தானே முழங்கும்

இடங்கை வலங்கை புராணத்தில் வரும் கதையில் வலம்புரிச் சங்கு நாதமில்லாமல் இருந்தமை தீய சகுனமாகக் கருதியதாக கூறப்படுகிறது[2]. வலம்புரிச் சங்கு தானே ஒலிக்கும் என்ற நம்பிக்கை இன்றளவும் தமிழகத்தில் உள்ளது. இந்நம்பிக்கை சென்ற நூற்றாண்டின் தொடக்கக் காலங்களிலும் தமிழகத்தில் இருந்ததாக ஹார்னல்

[1] துரைசாமிப்பிள்ளை 1978:450

[2] சௌந்தரபாண்டியன் 1995:9

குறிப்பிடுகிறார். தூத்துக்குடியிலிருந்த ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த சங்கு குளிப்போருள் ஒருவர் "இரவு நேரங்களில் வலம்புரிச் சங்கு முழங்குவதாகவும், செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் அதன் ஆர்ப்பரிப்புக் கூடுதலாய் இருக்கும்" எனவும் கூறியதாகக் குறிப்பிடுகிறார்[1]. திரை ஊடகங்களிலும் வலம்புரிச் சங்கு தானே ஒலிப்பதாகக் காட்டப்படுகிறது. உயிருள்ள சங்குகள் ஒலி எழுப்புவதற்கான அறிவியற் சான்றுகள் எதுவும் இல்லை. சங்கு இறந்தபின் அதன் ஓட்டுப் பகுதியின் உச்சிப் பகுதியை உடைத்துத் துளையிட்ட பின்னரே வாய்வைத்து ஊதினால் ஒலி எழுப்பும். எனவே வலம்புரிச் சங்கு தானே ஒலிக்காது என்பது தெளிவாகிறது. சங்கில் ஒலி உருவாகும் விதம் குறித்துப் பிறிதொரு இயலில் காணலாம்.

எந்தவொரு குறுகலான வழியாகக் காற்று வேகமாகச் செல்லும்போதும் பக்கங்களால் தடுக்கப்பட்டு ஒலி ஏற்படுவது உண்டு. காட்டாக, அறை சன்னல்கள் வழியாக வேகமாக வீசும் காற்றினால் ஏற்படும் ஒலியைக் கூறலாம். துளையிடப்படாத வலம்புரி, இடம்புரி அல்லது சங்கின் தோற்றமுள்ள பிறவகை பொருட்களின் வாய்ப்பகுதியில் காற்று செல்லும்போது சிறிய ஒலி ஏற்படுவது இயல்பே. இதைக் காதருகில் வைத்தால் கேட்க இயலும். வலம்புரிச் சங்கில் மட்டும் இம்மெல்லிய ஒலி வருவதல்ல. தொலைவிலுள்ள ஒருவர் உச்சிப் பகுதி துளையிடப்பட்ட சங்கினால் வேகமாக காற்றை ஊதினால் வரும் ஒலியை மட்டுமே கேட்க இயலும். எனவே வலம்புரிச் சங்கு தானே முழங்கும் என்னும் கூற்றிலும் உண்மையில்லை.

---

[1] Hornell 1914:132

# 4. சங்கு அணிகலன்கள்

பழங்காலத்திலிருந்தே மனிதன் சங்கின் பயனை அறிந்திருந்தான். சங்கு அடுக்களைப் பொருட்களாகவும் விளையாட்டுப் பொருட்களாகவும் அணிகலன்களாகவும் அழகிய பொம்மைகளாகவும் செய்யப்பெற்றன. இந்தியாவில் சிந்து சமவெளி நாகரிக காலத்திலேயே இப்பொருட்கள் பயன்பாட்டில் இருந்தன. இன்றளவும் சங்கு வளையல்கள், மோதிரங்கள் போன்ற அணிகலன்கள் பயன்படுத்தப்பெற்று வருகின்றன. அகழாய்வு, இலக்கியம், கல்வெட்டு ஆகிய சான்றுகளைக் கொண்டு சிந்துசமவெளி நாகரிகம் முதல் இன்று வரை பயன்படுத்தப்படும் சங்கு அணிகலன்கள் மற்றும் பிற பொருட்களைக் கால நிரல் அடிப்படையிலும், நிலவியல் அடிப்படையிலும் காணலாம்.

சிந்து சமவெளி மக்கள் சங்கினாலான வளையல்கள், சரமணிகள், தொங்கணிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தினர் என்பதற்கு மொஹஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய இடங்களில் நிகழ்த்தப்பெற்ற அகழாய்வுகளில் கிட்டிய தொல்பொருட்கள் சான்று பகர்கின்றன[1]. இப்பெருநகரங்கள் மட்டுமன்றி அந்நாகரிகக் காலத்தில் இருந்த மற்றப் பெரு நகரங்களிலும் சங்குத் தொழிற்கூடங்கள் இருந்தமை கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. தற்பொழுது இந்தியப் பகுதியில் உள்ள லோத்தல் (Lothal), பாகிஸ்தான் பகுதியில் உள்ள சார்-இ சோக்தா (Shar-I Sohkta) ஆகிய இடங்களை இதற்குச் சான்றாகக் கூறலாம்[2]. சிந்துசமவெளி நாகரிகம் தொடங்கி கி.பி.600ஆம் ஆண்டுவரை இந்தியாவில் சங்கில் செய்யப்பட்ட அணிகலன்கள், சங்குத் தொழிற்கூடங்கள் கண்டுபிடிக்கப்பட்ட ஊர்கள் அட்டவணை 2 இல் தரப்பட்டுள்ளன.

---

[1] Mackay 1937, Vats 1979

[2] Rao 1962, Durante 1975

மொஹஞ்சதாரோவில் வளையல்கள், மோதிரங்கள், மணிகள், தொங்கணிகள், துளையிடப்பட்ட வட்டத் தகடுகள் போன்றவை கிடைத்துள்ளன. மோதிரங்கள் சங்கின் சுருள் பகுதியிலும், சுருளச்சில் துளையிடப்பட்ட உருளைகள், உருளை மணிகள் ஆகியனவும் குழி, குமிழ் வட்டத் தகடுகள் சங்கின் ஒட்டுறைகளிலும் செய்யப்பட்டிருக்க வேண்டும். பெரிய வட்டத்தகடுகள் ஆபரணமாகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். மேலும் இதுபோன்ற உருவமுடைய சங்கு வட்டத் தகடுகள் மெசபடோமியாவிலும் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது[1].

சிந்து சமவெளி கைவினைக் கலைஞர்கள் சிப்பி வகைகளில் பலவித பொருட்களை உருவாக்கினர். வளையல்கள் மட்டுமன்றிச் சங்கின் திருகுச் சுருளச்சில் செய்யப்பட்ட கூம்பு, உருளை, கோளம், விளையாட்டுப் பொருட்கள், அலைபோன்ற வடிவங்கள், மூடிகள், இறைவனுக்குப் படைக்கப்படும் புனிதநீர் வைக்கும் பொருட்கள், விலங்குருவங்கள் ஆகியனவற்றைப் படைத்தனர் (படம் 17,18). திருகுச் சுருளச்சில் செய்யப்பட்ட துளையிடப்பட்ட சிறு உருளைகள் அணிகலன்களாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். மொஹஞ்சதாரோவில் கிடைத்தது போல மற்ற சிந்து சமவெளிப் பகுதி ஊர்களில் கிடைத்த சங்குப் பொருட்களில் வரிவடிவங்களும், செதுக்கு வேலைகளும் காணப்படுகின்றன.

தொப்பி வடிவுடைய மூன்று நான்கு சங்குத் துண்டங்களால் ஒட்டப்பட்ட பொருளின் மேல் வரிவடிவங்கள் சிவப்பு வண்ணத்துடன் காணப்படுகின்றன. இவற்றின் பயன் அறியப்படவில்லை. மேலும் லாம்பிஸ் ட்ரங்கேட்டா சபே (Lambis truncata sebae) எனும் மொத்தமான வாய்ப்பகுதியையுடைய சிப்பியில் காளையின் உருவப்பகுதிகளும் செய்யப்பட்டன. மேலும் பறவை, பாம்பு, தவளை, ஆமை, வண்டி ஆகியனவும் செய்யப்பட்டன.

---

[1] Kenoyer 1984:55



படம் 17. சிந்து சமவெளி அகழாய்வில் கிடைத்த சங்கு வளையல்கள்
(நன்றி: டோக்கியோ தேசிய அருங்காட்சியகம் 2000)

**சுமேரியர்கள் இத்தகைய வெண்சங்கு அல்லாத பிற சங்கு வகைகளைச் சிந்து சமவெளிப் பகுதியினர் போல் பயன்படுத்தியிருப்பினும் அவர்களின் கலைத்திறனும், சிப்பி வகைகளும் வேறுபட்டுள்ளன. மேலும், தென்னிந்தியாவில் குழந்தைகளுக்குப் பாலூட்டப் பயன்படும் சங்குப் பாலடை அல்லது இறைவனுக்கு ஊற்றப்படும் புனித நீர் கலன்களைப் போலவே சிந்து சமவெளிப் பகுதியிலும் கிட்டியுள்ளன என்பது குறிப்பிடத் தகுந்தது[1](படம் 19). மேற்கண்ட பொருட்களுக்குத் தேவையான சங்குகள் குஜராத் கடல் பகுதியிலிருந்தே சென்றிருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர்.**

---

[1] Kanoyer 1983:59









படம் 18. சிந்து சமவெளி அகழாய்வில் கிடைத்த சங்கு அணிகலன்கள்
(நன்றி: டோக்கியோ தேசிய அருங்காட்சியகப் 2000)



படம் 19. சிந்து சமவெளி அகழாய்வில் கிடைத்த சங்கினாலான நீர்கலன்
(நன்றி: டோக்கியோ தேசிய அருங்காட்சியகம் 2000)

சிந்து சமவெளி நாகரிகத்தின் சம காலத்திலும், பின்னரும் இந்தியாவின் மத்தியப் பகுதியான மத்தியப் பிரதேசம், மஹாராஷ்டிரம், ராஜஸ்தானின் கிழக்குப் பகுதியில் வாழ்ந்த செம்புக் காலத்தைச் (Chalcolithic period) சார்ந்தோர் சங்கு அணிகலன்களைப் பயன்படுத்தினர். நௌதத்தோலி (Navdatoli) என்னுமிடத்தில் நிகழ்ந்த அகழாய்வில் கிட்டிய சங்குப் பொருட்களை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்[1].

செம்புக் காலத்தின் இறுதிக் காலத்தில் இந்தியாவின் வடக்குப் பகுதியில் இருந்த வண்ணம் பூசப்பட்ட சாம்பல் நிறப் பானையோட்டு (Painted Greyware), வடகிழக்குப் பகுதியில் இருந்த கருப்பு சிவப்பு பானையோட்டுப் Northern Black Polishedware) பண்பாட்டிடத்திலும் ஓரளவிற்குச் சங்கு அணிகலன்கள் பயன்படுத்தப்பட்டன. இக்காலத்தைத் தழுவிய வேத காலத்தில் உருவான வேதங்களில் சங்குகள் பற்றியக் குறிப்புகள் பல உள்ளன என

[1] Sankalia et. al. 1976

அறியப்படுகிறது. ஆயினும் இதுகுறித்த, பரந்த ஆய்வு மேற்கொள்ளப் பெறவில்லை.

ஹரப்பா காலத்திலும், பிற்கால ஹரப்பா காலத்திலும், கிருத்துவ காலம் வரையிலும் குஜராத் பகுதியில் சங்குத் தொழிற்கூடங்கள் பல இருந்து வந்துள்ளன. அகழாய்வில் கிட்டிய சில சங்கு வளையல்கள் படத்தில் (20) காட்டப்பட்டுள்ளன. இப்பண்பாட்டுக் காலங்கள், முடிவடைந்து இரும்புக்காலம் இந்தியாவில் தொடங்கியபின் குஜராத் பகுதியிலும், தக்காணப் பீடபூமிப் பகுதியிலும் வாழ்ந்த மக்கள் சங்கு அணிகலன்களை, முக்கியமாகச் சங்கு வளையல்களைப் பயன்படுத்தினர். இக்காலங்களில் பயன்படுத்தப்பெற்ற சங்கு வளையல்களின் உடைந்த பகுதிகள், மோதிரங்கள், சங்குக் கழிவுகள் ஆகியனவற்றை இராபர்ட் புரூஸ் ஃபுட் (Robert Bruce Foote) என்பார் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமது கள ஆய்வில் கண்டுபிடித்தார் (அட்டவணை 4, படம் 21).

ஈரானிலுள்ள சார்-இ சோக்தா (Sahr-i Sokhta) என்னுமிடத்தில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் சிந்து சமவெளி நாகரிகக் காலத்தைச் சார்ந்த சங்காலான வளையல் துண்டங்களும் பிற பொருட்களும் கிடைத்தன[1]. இச்சங்குகள் இந்தியக் கடல் பகுதியிலிருந்தே சென்றிருக்க வேண்டும் [2]. எனவே உலகில் மற்ற இடங்களிலும் சங்கு அணிகலன்கள் இந்தியாவிலிருந்தே சென்றிருக்க வேண்டும் எனக் கருதலாம். சூசா என்னுமிடத்தில் கிடைத்த, தற்பொழுது பாரிஸில் உள்ள லோவர் (Louvre) அருங்காட்சியகத்தில் சுருளச்சு தட்டியெடுக்கப்பட்ட 6 ½ அங்குலம் நீளம் உள்ள சங்கு கோப்பையாகப் பயன்படுத்தும் வடிவில் உள்ளது, மேலும் ஒரு அங்குலம் அகலமுள்ள முக்கோண வடிவங்கள் செதுக்கப்பட்ட சங்கு வளையல் ஒன்றும் அங்குக் கிடைத்துள்ளது. இது கி.பி.500ஆம் ஆண்டைச் சார்ந்ததாகக்

---

[1] Durante 1979:27-42

[2] Durante 1979:38







படம் 20. இந்தியாவில் அகழாய்வில் கிடைத்த சங்கு வளையல்கள், பிற பொருட்கள் ( நன்றி – *IAR*, ASI)



படம் 21. இராபர்ட் புரூஸ் ஃபூட் (**Robert Bruce Foote**) கள அய்வில் கண்டுபிடித்த சங்குப்பொருட்கள்
( நன்றி – **Hornell 1914**)

கருதப்படுகிறது[1]. டெல்லோ (Tello) எனப்படும் லாகாஸ் பகுதியில் சங்கினால் செய்யப்பட்ட பதக்க வில்லைகள் (Plaques) கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்றில், காளையின்

---

1 Hornell 1942:132

பின்புறம் சிங்கம் பாய்வது போல் செதுக்கப்பட்டுள்ளது[1]. இப்பொருட்கள் குஜராத் கடல் பகுதியிலிருந்தே சென்றிருக்க வேண்டும் என ஹார்னல் கருதுகிறார்.

1968-69ஆம் ஆண்டுகளில் தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறை நிகழ்த்திய கொற்கை அகழாய்வில் கி.மு. 3-கி.பி.2ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த உடைந்த சங்கு வளையல்களும், சங்குக் கழிவுகளும் ஏராளமாகக் கிடைத்துள்ளன[2]. அதிக எண்ணிக்கையிலான அறுக்கப்பட்ட சங்கு வளையல்கள் கொற்கையில் கிடைத்துள்ளன. சங்கின் சுருளச்சில் மோதிரமாக குடையப்பட்ட ஒரு துண்டும் நான்காம் அகழாய்வுக் குழியில் கிடைத்தது[3]. மேலும் சங்கினாலான மணிகளும் இங்கு கிடைத்தது குறிப்பிடத்தகுந்தது.

அலெக்ஸாண்டர் ரீ (Rea) என்பார் முதன் முதலில் அகழாய்வு செய்த அமராவதியில் புத்த விகாரத்தின் அடியில் கண்டெடுக்கப்பட்ட உடைந்த சங்கு வளையல்கள் கி.மு.200ஆம் ஆண்டிற்கு முற்பட்டதாகக் கருதப்படுகிறது [4].

ஆந்திர மாநிலம் ரெய்ச்சூர் தோப் (Raichur Doab) எனும் பகுதியில் கிடைத்த சங்கு வளையல்பொருட்கள் மிகப் பழைமையானதென்றும் அவை தமிழக, இலங்கைக் கடல் பகுதியிலிருந்து கிருஷ்ணா நதித்துவாரம் வரை கடலில் கொணரப்பட்டு உள் நாட்டை அடைந்திருக்கக்கூடும் என்றும் ஹார்னல் கருதுகிறார்[5].

செங்கல்பட்டு மாவட்டம் பெரும்பேர் எனும் இடத்தில் நிகழ்ந்த அகழாய்வில் ஈமச் சின்னத்தில் இதேபோன்று குறியிடப்பட்ட பெரிய சங்கு ஒன்று கிடைத்துள்ளது. அவ்ஈமச்சின்னத்தில் அழகூட்டப்பட்ட

---

[1] Hornell 1942:132.

[2] Nagasamy 1970:52-3, Abdul Majeed 1987:74&77

[3] Abdul Majeed 1987:77

[4] Hornell 1942:130

[5] Hornell 1942:130

மூன்று சங்கு அணிகலன்கள் கிடைத்துள்ளன. அவற்றில் இரண்டு தலைமுடி அலங்காரத்திற்கு பயன்படுத்தப் பட்டிருக்கலாம் (படம் 22). பெரும்பேர் பகுதியில் கிடைத்த சங்காலான வட்டத் தகடுகள் போன்ற அணிகலன்களைத் திருவனந்தபுரப் பகுதியிலிருக்கும் வசதி குறைந்த பெண்கள் சிகையில் அணிவர்[1].







படம் 22. செங்கல்பட்டு மாவட்டம், பெரும்பேர் என்னும் ஊரில் அகழாய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள்
( நன்றி – **Rea 1915**)

மேலும் திருநெல்வேலிக்கருகில் உள்ள இரும்புக் காலத்தைச் சேர்ந்த ஆதிச்சநல்லூர் என்னுமிடத்தில் நிகழ்த்தப் பெற்ற அகழாய்வில் சங்குப் பதக்கங்கள் கிட்டின[2]. இவை காதணியாகவோ, தலையணியாகவோ பயன்படுத்தப் பட்டிருக்கவேண்டும். இப்பதக்கங்களில் மெல்லிய செதுக்கு வேலைகள் செய்யப் பெற்றிருந்தன.

---

[1] Hornell 1942:163

[2] Rea 1915

சங்க காலத்தைச் சேர்ந்த துறைமுக நகரங்களான அரிக்கமேடு[1], பூம்புகார்[2], அழகன்குளம்[3], கொற்கை[4] ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும், தமிழகத்தின் உட்பகுதியில் இருந்த நகரங்களான சானூர்[5], உறையூர்[6], திருக்காம்புலியூர் மற்றும் அழகரை[7], கொடுமணல்[8] ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும் சங்கு வளையல்கள், மணிகள் முதலியன கிட்டியுள்ளன (படம் 23,24,25,26). திருக்காம்புலியூரில் நிகழ்ந்த அகழாய்வில் கிட்டிய சங்க காலத்தைச் சார்ந்த வளையல்களில் சிகப்புநிற வண்ணம் கலந்து காணப்படுகிறது[9]. இது அக்காலத்தில் சங்கு அணிகலன்களில் வரிவடிவங்கள் செதுக்குவதோடு, நெய்யரக்கு பூசுதலையும் செய்தனர் என்பதை உறுதிப் படுத்துகிறது. தொல்லியல் கள ஆய்வில் விருதுநகர் மாவட்டத்தில் வேம்பக்கோட்டை என்னுமிடத்தில் மிகப் பெரிய சங்குத் தொழிலகம் இருந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன[10]. மேலும் அம்மாவட்டத்தில் பத்துக்கும் மேற்பட்ட இடங்களில் சங்கு வளையல்களின் உடைந்த பகுதிகள் கிடைத்துள்ளன. இவ்வளையல்களில் பல வகையான உருவகளும் செதுக்கப்பட்டுள்ளன (படம் 27). இதை உறுதிப்படுத்தும் வகையில் சங்க கால மற்றும் அதன் பின்னர் வந்த இலக்கியங்களில் சங்கு அணிகலன்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

---

[1] Wheeler 1946, Begley 1996

[2] Soundararajan 1994

[3] Abdul Majeed 1992

[4] Nagasamy and Abdul Majeed 1987

[5] *Ancient India* 15

[6] Raman 1988

[7] Mahalingam 1970

[8] Rajan 1994

[9] Mahalingam 1970:50

[10] எம்.ராஜேஷ், தஞ்சாவூர் மற்றும் ஆர். பாலசந்திரன், திருத்தங்கல் ஆகியோர் கண்டுபிடித்தனர்.



படம் 23. கொற்கை அகழாய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள்
( நன்றி – **Hornell 1914**)



படம் 24. அரிக்கமேடு அகழாய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள்( நன்றி – **Wheeler 1946**)



படம் 25. கொடுமணல் அகழாய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள் ( நன்றி –கா.ராஜன் )



படம் 26. செங்கல்பட்டு மாவட்டம், சானூர் அகழாய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள்
( நன்றி *AI* **Vol.15**)





படம் 27. விருதுநகர் மாவட்டம், வேம்பக்கோட்டை என்னுமிடத்தில் களஆய்வில் கிடைத்த சங்குப் பொருட்கள் ( நன்றி ராஜேஷ், பாலசந்திரன்)

காலத்தால் முற்பட்டதாகக் கருதப்படும் குறுந்தொகைப் பாடல்கள் முதற்கொண்டு அனைத்துச் சங்க நூல்களிலும் மகளிர் அணிந்த வளையல்கள் தலைவன் பிரிவால் நெகிழ்ந்தமையும், தலைவன் வருகையால் வளைகள் நெருக்கியமையும் பல செய்யுட்களில் காணப்படுகின்றன (பின்னிணைப்பு 1). மகளிர் அணிந்த வளையல்களை எல்வளை, எரிவளை, இலங்குவளை, செறிவளை, நிரைவளை, சில்வளை, ஆய்வளை, வரிவளை எனப் பலவாறாகச் சுட்டக் காணலாம். இவற்றில் எல், எரி, இலங்கு ஆகியன ஒளியையும், செறி, நிரை என்பன நெருங்கிய, திரண்ட எனவும், சில், ஆய் என்பன அழகு மற்றும் நுண்மையையும் குறிப்பனவாகும்[1]. வரிவளை என்பது

---

[1] *Tamil Lexicon* 1982

வளையல்களில் உள்ள வேலைப்பாடுகளைக் கொண்ட வளையல் ஆகும். அகழாய்வுகளில் கிடைத்த வளையல்கள் பல நுண்ணிய வேலைப்பாடுகளைக் கொண்டமைந்தவை. மேலும் *ஐங்குறுநூற்றில்* உள்ள வளைப்பத்து என்னும் பகுதியின் அனைத்துப் பாடல்களிலும் சங்கு வளையல்களைப் பற்றியே குறிப்பதாலும், அறுக்கப்பட்ட சங்கு வளையல் கண் போல் உள்ளது என்பதை அரம் போழ்ந்தறுத்த கண்ணேரிலங்கு வளை என *மதுரைக்காஞ்சி* (316) சுட்டுவதாலும், அகழாய்வுகளில் மிகச் சில இடங்களில் மட்டுமே கண்ணாடி வளையல்கள் கிடைத்ததாலும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுபவை பெரும்பாலும் சங்கு வளையல்களையேக் குறிக்கும். இக்கருத்தை வலுவூட்டும் வகையில் உடைந்து சிதறிய சங்கு வளையல் துண்டங்களைச் சங்க இலக்கியங்கள் உவமையுடன் சுட்டுவதைக் காணலாம்.

உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்

(*புறநானூறு* 90:1-2)

வெண்காந்தட்பூ முறிந்த வளையை ஒத்ததாகக் குறிக்கப்பெறுகிறது என்றும்[1]

ஊழி னிருப்ப வெருச்சய மகளிர்
வாழைப் பூவின் வளைமுறி சிதற

(*புறநானூறு* 237:10-11)

மகளிர் கையிலணிந்த வளைகளின் முறிகள் வாழைப்பூ போலச் சிதற என்றும்[2]

வளை உடைந்தன்ன வள்இதழ்க் காந்தள்

(மலைபடுகடாம் 519)

வளையுடைத்தாற் போன்ற வளவிய இதழையுடைய காந்தட்பூ என்றும் சுட்டப்பெறுகிறது[3]. எனவே சங்க

---

[1] *சாமிநாதையர் 1980:196*

[2] *சாமிநாதையர் 1980:655*

[3] *சாமிநாதையர் 1980:655*

இலக்கியங்களில் சுட்டப்பெறும் வளை பொதுவாகச் சங்கு வளையைக் குறிப்பதாகும் என அறியமுடிகிறது.

இவ்வளையல்களில் அரிதாகக் கிடைக்கும் வலம்புரிச் சங்கில் செய்யப்பட்ட வளையல்கள் சிறப்புடையனவாகக் கருதப்பட்டன. *நெடுநல்வாடையில்* பாண்டியன் மனைவி வலம்புரிச்சங்கு அணிந்திருந்தாள் என்பதை,

பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து
(*நெடுநல்வாடை* 141-142)

என்னும் அடிகள் குறிக்கின்றன.

வளைமட்டுமல்லாது சங்கு மணிகளால் ஆன சர அணியைப் பற்றிய குறிப்பு *குறுந்தொகையில்* காணப்படுகிறது.

மனவுக் கோப்பு அன்ன நெடுங்கூந்தல்
(*குறுந்தொகை* 23:2).

என்று சங்கு மணியால் கோர்க்கப்பட்ட வெண்மையான நல்ல நீண்ட நெடுங்கூந்தல் என ஔவையார் குறிப்பிடுகிறார்[1]. *சிலப்பதிகாரம், மணிமேகலை* போன்ற காப்பியங்களும் சங்கு வளையல்களைக் குறிக்கின்றன. மேலும் அவை

விரிவெண் தோட்டு வெண்ணகைத் துவர்வாய்
(*சிலப்பதிகாரம்* 27:183)

என்று சங்கில் செய்யப்பட்ட வெண்ணிறக் காதணியையும்,

ஒள்ளெரி நெடுங்கண் வெள்ளி வெண் தோட்டு
(*மணிமேகலை* 3:119)

வெள்ளிய சங்கினாற் செய்த காதணி என்று சுட்டுவதிலிருந்தும் சங்க காலத்தில் சங்கில் காதணி செய்யப் பெற்றமையை அறியலாம்.

---

1 சண்முகம் பிள்ளை 1985:26

*கார் நாற்பது*, *களவழி நாற்பது*, *திணைமாலை நூற்றைம்பது* ஆகிய நூல்களில் சங்கு வளையல்களைப் பற்றியக் குறிப்புகள் காணப்படுகின்றன. பின்னர் இயற்றப்பட்ட இலக்கியமான *பெருங்கதை* வெண்சங்கை நாகு எனச் சுட்டுகிறது. வாசவதத்தை நாகுவளையலை அணிந்திருந்ததாகப் *பெருங்கதை* (2:52.3) சுட்டுவதிலிருந்து இதனை அறியலாம். சங்கினாலான வளையல்கள் மற்றும் பிற பொருட்கள் தமிழகத்தில் இடைக்காலத்திற்குப் பின்பும் பயன்பாட்டில் இருந்தன. *நந்திக்கலம்பகம், சீவகசிந்தாமணி, முத்தொள்ளாயிரம், கலிங்கத்துப்பரணி, தக்கயாகப்பரணி* ஆகிய நூல்களில் சங்கு வளையல்கள் பற்றிப் பல இடங்களில் சுட்டப் பெறுகின்றன. இக்காலங்களில் எழுந்த பக்தி இலக்கியங்களான தேவாரப் பாடல்களில் சிவபெருமானின் சங்கக் குழை, சங்கவாரிக்குழை, சங்கவெண் தோடணி, சங்க வெண்குழை என்ற சங்கினாலான காதணியைப் பற்றியக் குறிப்புகள் பல இடங்களில் இடம்பெறுகின்றன[1]. பரஞ்சோதி முனிவரின் *திருவிளையாடற்புராணத்தில்* குண்டோதரனுக்கு அன்னம் இட்ட படலத்தில் சிவன் சங்கக் குழையன் எனக் குறிப்பிடப் பெறுகிறார்[2].

பாண்டிய மன்னன் சங்கு வளையல்களைக் கையில் அணிந்திருந்ததாகச் சுட்டுவதிலிருந்தும் (*முத்தொள்ளாயிரம்* 63), கி.பி.921ஆம் ஆண்டைச் சேர்ந்த பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டில் இரண்டாம் இராஜசிம்மன் மெய்க்கீர்த்தி மன்னன் சங்கால் செய்த வெள்ளை நிற வளையலை அணிந்தோன் எனச் சுட்டுவதிலிருந்தும் அக்காலத்தில் உயர்குடி மக்கள் இதை அணிந்தனர் என அறிய இயலுகிறது[3].

தடங்களிலே பார்க்கக் கிடைக்கும் உடைந்த சங்குகள் உதிர்ந்த வெண்தாமரை மலர்கள் போலிருந்ததாகச் *சீவக சிந்தாமணியில்* குறிப்புக் காணப்படுகிறது[4]. *கலிங்கத்துப்*

[1] சதாசிவ செட்டியார் 1987, 1988

[2] பட்டுசாமி ஓதுவார் 1956:66

[3] *South Indian Inscriptions* iii:206

[4] சாமிநாதையர் 1986:274

*பரணியில்(514)* கலிங்கத்தை வென்றபின் பேய்களுக்கு கூழ்வார்க்கும் புடலத்தில் வீரர்களால் கைவிடப்பட்ட சங்குகளைப் பொறுக்கி ஏகாவலி என்னும் ஒற்றைச்சர முத்துமாலையாய் அணியுமாறு பேய்கள் அழைக்கப் பெறுவதிலிருந்து இன்றைய ஒரிசாவான கலிங்கப் பகுதியிலும் சங்கு பயன்பாட்டில் இருந்ததையும் அணிகலன்களாகப் பயன்படுத்தப்பட்டதையும் அறியலாம். மேலும் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தியில் கலிங்கப்பகுதியை ஆண்ட மகிபாலனைச் சங்குவொ(கொ)ட்டன் எனக் குறிப்பது இங்குச் சுட்டத்தகுந்தது[1].

மேலும், *தக்கயாகப் பரணியில் (93),*

கொக்கொ ழுங்குபட வோடிமுகில் கூடியனையார்
அக்கொழுங்குபடு கஞ்சுக மலம்பவுளரே

ஆகாயத்து வருஷாகாலத்துப் பறந்து திரியும் கொக்கென்னும் பெயரையுடைய வெண்பறவை நிரைபட ஓடிவரக் கருமுகில் அதற்கு மேலாகக் கூடினவை போன்றிருக்கும்படி சங்கு மணிவடம் கோர்க்கப்பட்ட கருஞ்சட்டையைக் கலந்திட்டவர் பலருளர் என்று சங்கு மணிவடத்தை உவமையாகக் கூறுவதிலிருந்து ஆண்களும் சங்காலான அணிகலன்களை அணிந்திருந்தனர் என்பது தெரியவருகிறது[2].

*நாமதீப நிகண்டு* சங்கு மணியை அக்கு, மனவு எனக் குறிக்கிறது[3]. சங்குத் துண்டங்களில் செய்யப்படும் மணி அக்குமணி என்றழைக்கப்பட்டது[4]. இதையே வளைமணி, சங்குமணி என்றும் அழைப்பர்[5]. *கப்பற்கோவை* சங்கு வளையலைச் சங்கு என்றும் குறிக்கிறது[6]. 17ஆம் நூற்றாண்டைச் சார்ந்த *செழியதரையன் பிரபந்தங்கள்(325)*

---

1 Nagasamy 1987

2 சாமிநாதையர் 1992

3 வையாபுரிப்பிள்ளை 1985:384

4 Rottler 1834:209

5 கதிரைவேற்பிள்ளை 1918

6 சந்திரசேகரன் 1958:178

கைகளில் சங்கு வளையல்கள் திரளாக அணியப்பட்டன எனவும் தலைவனின் வருகையால் கை வளமடைந்து வளையல்கள் நெரிந்தன எனவும் சுட்டப்பெறுகிறது[1]. *செழியதரையன் பிரபந்தங்கள்(46:2)* *ஈர்வளை* என்று குறிக்கும் வளையல் அரத்தினால் அறுத்துச் செய்யப்பட்ட வளையலைக் குறிக்கும்[2]. மேலும் *சங்குவளை* (*செழியதரையன் பிரபந்தங்கள் 152:1*) என இவ்விலக்கியத்தில் பிறிதொரு இடத்திலும் குறிப்பிடப்படுகிறது. இது சங்கால் செய்யப்பட்ட வளையல் எனலாம்.

இடைக்காலத்தில் சங்கு அணிகலன்களுக்கு மதிப்புக் குறைந்தது. இதற்குப் பொன், கண்ணாடி வளையல்களின் பயன்பாட்டைக் காரணமாகக் கொள்ளலாம். இடைக்காலத்திற்குப் பிறகு சங்கணிகலன்களின் தேவை குறைந்ததனால், சங்கை முக்கியப் பொருளாக இன்றும் கருதிவரும் வங்கப் பகுதிக்கு இத்தொழிற்சாலைகள் இடம்பெயர்ந்தன. *நளவெண்பா, சீவேந்திரர் சரிதம், செழியதரையன் பிரபந்தங்கள்* ஆகிய இலக்கியங்களில் சங்கணிகள் பற்றிய குறிப்புகள் காணப்பெறுவது, பழைய இலக்கியங்களின் தாக்கமே எனலாம். ஏனெனில் 15-16ஆம் நூற்றாண்டளவில் மன்னார் வளைகுடாப் பகுதியில் எடுக்கப்பட்ட பெரும்பாலான சங்குகள் வங்காளத்திற்கு அனுப்பப்பட்டதற்கான பல பயணக் குறிப்புகள் கிடைக்கின்றன.

பழங்காலத்தில் அதிக அளவில் சங்கு கிடைத்ததாலும், திராவிடக் கைவினைக் கலைஞர்கள் சிறந்த தொழில்நுட்பத் திறனுடன் இருந்ததாலும், தென்னிந்தியாவில் சிறந்த சங்கு அணிகலன்கள் தொழில் நிரம்பி இருந்ததற்கான காரணமாயிருக்கலாம் என்று சங்குத் தொழிலைப் பற்றி ஆய்வு செய்த தத் என்பார் குறிப்பிடுகிறார்[3].

---

[1] *சண்முகம் பிள்ளை 1986:325*

[2] *சண்முகம் பிள்ளை 1986:189*

[3] Dutt 1924:421

**வங்காளத்தில் சங்குப்பொருட்கள்**

இவ்வளையல் தொழில் 14ஆம் நூற்றாண்டளவில் வங்கத்தில் தொடங்கியது என்னும் ஹார்னலின் கூற்றை மறுத்து இத்தொழில் இதற்கு முன்னரே வந்திருக்கலாம் என்பதற்கு வங்க இலக்கியங்களைச் சான்றாகக் காட்டுகின்றார். 10-11ஆம் நூற்றாண்டில் ராமை பண்டிட் (Ramai Pandit) எழுதிய இலக்கியத்திலும், 12ஆம் நூற்றாண்டில் ஹரிதத், நாராயண தேவ் ஆகியோர் ஆக்கிய *மானஸமங்கள்* இலக்கியங்களிலும், சங்கணிகலன்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுவதைச் சான்றாகக் காட்டுகின்றார்[1]. மேலும் 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சந்திதாசர் (Chandidasa) இச்சங்கு வளையல்கள் இருபிறை நிலவுகள் இணைந்தாற் போலக் காணப்படுவதாய்க் குறிப்பிடுகிறார். தானாபதி எழுதிய வணிகக் குறிப்புகளில் இலங்கைச் சங்குகள் வங்கத் தேங்காய்களுக்குப் பண்டமாற்றுச் செய்யப் பட்டதாகவும் குறிப்பிடுவதால் இவ்வணிகன் தொழில் ஹார்னல் கூறியது போலன்றி மிகப்பழமை வாய்ந்ததாக இருக்கலாம் என தத் கருதுகிறார்[2]. எனவே 10ஆம் நூற்றாண்டளவில் இத்தொழில்நுட்பம் வங்கப் பகுதிக்குச் சென்றதாலும், தமிழகக் கலைஞர்களின் திறனுக்குத் தமிழகத்திலேயே மதிப்புக் [illegible]ந்ததாலும், சங்கு அணிகலன்களின் மதிப்புக் குறைநது போனது. இருப்பினும் காலனியாதிக்கக் காலங்களிலும் சிறிய அளவிலான தொழிற்கூடங்கள் தமிழகத்தில் இருந்து வந்துள்ளன.

கி.பி.1563இல் போர்ச்சுகலைச் சார்ந்த கார்சியா (Garcia) என்பார் வங்கத்தில் சங்குப் பொருட்களுக்கு மிகுந்த மதிப்பு இருந்ததாகவும், திருமணமான பெண்களே அவற்றை அணிய வேண்டும் எனவும் ஆனால் தற்பொழுது அதன் முக்கியத்துவம் குறைந்து வருகிறது எனவும் குறிப்பிடுகிறார்[3].

---

[1] Dutt 1924:422

[2] Dutt 1924:422

[3] Yule and Burnell 1996:184

கி.பி. 1673இல் வருகைபுரிந்த ஜான் ஃபிரையர் என்பார் தமது பயணக் குறிப்பில் தமிழகக் கடல் பகுதியில் முத்து, சங்கு ஆகியன கிடைக்கும் எனக் குறிப்பிடுகின்றார். இவர் சங்கோ (Chanquo) எனக் குறிப்பிடுவதோடு இதுவே, முத்தின் அன்னை என்றும், முத்தைவிட இவை அழகு குறைந்தவை என்றும் கூறுகிறார். ஆயினும் வழுவழுப்பாகவும், வெண்மையாகவும் உள்ள சங்குத் துண்டங்கள் மேசைகள் மற்றும் பிற பொருட்களை அலங்கரிக்கப் பயன்படுவன என்றும் அவர் குறிப்பிடுகிறார்[1]. மேலும் இச்சங்குகள் வங்காளத்திற்கு வளையல்கள் மற்றும் பிற பொருட்கள் செய்ய அனுப்பப்படுவதாகவும், மணப்பெண் இதைக் கண்டிப்பாக அணிதல் வேண்டும் என்றும் கூறுகிறார்.

17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வங்கக் கடற்கரையோர நாடுகளைப் பற்றிக் குறிப்பு வரைந்த தாமஸ் பௌரி (Thomas Bowrey) என்பார், ஒரிசா வங்க மக்கள் தூத்துக்குடியிலிருந்து பெறப்பட்ட சங்கு வளையல்களை அணிந்திருந்ததாகக் குறிப்பிடுறார். அவற்றுள் பல வெண்மை நிறத்தையும், மற்றன சிவப்பு வண்ணப்பூச்சினையும் உடையனவாக இருந்ததாகவும் இவ்விரண்டு வகையும் உயர்வாகக் கருதப்பட்டதையும் குறிப்பிடுகிறார்[2].

1888ஆம் ஆண்டு முகர்ஜி என்பார், வங்காள மணமான இந்துப்பெண்கள் கட்டாயமாகச் சங்கு வளையல்கள் அணிந்திருந்தனர் எனவும், மேலும் சங்கு வளையல்களைத் திருமண வரதட்சணையாக மணமகளின் தந்தை வழங்குவார் என்றும் குறிப்பிடுகிறார். இந்தியாவின் மற்ற பகுதிகளில் அவற்றிற்குப் பதிலாகத் தந்த வளையல்கள் வழங்கப் படுவதாகக் குறிப்பிடுகிறார்[3]. திபெத்திலும் மணமான

[1] Crooke 1967:366

[2] Bowrey 1967:208-209

[3] Mehta 1960:144

பெண்கள் சங்கு அணியும் வழக்கம் இருந்து வந்துள்ளது. விதவைகள் இவ்வளையல்களை அணிவதில்லை[1].

வங்கத்தில் செய்யப்படும் சங்கு அணிகலன்கள் திபெத், பூட்டான், சியாம், அஸ்ஸாம், ஒரிசா, பீகார் ஆகிய பகுதிகளுக்கு அனுப்பப்பட்டன[2]. சொரசொரப்பான சங்கு வளையல்கள் சோட்டா நாக்பூரைச் சேர்ந்த சந்தால் (Santals) பெண்கள், சிட்டகாங்கைச் சார்ந்த மாக் (Maghs) இனத்தோர், திபெத் வாழ் பழங்குடியினர் ஆகியோரிடையே புகழ் பெற்றவை[3].

அஸ்ஸாமில் நோக்பாங்க் (Nokphang) பகுதியில் வசிக்கும் கொன்யாக் (Konyak Nagas) என்னும் நாகர் இனப் பெண்கள் சங்கின் முழுப்பகுதியையும் பெரிய துளையிட்டு சுருளச்சை வெளியெடுத்து வளையல்களாக அணிகின்றனர்[4]. அங்காமி (Angami) இன ஆண்கள் இச்சங்கைக் கழுத்தின் பின்புறம் அணிந்தனர். இது போலல்லாமல் நாகர் இனப்பெண்கள் கையில் அணிவது சங்கு அணிகலன்களினின்று மாறுபட்ட பயன்பாட்டைத் தெரிவிக்கிறது (படம் 28).

சங்கில் உருவாக்கப்பட்ட [illegible]டுகள் திபெத், அஸ்ஸாமிலுள்ள அபோர் (Abor), நாகா (Naga) மாவட்டங்களில் இன்றும் பயன்படுத்த[illegible] வருகின்றன[5]. டாக்காவிற்கு வருகைபுரிந்த தேவர்னியா (Tavernier) என்பார் பூட்டான் பகுதி வணிகர்கள் இத்தகைய வட்ட சதுரத் தகடுகளை டாக்காவிலிருந்து அதிக விலைக்கு வாங்கிச் சென்றதாகக் குறிப்பிடுகிறார்[6].

---

[1] Dutt 1924:421

[2] Dutt 1924:422

[3] Dutt 1924:425

[4] Hutton 1930:81

[5] Hornell 1942:121

[6] Ball and Crooke 1925



படம் 28. சங்கு வளையல் அணிந்த நாகா இனப்பெண்கள்
(நன்றி **Hutton 1926**)

இதைப் போன்றே சங்கில் செய்யப்பட்ட வட்ட, சதுரத் தகடுகளில் கழுத்தணிகளை நாகர் இனமக்கள் பயன் படுத்தினர்[1]. மேலும் நாகர் இன ஆண்கள் கூம்பு வடிவிலான பிரம்பால் புனையப்பட்ட தலைக் கவசங்களின் உச்சிப்பகுதி சங்குத் தகடுகளால் அழகூட்டப்பட்டிருக்கும். அபோர் பகுதியில் பணிபுரிந்த நாகா இன ஆண்கள் குழிவுடைய சதுர வடிவச் சங்குத் தகடுகளைக் கழுத்தணியாகப் பயன் படுத்தினர். அவ்வணிகளின் இடையே சிவப்புக் கல்மணிகளும் கோர்க்கப்பட்டிருந்தன என ஹார்னல் குறிப்பிடுகிறார்[2].

[1] Hornell 1942:121
[2] Hornell 1942:121

வங்காளத்தில் 1960களில் மீன் அல்லது புறாக்களின் தொடர் உருவங்கள் சங்கின் மேற்புறங்களில் அதிகம் இடம்பெற்றிருந்தன. மேலும் சிப்பிகளின் படங்களும், சங்கிலி போன்ற அமைப்பும், இடையே சாய்சதுர உருவமும் செதுக்கப்பட்டு இருக்கும். இவைகளை மேலும் அழகூட்டச் சிவப்பு, பச்சை வண்ணங்களும் உருவ இடுக்குகளிடையே பூசப்பட்டு பின்னர் வளையலின் மேற்பகுதி பளபளப் பாக்கப்படும்[1]. இவைமட்டுமன்றி பிற அழகுப் பொருட்களும் வங்காளத்தில் செய்யப்படுகிறன (படம் 29அ).



படம் 29அ. வங்கத்தில் சங்கினால் செய்யப்பட்ட அழகுப்பொருட்கள்
(நன்றி Kamaladevi 1976)

லோக் (Locke) என்பவர் 1973இல் வியன்னாவில் நடைபெற்ற பொருட்காட்சியில் வைக்கப்பட்ட இந்தியச் சங்குப் பொருட்கள் பற்றிய குறிப்பில், சங்கு வளையல்களில் அதிக எண்ணிக்கையிலான அழகுவேலைப்பாட்டு மாதிரிகள்

[1] Mehta 1960:144

இருந்ததாகவும் அவை ெ ழுவழுப்பு குறைந்த அகலமான சங்கு வளையலிலிருந்து நுண்ணிய வேலைப்பாடுகள் நிறைந்த மிகக் குறுகிய மெல்லிய உருண்ட வளையல்கவ வரை செய்யப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார். நுண்ணிய வேலைப்பாடுகள் என்பது அரம், கத்தி கொண்டு அழகுறக் சிறப்ட்ட பல உருவங்கள், புலிகளின் தலைஉருவங்கள், மினுக்கும் பொருள்கள் கொண்டு அழகு செய்தல், வண்ணம் பூசுதல், தங்க முலாம் பூசுவது ஆகியனவாம்[1].

தாயத்து மற்றும் மந்திரம் செய்யப் பயன்படும் சங்குகள் வளைந்தும், வண்ணம் பூசப்பட்டும், மணிகளாலோ தங்கத் தகடுகளாலோ அழகுபடுத்தப்பட்டிருக்கும்[2].

மணிக்கட்டிலிருந்து முழங்கை வரை உள்ள கைப்பகுதி முழுவதுமாகச் சிறிய வளை அணியும் வழக்கம் ம லைப் பகுதிகளில் வசிக்கும் பெண்களிடம் உள்ளது. அஸ்ஸாம் பகுதியிலுள்ள நாகர் இனத்தின் ஒரு பிரிவினர், மேற்கு வங்கத்தில் உள்ள சந்தால் இனப் பெண்கள், ஆந்திரா, கர்நாடகா, ஒரிசா ஆகிய பகுதிகளில் வசிக்கும் லம்பாடி இன மக்கள் இத்தகைய வளையல் வரிசைகளை அணியும் வழக்கம் இன்றளவும் உள்ளது.

வங்காளத்தில் சங்கால் செய்யப்பட்ட அழகிய வேலைப்பாடுகள் நிறைந்த வண்ண வளையல்களை அணிவதோடுமட்டுமன்றிச் சங்கு மோதிரம், மாலைகள், காதணிகள், தலைமுடியலங்காரப் பொருட்கள், தொப்பிகள், சட்டை மற்றும் கோட் பொத்தான்களாகப் பயன்படுத்தப் படுகின்றன. அறிவியல் வளர்ச்சி, மேலைப் பண்பாட்டின் தாக்கம் முதலியவற்றால் இதன் தேவை அருகிவிட்டது என்றே கூறலாம்.

ஆங்கில அரசு தமிழகத்தில் சங்கெடுத்தலை அரசுரிமையாக்கியதால் மொத்தச் சங்கையும் ஒருவருக்கே விற்பனை செய்து வந்தது. இவற்றை வாங்கி வங்காளத்தில்

---

[1] Mehta 1960:144

[2] Mehta 1960:144

விற்கும் ஒருவரால் தன்னிச்சையாக விலை விதிக்கட்:பட்டதால் தொழில் நசிவுற்று வருவதாக தத் வ ருந்திக் கூறியுள்ளார்[1].

டாக்காவில் சங்காரிபஜார் என்னுமிடத்தில் சுகாதாரமற்ற இடத்தில் ஏறத்தாழ 900 கைவினைக் கலைஞர்கள் இருந்தனர். அங்கு வணிகம் புரிந்த சில சங்காரி இனத்தினர் சங்குத் தொழில் தெரிந்தோரை வேலைக்கு அமர்த்தி மிகுந்த பணம் சேர்த்தனர்[2]. இவர்கள் மற்ற பகுதியில் உள்ள சங்கறுப்போருடன் எவ்வித உறவும் கொள்வதில்லை. இவர்கள் திருமண உறவை இச்சமூகத்தினரிடையே செய்து கொள்வர்.

இச்சமூக இளைஞர்கள் மேல்படிப்பு படிக்கத் தொடங்கிவிட்டதால் இத்தொழில் புரிவோர் எண்ணிக்கையும் குறைந்து வருவதோடல்லாமல் சங்கின் விலை கூடுவதால் அதன் தேவையும் குறைந்து வருகிறது. மேலும் சுகாதாரமற்ற சிறிய அறைபோன்ற பகுதிகொண்ட தொழிற்கூடங்கள் மனச்சோர்வையும் நரம்புத் தளர்ச்சியையும் இளைஞர்கள் இடையே உருவாக்குகிறது. சங்குத் தொழிலில் கிடைக்கும் ஊதியத்தைவிட பிற தொழிலில் குறைந்த வேலையில் அதிக ஊதி★யம் கிடைக்கிறது[3].

1920-30களில் ஏற்பட்ட சங்கின் விலையுயர்வு, தொழிலாளர் ஊதிய உயர்வு, அரக்கு வளையல்களின் வருகை போன்றவை சங்கு வளையல்களின் தேவை குறையக் காரணங்களாகும்[4].

கடந்த நூற்றாண்டின் தொடக்கக் காலங்களில் தமிழகத்தில் விற்கப்பட்ட சங்கு மோதிரங்கள் ஸ்த்ரோம்பஸ் (Stromous) எனப்படும் வேறு சிப்பி வகையைச் சார்ந்த

---

1 Dutt 1924:423

2 Dutt 1924:425

3 Dutt 1924:426

4 Dutt 1924:425

மெல்லுடலியின் ஓட்டில் தயாரிக்கப்பட்டன என ஹார்னல் குறிப்பிடுகிறார்[1].

சங்காலான மோதிரங்களை அணிகலனாக மட்டும் பயன்படுத்தியவர்களுள் மலபார் பகுதியைச் சேர்ந்த செருமான் குலத்தினரும், திருவிதாங்கூர் பகுதியைச் சார்ந்த மலைவேடர்களும் மட்டுமே அடங்குகின்றனர்[2]. இவர்களில் ஆண் பெண் இருவரும் மற்ற மணிகளுடன் அழகிய சங்குத் துண்டங்களையும் கோர்த்து மாலையாக அணிகின்றனர்[3].

செருமான் இன மக்கள் சங்கு மாலை அணிவதில் மிகுந்த அக்கறை கொண்டிருந்தனர். சங்கு மோதிரங்களைக் கோர்த்து மிக நீளமான மாலையை ஒருவடமாக இல்லாமல் இரண்டு, மூன்று வடங்களாக மடக்கி அணிவது வழக்கமாயிருந்தது[4] (படம் 29ஆ).



படம் 29ஆ. கேரளாவில் செருமான் இனப்பெண்கள் அணிந்துள்ள சங்கு மோதிரக் கழுத்தணிகள் (நன்றி **Hornell 1914**)

---

[1] Hornell 1914:158

[2] Thurston and Rangachari 1987 VI:333

[3] Hornell 1914:158

[4] Hornell 1914:159

சங்குத்தாலி என்பது சங்கு உருவமுள்ள பிறபொருள்களால் செய்யப்பட்ட தாலியெனவும், சங்கினால் செய்யப்பட்டு மகளிரணியும் தாலியெனவும் பரதவரிடையே வழங்கும் சொல்லாக இருந்துள்ளது[1]. சிலவகைச் சங்குகள் கோயில்களில் விளக்காகப் பயன்படுத்தப்படுகின்றன[2].

இச்சங்குகளில் செய்யப்பெற்ற அணிகலன்களைக் காலிலும் அணிவதாக மெக்லீன் குறிப்பிடுகிறார். ஆனால் எவ்வகையில் அது காலில் அணியப்பட்டதென்பதற்கான சான்றுகள் இல்லை. மேலும் உயர்குடியில் பிறந்தோர் இறந்தால் அவர்களுடன் சங்குப் பொருட்கள் புதைக்கப்படுவதாக மெக்லீன் குறிப்பிடுவதற்கான சான்றுகள் இல்லை[3].

20ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில் சங்கைத் தாலியாகப் பயன்படுத்திய சங்குத்தாலி வேளாளர் என்னும் சமூகத்தினர் இருந்தனர். ஆனால் தற்பொழுது இவ்வழக்கம் அவர்களிடையே உள்ளதா இல்லையா என அறியப் படவில்லை.

வேளாளர், இடையர்களைத் தவிர தென்னிந்தியாவில் சங்கு வளையல்களை யாரும் திருமணத்திற்கு அணிவதில்லை. பழங்காலத்திலிருந்தே தமிழகத்தில் தாலியில் சங்கு கோர்க்கப்பட்டு அல்லது சங்குபோன்ற உருவம் உலோகத்தில் செய்யப்பட்டு அணிகலனாக அணியப்பட்டு வந்தது.

இடையர் குலத்தின் ஒரு பிரிவான, திருவனந்தபுரம் பகுதியில் வாழும் புவந்தன் குலத்தினர் அனைத்து விழாக்களிலும் சங்குத்தாலி அணியும் வழக்கம் கொண்டிருந்தனர். மலபார், கொச்சி ஆகிய பகுதியைச் சார்ந்த தண்டன், புலையன் பிரிவினரும் சங்குத்தாலி அணிந்தனர்.

---

[1] *Tamil Lexicon* 1982:1230

[2] Maclean 1893:187

[3] Maclean 1893:187

திருமணத்தின்போது சங்கின் ஒரு துண்டு, தாலிக் கயிற்றில் இணைக்கப்பட்டு நல்ல நேரத்தில் மணமகனால் மணமகள் கழுத்தில் பூட்டப்படும். பிறகு மணப்பெண் ஊரில் உள்ள பெரியவரிடம் சென்று ஆசிபெற்றபின் கீழே விழுந்து வணங்க வேண்டும். திருமண வாழ்க்கை இன்பமுடன் விளங்குமானால் சங்கு வடக்கு, கிழக்கு, மேற்குப்புறமாகச் சாயும் எனவும், துன்பம் நிறைந்தது என்றால் தென்புறம் சாயும் எனவும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

போர்த்துகீசியர் தமிழகக் கடற்பகுதியில் ஆளுமை செலுத்திய காலங்களில் ஏராளமான பரதவர்கள் கிருத்துவ சமயத்திற்கு மாற்றம் செய்யப்பட்டனர். அதற்கு முன்னர் பரதவர்கள் குலத்தவரின் தாலிக்கயிற்றின் நடுவில் இந்துக்கடவுளின் உருவம் பொறித்த அணிகலனும் அதன் இருபக்கங்களிலும் சிறிய சங்கும் தொங்கவிடப் பட்டிருக்கும். இதையே அப்பொழுது சங்குத்தாலி என அழைத்தனர்.

வளையல் வகைகள்

சங்குகள் வளையல்களாகப் பெரிய தொழிற் சாலைகளில் அறுக்கப்பட்டு நுண்ணிய வேலைப்பாட்டிற்காக கீழ்க்கண்ட ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டன[1].

*தித்கூடி* (Titkuti): தூத்துக்குடி, இராமேஸ்வரம், இலங்கைப் பகுதியில் கிடைக்கும் முதல் தரமான சங்குகளில் அறுக்கப்படும் வளையல்களான இவை தரத்தில் சிறந்தவை.

*ஜட்கி* (Jadki): தித்கூடி வளையல்களைக் காட்டிலும் சற்று தரத்தில் குறைந்தவை. இவையும் தூத்துக்குடி, இராமேஸ்வரம் இலங்கைப் பகுதியில் பிடிக்கும் சங்குகளில் செய்யப்படுபவைதான்.

*பட்டி* (Patti): யாழ்ப்பாணப் பகுதியிலிருந்து பெறப்படும் சங்குகளில் செய்யப்படும் இவை தரத்தில் சிறந்தவை. சந்தால் மலையினப் பெண்கள் இவ்வகை வளையல்களை அணிவார்கள்.

---

[1] Hornell 1914

*தோலா* (Dhola): யாழ்ப்பாணக் கடல்பகுதியில் எடுக்கப்பட்ட இறந்த சங்குகளில் செய்யப்படும் வளையல்கள் இவை தரம் குறைந்தவை.

*அலபிலா* (Alabila): மிகவும் தரம் குறைந்த இவையும் யாழ்ப்பாண தோலா வகைச் சங்கில் செய்யப்படுபவை.

கமலாதேவி சட்டோபாத்தியாயா என்பார் 1970களில் நடத்திய களஆய்வில் கண்டறிந்த சங்கு வளையல்களின் வகைகளைக் கீழ்க்கண்டவாறு தமது நூலில் அளித்துள்ளார்[1].

வெண்ணிறச் சங்கு வளையல்கள் அதிக அளவில் விற்பனையாகின்றன. வண்ணச் சங்கு வளையல்கள் சோனாமுகி (Sonamukhi), மாயா (maya), செந்நிறவளையல் ஆகிய மூன்று வகைப்படும். சோனாமுகி (பொன்நிறம்) என்னும் வகை வளையல்கள் மஞ்சள், பச்சை, சிவப்ப நிறங்கள் அழகாகப் பூசப்பட்டு வளையலின் மேற்பகுதியில் ஐந்து சிவப்புப் புள்ளிகள் வைக்கப்பட்டிருக்கும். மாயா வகை வளையல்களில் மூங்கில் தூரிகை கொண்டு வண்ணங்கள் பூசப்பட்டிருக்கும்.

சாதாரண வளையல்களில் வரிகள் செதுக்கப்பட்டுப் பலவிதங்களில் அழகூட்டப்பட்டிருக்கும். இவ்வகையில் ஜலதரங்கம் எனப்படும் இசைக்கருவியின் பெயர் கொண்ட வளையல்கள் வண்ணம் பூசாமல் அலைபோல் காணப்படும். மதர்தனா (Matardana) என்னும் வகைகளின் மேற்பகுதி பட்டாணி போன்ற உருவங்கள் அரம்கொண்டு செதுக்கப்பட்டவை. மதிதானா (Matidana) என்னும் வளையல்கள் சதுரவடிவ உருவங்களில் முத்துக்கள் போல அழகூட்டப்பட்டிருக்கும். பாட்டியா (Bhatia) என்னும் வகைகள் மூன்று சாய்வுக் கோடுகளைத் தொடர்ந்து சுற்றுப்புறத்தில் 'M' வடிவமிடப்பட்டிருக்கும். மனே-ந-மனே (Mane-na-Mane) என்னும் வகைகள் புள்ளிகளையும், பக்கங்களில் கோடுகளையும் கொண்டது. சிறுமிகளுக்காகச் செய்யப்பட்ட சிறிய வளையல்கள் கினிபாலா (GiniBala) என்றழைக்கப்பட்டன.

---

[1] Chattopadyay 1976:111-2

# 5. அணிகலன்கள் செய்தல்

சங்கின் வடிவத்தை எளிய சொற்களால் விளக்க இயலாது. அது போலவே சங்கினால் அணிகலன்கள் செய்யும் தொழில் நுட்பமும் பிற அணிகலன்கள் செய்வதைப் போலன்றி வேறுபாடுகள் கொண்டதாகும். சிந்து சமவெளி நாகரிகம் முதல் இன்றுவரை சங்கு அணிகலன்கள் செய்யும் தொழில்நுட்பம் காலத்திற்கேற்றவாறு சில மாற்றங்களைக் கண்டது. சிந்து சமவெளியில் கிடைத்த சங்குப் பொருட்களைக் கொண்டு அவற்றின் தொழில்நுட்பம் குறித்த ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன[1]. அதற்குப் பின்னர் அணிகலன் தொழில்நுட்பம் குறித்த சான்றுகள் அகழாய்வில் கிட்டிய பொருட்களைத் தவிர வேறு இல்லை. வேதங்களிலும் அதன் பின்னர் இயற்றப்பட்ட வடமொழி நூல்களிலும் இத்தொழில்நுட்பம் குறித்த கருத்துகள் உள்ளதாகக் கூறப்படினும் அவை பற்றிய ஆய்வுகள் எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. தமிழகத்தில் சங்கு அணிகலன் தொழில்நுட்பம் குறித்த கருத்துகள் சங்ககால இலக்கியங்களில் காணப்படுகின்றன. அகழாய்வில் கிட்டிய சங்குப் பொருட்கள் இதற்குத் துணைச் சான்றுகளாக அமைகின்றன. சங்ககாலத்தைத் தொடர்ந்து வந்த காலத்து இலக்கியங்களிலும் சில குறிப்புகள் உள்ளன. இடைக்காலத்தில் அணிகலன் செய்யும் முறை பற்றிய இலக்கியச் சான்றுகள் இல்லை. 20ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் ஹார்னலின் ஆய்வு வங்காளம், தமிழகம் ஆகிய பகுதிகளில் சங்குப் பொருட்கள் செய்யும் முறை குறித்து அமைந்தது[2]. அதற்குப் பின்னர்த் தமிழகத்தில் சிறு அளவிலான சங்கு அணிகலன்கள் செய்யும் தொழிற்கூடங்கள் உள்ளமை அறியப்பட்டுள்ளது. 2000ஆம் ஆண்டு சங்குப்

---

[1] Kenoyer 1984:49-63

[2] Hornell 1914

பொருட்கள் தொழில்நுட்பம் குறித்தக் கள ஆய்வு இராமேஸ்வரம் பகுதியில் மேற்கொள்ளப்பட்டது. சிந்து சமவெளி நாகரிக காலத்திலிருந்து தற்காலம் வரை கிடைத்த சான்றுகளைக் கொண்டு வரலாற்று அடிப்படையில் சங்கணிகலன்கள் செய்யும் தொழில்நுட்பமுறை குறித்த செய்திகளை நுணுகி நோக்கலாம்.

சிந்து சமவெளியில் கிடைத்த சங்கு அணிகலன்கள் மற்றும் பிற பொருட்களைப் பற்றியும் அவற்றை உருவாக்கும் தொழில் நுட்பத்தைப் பற்றியும் கெனாயர் என்பார் ஆய்ந்துள்ளார். இவர் அகழாய்வு மற்றும் மேற்பரப்பில் கிட்டிய சங்கு மற்றும் பிற பொருட்களையும் எட்டு விதமாகப் பிரித்துள்ளார். அவை: 1. முழுமைபெற்ற அணிகலன்கள்; 2. முழுமைபெறாத அணிகலன்கள் மற்றும் சங்குத் தொழிற்கூடக் கழிவுகள்; 3. முழுமைபெற்ற அடுக்களைப் பாத்திரங்கள்; 4. முழுமைபெறாத அடுக்களைப் பாத்திரங்கள்; 5. முழுமைபெற்ற கல் பதித்த பொருட்கள் ; 6. முழுமைபெறாத கல் பதித்த பொருட்கள் ; 7. பிற சிறப்புப் பொருட்கள்; 8. முடிவுறாத பொருட்கள் மற்றும் தொழிற்கூடக் கழிவுகள் ஆகும்.

அணிகலன்கள்

மொஹஞ்சதாரோ, ஹரப்பாவில் கிடைத்த சங்குப் பொருட்களில் ஏராளமான உடைந்த வளையல்கள் கிடைத்துள்ளன. இவ்வளையல்கள் சிறப்புக் கருவிகளைக் கொண்டு செய்யப்பட்டுள்ளன. வளையல்களை அறுப்பதற்கு முன்னர் முதலில் சங்கின் உச்சிப்பகுதியை உடைத்து, திருகுச்சுருளையும் உடைத்தெடுப்பர் (படம் 30). இதற்கு கல் அல்லது உலோகத்தால் ஆன சுத்தியல் கொண்டு சங்கின் உச்சிப்பகுதியை உடைத்துப் பின்னர் உலோகக் குத்துக் கோடாரி (சுத்தியல் மற்றும் தமரூசி அல்லது துளையிடும் கருவி) கொண்டு உட்சுவர் தடுப்புகளை அகற்றுவர். அவ்வாறு குடைந்தெடுக்கப்பட்ட சங்கைச் சாய்வாக வளைந்த ரம்பம் கொண்டு அறுத்து வளையங்களைப் பிரித்தெடுப்பர். பின்னர் வளையத்தின் உட்பகுதியில்

துருத்திக் கொண்டிருக்கும் பகுதியை வெட்டியெடுத்தவுடன் அவ்வளையங்கள் தேய்க்கப்பட்டு, அவற்றைத் தேவையான குறுக்களவிற்கு மாற்றுவர். இதன் உட்பகுதி ஒழுங்கற்றுச் சொரசொரப்பாகக் காணப்படும். உருளையான மணற்கல் அல்லது வேறு மணற்பொருள் கொண்டு செய்த உருளையை வளையத்தினுள் செலுத்தி உட்புறம் சீராக்குவர். வெளிப்புறம் மணற்பாறைகளில் தேய்க்கப்பட்டு இருக்கலாம். இதன் பின்னர் வளையலின் மேற்புறத்தில் வரிவடிவங்களை இடுவர்.



படம் 30. சிந்து சமவெளி காலத்தில் சங்கு வளையல் செய்யும்முறை (நன்றி Kenoyer 1985)

முழுமையான வளையல்களின் இணைப்புப் பகுதிகளின் மேற்பகுதியில் உருவங்கள் செதுக்கப்பட்டு இருக்கும். இணைப்புப்பகுதியின் தன்மையைப் பொறுத்து பெரும்பாலும் பூப்போன்ற உருவங்களையோ, 'U' வடிவங்களையோ அமைப்பர். மற்ற பகுதிகளில் வேறு வடிவங்கள் அல்லது பாம்பின் தலைபோன்ற வடிவங்களைச் செதுக்குவர். அகலம் குறைந்த வளையல்களின்

மேல்பகுதியில் பெரும்பாலும் முக்கோண வடிவம் அல்லது புடைப்பு உருவத்தைச் செதுக்குவர்.

நுண்ணிய செதுக்கு வேலைகளைச் சிக்கிமுக்கிக்கல் போன்ற படிகக்கல்லால் (Chert Blade) ஆன தகடுகளால் செய்வர். அரம் போன்ற கருவியும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது செம்பு, வெண்கலம் அல்லது இரண்டும் கலந்து செய்யப்பட்டிருக்கலாம் என ஆய்வுகள் தெரிவிக்கின்றன. ஆனால் வளையல் அறுப்பதற்கு வெண்கலத்தாலான ரம்பங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். சிந்து சமவெளியில் கிட்டியுள்ள வளையல் செய்த சங்குக் கழிவுகளை ஆய்வு செய்ததில் பிறை வடிவம் கொண்ட 0.4 மிமீ - 0.6 மிமீ பருமனுள்ள (thickness) அரங்கள் பயன்படுத்தப் பட்டிருக்கவேண்டும் எனத் தெரிகிறது. கழிவுப் பொருட்களின் கீறல்களை நோக்குகையில் ரம்பத்தின் முனைப்பகுதி சற்றே வளைந்தும், பற்கள் படிந்த படுவரிகளை நோக்குகையில் ரம்பத்தின் பற்கள் இரு பக்கங்களிலும் அறுப்பது போன்று அமைந்திருந்தன எனவும் கூறலாம்.

வளையல்கள் தவிர ஹரப்பாவில் மோதிரங்கள், மணிகள், தொங்கணிகளும், துளையிடப்பட்ட வட்டத் தகடுகள் முதலியனவும் கிடைத்துள்ளன. மோதிரங்கள் சங்கின் சுருள் பகுதியிலும், துளையிடப்பட்ட உருளைகள் மற்றும் உருளை மணிகள் சுருளச்சிலும், குழி, குமிழ் வட்டத் தகடுகள் சங்கின் ஒட்டுறைகளிலும் செய்யப்பட்டிருக்க வேண்டும். பெரிய வட்டத்தகடுகள் அணிகலனாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். மேலும் இதுபோன்ற உருவமுடைய சங்கு வட்டத் தகடுகள் மெசபடோமியாவிலும் கிடைத்துள்ளன[1]. இவ்வணிகலன்களைத் தயாரிக்கப் பலவித முறைகளை அவர்கள் கையாண்டுள்ளனர். சங்குமணி, தொங்கணிகள் செய்யச் சங்குத்துண்டங்கள் கொத்தப்பட்டு, தேய்க்கப்பட்டு, துளையிடப்பட்டன. சில வேளைகளில் ரம்பங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. சிறிய வட்ட உருவங்கள் செம்பு மற்றும் வெண்கலத்தாலான சிறிய குழாய்

---

[1] Kenoyer 1984:49-63

வடிவக் கருவிகளைக் கொண்டு செய்துள்ளனர். நுண்துளைகள் சிக்கிமுக்கிக்கல் போன்ற படிகக்கற்களால் இடப்பட்டன. கூரிய கற்களால் 3மிமீ பருமனுள்ள ஒரு சங்குப் பொருளை ஒரு நிமிடத்தில் துளையிடலாம் என ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

### அடுக்களைப் பாத்திரங்கள்

இவை பெரும்பாலும் வெண்சங்கல்லாத பிற பெரிய சிப்பி வகைகளினால் செய்யப்பட்டுள்ளன. இப்பாத்திரங்கள் வண்ணங்களை ஊற்றி வைக்கவும், எண்ணைப் பொருட்களை வைக்கவும் பயன்படுத்தியிருக்கலாம். சங்கைப்போலவே உள்ள *சிக்கோரஸ் ரோமஸ்* எனப்படும் சிப்பியில் அகப்பை அல்லது கரண்டிகள் அதிக அளவில் செய்யப்பட்டன. கரண்டிகள் செய்வது கடினமான பணியாகும். இக்கரண்டிகள் செய்வதற்கு இச்சிப்பியில் மேலுள்ள புடைப்புகள் (varices) சுருள்கள் தட்டி எடுக்கப்படும் (படம் 31). மேலுள்ள பெரிய சுருளிலிருந்து சிப்பியின் குறுகிய கீழ்ப்பகுதி வரை சாய்வாக வெட்டி யெடுக்கப்படும். கீழ்ப் பகுதியிலிருந்து கைப்பிடி போன்ற நீளமான இணையான பக்கங்கள் உருவாக்கப்பட்டு மேல்பகுதி வரை தட்டியெடுக்கப்படும். இம்முறையில் அகப்பை போன்ற அமைப்பு சிறிது சிறிதாகத் தட்டியெடுக்கப்படும். வெட்டியெடுக்கப்பட்ட மறு அரைப் பகுதியில் கரண்டியையும் செய்ய இயலும். பின்னர் இவை சொரசொரப்பான கற்களால் தேய்க்கப்பட்டு முழுமையான கரண்டிகள் உருவாக்கப்படும். இச்சிப்பி இயற்கையிலேயே மேடுபள்ளங்களைக் கொண்டு விளங்குவதால் இதன் மேற்பகுதிகள் சொரசொரப்பாகவே காணப்படுகின்றன. மேலும் கடல் புழுக்களால் துளையிடப்பட்ட சங்குப் பாத்திரங்களின் உட்பகுதிகள் பசைகொண்டு அடைக்கப் பட்டன. இப்பொருள் செய்யப்படும் காலத்தையும் இதன் உருவ அமைப்பையும் நோக்கும்போது அடுக்களைப் பாத்திரங்களாக இவை குறைவாகப் பயன்படுத்தப்பட்டுச் சமய நோக்கங்களுக்காக அதிகம் பயன்படுத்தப் பட்டிருக்கலாம் எனத் தெரிகிறது.



படம் 31. சிந்து சமவெளி காலத்தில் சங்கில் நீர்க்கலன்கள் செய்யும் முறை (நன்றி Kenoyer 1985)

## சிப்பி பதிப்பு வேலைகள் (Shell Inlays)

சங்கு மற்றும் பிற சிப்பிகளின் துணுக்குகள் மர வேலைப் பொருட்களிலும் பிற தட்டு முட்டுச் சாமான்களிலும் பதிக்கப்பெற்றன. இவை சிலைகளில் அல்லது வேறு சிறப்புப் பொருட்களில் பதிக்கப்பட்டன. விளிம்புகள் பதிப்பதற்கேற்றவாறு சாய்வாகச் செதுக்கப்பட்ட இவை ஜிப்சம் சாந்து அல்லது தார் கொண்டு ஒட்டப்

பட்டிருக்கலாம். பதிக்கப்பட்ட துணுக்குகளின் சாய்வு விளிம்புகளில் சிவப்பு அல்லது கறுப்பு நிறமிகள் காணப்படுகின்றன. ஆனால் எப்பொருளைக் கொண்டு பதிக்கப்பட்டன என்பது அறியப்படவில்லை.




படம் 32. சிந்து சமவெளி காலத்தில் சிப்பிப் பதிப்பு பணிக்கு சங்கு உடைக்கும் முறை (நன்றி Kenoyer 1985)

இவை சிறுசிறு துகள்களாக உள்ள காரணத்தினால் எவ்வகைச் சிப்பியிலிருந்து உடைத்தெடுக்கப்பட்டன என்பதும் அறிய இயலாமல் உள்ளது. வளையல்கள் செய்யப்பட்ட சங்குப்பொருட்களில் கிடைத்த கழிவுப்

பொருட்களிலிருந்து தட்டையான அழகிய உருவங்கள் செய்யப்பட்டுள்ளன (படம் 32,33). ஆனால் *சிக்கரியஸ் ராமோசஸ்* (*Chicoreus ramosus,* Linnaeus) கழிவுப் பொருட்களிலும் இவ்வாறான உருவங்கள் செய்யப் பயன்பட்டுள்ளன. ஆயினும் மொஹஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய இடங்களில் கிட்டிய சிப்பிக் கழிவுகளைக் கொண்டு நோக்குகையில் *ஃபாஸியோலாரியா ட்ரபீஸியம்* (*Fasciolaria trapezium,* Linnaeus) மற்றும் *லாம்பிஸ் ட்ரன்கேட்டா செபே* (*Lambis truncata sebae,* Roding) வகைச் சிப்பிகள் பதிப்பதற்கென்றே பயன்படுத்தப்பட்டன எனத் தெரிய வருகின்றது.



படம் 33. சிந்து சமவெளி காலத்தில் பிற அழகுப் பொருட்கள் செய்யச் சங்கு உடைக்கும் முறை (நன்றி Kenoyer 1985)

*லாம்பிஸ் ட்ரன்கேட்டா செபே* வகைச் சிப்பிகள் பெரிய துண்டங்கள் பயன்படுத்தப்படும் பதிப்பு வேலைகளுக்கும் *ஃபாஸியோலாரியா ட்ரபீஸியம்* சிறிய துணுக்குகளாகவும் பயன்படுத்தப் பட்டுள்ளன. சிப்பிகளின் சுற்றுப்புறச்சுவர்களில் உள்ள பகுதிகளில் துணுக்குகள் செய்யப்பட்டன. ஆனால் வளையல் அறுக்கப் பயன்படுத்தப்படும் ரம்பம் போல் மெல்லிய முனை

விளிம்புகள் அல்லாது இவற்றை அறுக்கப் பயன்படுத்தப் பட்ட ரம்பங்களில் முனை விளிம்புகள் 7மிமீ மொத்தம் உடையனவாக இருந்திருக்கும்.

## பிற பொருட்கள்

மேற்கூறிய பொருட்கள் மட்டுமன்றிச் சிந்து சமவெளி கைவினைக் கலைஞர்கள் சிப்பி வகைகளில் பலவிதப் பொருட்களை உருவாக்கினர். சங்கின் திருகுசுருளச்சில் செய்யப்பட்ட கூம்பு, உருளை, கோளம், விளையாட்டுப் பொருட்கள், அலைபோன்ற வடிவங்கள், மூடிகள், இறைவனுக்குப் படைக்கப்படும் புனிதநீர் வைக்கும் பாத்திரங்கள், விலங்குருவங்கள் ஆகியனவற்றைப் படைத்தனர். திருகுச் சுருளச்சில் செய்யப்பட்ட துளை இடப்பட்ட சிறு உருளைகள் அணிகலன்களாகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். மொஹஞ்சதாரோவில் கிடைத்தது போலவே சிந்து சமவெளிப் பகுதியின் ஏனைய ஊர்களில் கிடைத்த சங்குப் பொருட்களின் வரிவடிவங்களும், செதுக்கு வேலைகளும் அமைந்துள்ளன.

தொப்பி வடிவுடைய மூன்று நான்கு சங்குத் துண்டங்களால் ஒட்டப்பட்ட பொருளின் மேல் வரிவடிவங்கள் சிவப்பு வண்ணத்துடன் காணப்படுகின்றன. இவற்றின் பயன் அறியப்படவில்லை. மேலும் மொத்தமான வாய்ப் பகுதியையுடைய *லாம்பிஸ் ட்ரன்கேட்டா செபே* வகைச் சிப்பியில் காளையின் உருவப்பகுதிகள் பறவைகள், பாம்பு, தவளை, ஆமைகள், வண்டிகள் போன்றவை செய்யப் பட்டன. ஈரானிலுள்ள சார்-இ சோக்தா (Sahr-i Sokhta) என்னுமிடத்தில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் கிடைத்த சங்காலான வளையல் துண்டங்கள், பிற பொருட் ள் ஆகியவற்றின் செய்முறைத் தொழில் நுட்பம் சிந்து ச வளி நாகரிகத் தொழில் நுட்பத்துடன் ஒத்துள்ளது[1] (படம் ௯4).

---

[1] Durante 1979:27-42



படம் 34. சிந்து சமவெளி காலத்தின் சமகாலத்தியதான சார்—இ சோக்தா (ஈரான்) என்னுமிடத்தில் சங்கு வளையல் செய்த முறை (நன்றி **Durante 1979**)

சுமேரியர்கள் இத்தகையச் சிப்பி வகைகளைச் சிந்து சமவெளிப் பகுதியினர் போல் பயன்படுத்தியிருப்பினும் சிப்பி வகைகளும் அவர்கள் கலைத்திறனும், வேறுபட்டுள்ளது. தென்னிந்தியாவில் குழந்தைகளுக்குப் பாலூட்டப் பயன்படும் சங்குப் பாலடை அல்லது இறைவனுக்கு ஊற்றப்படும் புனித நீர் கலன்களைப் போலவே சிந்து சமவெளிப் பகுதியிலும் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது[1].

பிற்கால ஹரப்பா நாகரிக ஊர்களில் கிடைத்த சங்குப் பொருட்களும் அணிகலன்கள் அறுத்த முறையும் ஹரப்பா நாகரிகத்தில் பயன்படுத்திய தொழில் நுட்ப முறையை ஒத்தனவாக உள்ளன[2]. இரும்புக் காலங்களில் தக்காணப் பகுதியில் பயன்படுத்திய தொழில் நுட்பமும் மாற்றமின்றி இருந்திருத்தல் வேண்டும். அகழாய்வில் கிடைக்கும் சங்கு வளையல்களின் வடிவங்களும் சங்குக் கழிவுகளின் உருவ அமைப்புகளும் இதனை உறுதி செய்கின்றன. மஹாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம், தமிழகம் ஆகிய மாநிலங்களில் இரும்புக் காலத்தைச் (பெருங்கற்காலம்)

---

[1] Kenoyer 1983:59

[2] Arati 1998:72

சார்ந்த இடங்களில் கள ஆய்வுகள் நடைபெற்றுள்ளன. அகழாய்வுகளில் சிந்து சமவெளி நாகரிக இடங்களில் கிட்டிய சங்குப் பொருட்கள் செய்த தொழில்நுட்பமும் தற்காலத்தில் தமிழகம், மேற்கு வங்காளம் ஆகிய இடங்களில் வளையல்களும், பிற பொருட்களும் செய்யும் தொழில்நுட்பம் ஒன்றாக உள்ளமையை அறியமுடிந்தது. தக்காணப் பகுதியில் தமிழகத்தைத் தவிரச் சங்குத் தொழில்நுட்ப முறையை ஓரளவிற்காவது விவரிக்கும் இலக்கியச் சான்றுகள் இல்லை.

பெருங்கற்காலத்தைத் தழுவிய சங்க காலத்தில் சங்கு வளையல்கள் உயர்ந்தனவாகக் கருதப்பட்டன. சங்கெடுக்கும் தொழிலல்லாது அவற்றை அறுக்கும் தொழில், கடையும் தொழில் பற்றிய குறிப்புகள் தமிழ் இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. சங்க காலத்தில் சங்கு வளையல்கள் செய்யும் தொழில் நுட்பம் இலக்கியச் சான்றுகளைக் கொண்டு இங்கு விளக்கப்பெறுகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படும் சங்கறுக்கும் ரம்பம், சங்கறுப்போர் பற்றிய தரவுகள் பின்னிணைப்பு -1 இல் தரப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்களில் *குறுந்தொகை* சங்கு வளையலை

> கோடுஈர் இலங்குவளை (*குறுந்தொகை 11:1,31:5, 365:1*)
> அம்சில் ஓதி ஆய்வளை நெகிழ (*குறுந்தொகை 211:1*)
> சில்நிறை வால்வளைக் குறுமகள் (*குறுந்தொகை 189:6*)

எனக் குறிக்கிறது.

கடற்கோடறுத்த அரம்போ ழவ்வளை (*ஐங்குறுநூறு 194:1*) என்னும் குறிப்புக்களால் சங்கு ரம்பம் கொண்டறுக்கப்பட்டதை அறிய முடிகிறது. அரம்போழ் அவ்வளை (*அகநானூறு 6:2,125:1,251:20*) எனும் குறிப்பும் இங்குச் சுட்டத்தகுந்தது. *பதிற்றுப்பத்து*, *பரிபாடல்* ஆகியவற்றில் சங்கறுப்பதற்கான தொழிற் கருவிகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை.

'போழ்தல்' என்பதைப் 'பிளவுபடுதல்' எனவும் 'பாழ்' என்பதைப் 'பிளவு' எனவும் *தமிழகராதி* சுட்டுகிறது[1]. எனவே அரம்போழ் அவ்வளை என்னும் கூற்றை ரம்பத்தால் பிளவுபடுத்தப்பட்ட அல்லது அறுக்கப்பட்ட வளை என்று பொருள் கொள்ளலாம். இதற்கான ரம்பம் மற்றவகை ரம்பங்களைப் போலல்லாது தனி உருவம் கொண்டதாய் இருத்தல் வேண்டும். அறுக்கும் முறைபற்றிய விளக்கங்கள் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லையெனினும் சென்ற நூற்றாண்டில் தமிழகம், வங்காளப்பகுதியில் உள்ள சங்கறுப்போரின் தொழில் நுட்பத்தை ஒத்ததாக அது இருந்திருத்தல் வேண்டும். வளையல்கள் அறுக்கப்பட்டபின் அதன் உட்புறப் புடைப்புகளை உடைத்து (மணற்கல்லால்?) அழகுறுத்துவோரை *மதுரைக்காஞ்சி* தெளிவாகக் குறிக்கிறது.

கோடுபோழ் கடைஞரும் (*மதுரைக்காஞ்சி* 511)

என்பது அறுத்த சங்கு வளையல் முதலியனவற்றை கடைவாரைப் பற்றிய குறிப்பாகும். மேலும்

அரம் போழ்ந் தறுத்த கண்ணேரிலங்கு வளை
(*மதுரைக் காஞ்சி* 316)

அரம் கொண்டு கண்கள் போன்ற வடிவங்கள் பொறிக்கப்பட்ட வளை என்னும் இக்குறிப்பிலிருந்து வளையல்கள் மேல்பகுதியில் செதுக்கு வேலைகள் செய்யப்பட்டதையும் அறிய இயலுகிறது.

சங்ககாலத்தில் இத்தொழில் புரிந்தோரைப் பற்றிய குறிப்புகள் பல இடங்களில் காணப்படுகின்றன. இத்தொழில் புரிந்தோரை வேளாப் பார்ப்பான் என *அகநானூறு* கீழ்வருமாறு சுட்டும்.

வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளை களைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன
(அகநானூறு 24:2)

---

[1] *Tamil Lexicon* 1982:2970

அரும்பதவுரையாசிரியர் வேளாப் பார்ப்பான் என்போரை யாகம் பண்ணாத ஊர்ப் பார்ப்பான் என்றும் இவர்களுக்குத் தொழில் சங்கை அறுப்பது எனவும் சுட்டுகிறார்[1]. இவ்விளக்கத்தை ஏற்று அவர்களை ஊர்ப்பார்ப்பான், நகர அதிகாரம் முதலியவற்றைக் கொண்டிருந்த பிராமணன் என இராகவையங்கார் சுட்டுகிறார். மேலும் ஊர்க் கரணத்தான், ஊர் பார்ப்பான், பரதாயன்கிழவன், ஈசுவரசன்மன் எனப்படும்[2] கல்வெட்டுத் தொடர்களால் இப்பொருள் பெறலாம் என்று அவர் குறிப்பிட்டுள்ளார். ஆனால் இவர்களைக் கீழ்க்குலத்தைச் சார்ந்தோராக *திருவிளையாடற் புராணம்* குறிக்கிறது. எனவே இக்கூற்று மீண்டும் ஆய்வு செய்வதற்குறியது.

*சிலப்பதிகாரம்* (5:47) பிற கைவினைக் கலைஞர்களுடன் சங்கறுப்போரும் நிறைந்த தெருவினைக் குறிப்பதும் *மணிமேகலை* (28:44) வாளரத்தினைக் கொண்டு வெள்ளிய சங்குகளை அறுப்போருடன் விளங்குகின்ற தெருவினைச் சுட்டுவதிலிருந்தும் அக்காலத்தில் சங்கறுத்தல் தொழிலின் முக்கியம் பற்றி அறிய இயலுகிறது.

இச்சான்றுகளைக் கொண்டு சங்க காலத்தில் சங்கணிகலன்கள் செய்யச் சிறப்புப் பயிற்சி பெற்ற கைவினைக் கலைஞர்கள் இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. மேலும் இவர்கள் வாளரம் எனப்படும் வளைந்த உருவுடைய ரம்பத்தைப் பயன்படுத்தினர் எனவும், உட்புறப் புடைப்புகளைச் சிந்து சமவெளிப் பகுதியில் பயன்படுத்தியது போல் உருளை வடிவ மணற்கற்களைப் பயன்படுத்திக் கடைந்து எடுத்தனர் எனவும் கூறலாம். மேலும் கைப்பிடி கொண்ட ரம்பத்தில் கண் போன்ற உருவங்களைச் செதுக்கினர் என்றும் கூறலாம். எனவே இத்தொழில் நுட்பம் தொடர்ந்து மாற்றமின்றிப் பேணப்பட்டு வந்துள்ளது.

---

[1] *இராகவையங்கார் 1935:617*

[2] *South Indian Inscriptions* iv:90

*சூடாமணி நிகண்டு* சங்கறுப்போரை வளைபோழ்நர் எனக் குறிக்கிறது[1]. *ஞானதீப நிகண்டு* சங்கறுப்போரை வளைபோழ்நர், சங்கீர்வார் என அழைக்கிறது[2].

அரம் கொண்டு அறுக்கும் ஒலியை, சோம்பலில் சத்தமிடும் குதிரையின் கனைத்தலுக்கு உவமையாகச் *சீவகசிந்தாமணி* (2978:1-3)

புல்லுண் புரவி புலம்பு விடுகுரல்போல்
நல்லவளை போழரவ நாரை நரல்குரல் போல்
கல்லா விளையர் கலங்காச் சிரிப் பொலியும்

எனக் குறிப்பிடுகிது.

திருப்பற்றப்புலியூர் நம்பியின் *திருவிளையாடற் புராணத்தில்* கிழியறுத்த படலத்தில் சங்கறுக்கும் தொழில்நுட்பம் பற்றி தெளிவாகக் குறிப்பிடுகிறது. பதிப்பாசிரியர்களால் இப்பாடல்கள் பலவேறு விதங்களாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன (பின்னிணைப்பு 3). இதுவே உலகில் சங்கறுக்கும் தொழில்நுட்பம் குறித்த முதல் இலக்கியச் சான்றாகும். அரிவாளில் நெய் தடவி சங்குகளைக் கால்கள் இடையில் வைத்து இரண்டு கால்களையும் தரையில் படுமாறு பரப்பிக் கீர்கீர் என்னும் ஒலியுடன் அறுக்கும் குலத்தைச் சார்ந்தவன் நக்கீரன் என இறைவன் விளிப்பதும், அதற்கு நக்கீரர் எனக்கேனும் சங்கறுக்கும் குலம் என்ற ஒரு குலம் உள்ளது இறைவனே இரந்து வாழும் குலமற்ற உன்போல் நான் வாழவில்லை எனப் பதிலிறுப்பதிலிருந்து சங்கறுக்கும் தொழில் நுட்பத்தை எளிய இரு செய்யுள் வரிகளில் விளக்குவதும் சுட்டத்தகுந்தது. மேலும் சங்கறுப்போரைக் கீரன் குலத்தைச் சார்ந்தோர் என விளிப்பதும், *அகநானூற்றில்* உள்ள வேளாப் பார்ப்பான் என்னும் குறிப்பும் இங்குக் குறிப்பிடத்தக்கது. *சீவகசிந்தாமணி* அரம் கொண்டு வளையல்களை அறுக்கப்படும் போது உருவாகும் ஒலியைக் குறிப்பதாலும்

---

1 ஆறுமுக நாவலர் 1897:36

2 வையாபுரிப்பிள்ளை 1985:164

*திருவிளையாடற் புராணத்தில்* சங்கு அறுக்கும் தொழில் நுட்பம் பற்றித் தெளிவாகக் குறிப்பிடுவதாலும் சங்கு வளையல் அறுக்கும் தொழில் தமிழகத்தில் சிறந்து இருந்தமை நன்கு புலப்படும்.

1912இல் மீன்வளத்துறையின் கண்காணிப்பாளராய் இருந்த ஹார்னல் கொற்கைக்குச் சென்று ஆய்வு செய்தபொழுது சங்க காலத்தைச் சார்ந்த சங்குத் தொழிலக எச்சங்களைக் கண்டுபிடித்தார். அங்கு கிடைத்த சங்கின் உடைந்த பகுதிகளிலுள்ள கீறல்கள், அப்பொழுது வங்காளத்தில் பயன்படுத்தப்பட்டுவரும் ரம்பத்தின் கீறல்களை ஒத்திருப்பதாக அவர் தெரிவிக்கிறார்[1]. எனவே சங்கு அறுக்கும் தொழில்நுட்பம் தமிழகத்தில் மிகப் பழைமையான ஒன்று என்பது தெளிவாகிறது.

ஒரிசா பகுதியை ஆண்ட இடைக்காலத்தைச் சார்ந்த கிழக்கு கங்க மன்னன் இரண்டாம் நரசிம்மனின் கேந்துபட்ன பட்டயம் சங்குத் தொழில் புரிவோரைச் *சங்ககார* எனக் குறிப்பிடுகிறது[2]. வளையல் செய்யும் தொழில் நுட்பம் கிழக்குக் கடற்கரையில் வங்கப் பகுதிவரை பரவி இருந்தது. இடைக்காலத்தில்தான் இத்தொழில் நுட்பம் வங்காளத்திற்குச் சென்றிருக்க வேண்டும் என ஹார்னல் கூறுகிறார்[3]. 1770இல் ராய்னல் (Raynal) என்னும் போர்த்துக்கீசியர் தூத்துக்குடியில் சங்கெடுக்கப்பட்டதாகவும் அவை வங்காளத்தில் வளையல்கள் ஆக்கப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார்[4]. தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல், சமுதாய மாற்றங்களினால் சங்கு வளையல்களுக்கு ஆதரவு குறைந்துபோனதால் தமிழகத்தில் உள்ள சங்கறுக்கும் தொழிலில் நசிவுற்று ஒரு சில தொழிலகங்களே தற்பொழுது காணப்படுகிறது. 10முதல் 20ஆம் நூற்றாண்டுவரை இந்நிலையே நீடித்தது. வங்காளப்பகுதியில் வளையல்களுக்கு ஆதரவிருந்ததாலும்,

[1] Hornell 1942:128

[2] EII 28:33

[3] Hornell 1914

[4] Yule and Burnell 1996:186

திபெத், அஸ்ஸாம் போன்ற கிழக்கிந்திய மலைப்பகுதிகளில் தற்போதும் சங்குப் பொருட்களுக்கு முக்கியத்துவம் உள்ளதாலும் வங்காளப் பகுதித் தொழிலகங்கள் சிறந்து விளங்கின. வடகிழக்கு இந்தியப் பகுதியில் கிழக்கு, மேற்கு வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் பரந்த எல்லையில் சங்கு வளையல்கள் செய்யப்பட்டன.

டாக்காவைத் தலைமையிடமாகக் கொண்டு ஒரு பெரிய தொழில் மையமும், கல்கத்தாவைத் தலைமை இடமாகக் கொண்டு ஒரு தொழில் மையமும் இருந்தது. சிட்டகாங் (Chittagong), சில்ஹெட் (Sylhet), பாப்னா (Pabna), தினாஜிபூர் (Dinajpur), ரங்பூர் (Rangpur), மூர்சிதாபாத் (Moorsidabad), ஜெசோர் (Jessore), குல்னா (Khulna), பர்த்வான் (Burdwan), பங்கிரா (Bankyra) ஆகிய இடங்களில் சிறிய அளவிலும் சங்கணிகலன் தொழில் நடைபெற்றுது. சிட்டகாங்கில் ஏராளமான இசுலாமியர் சங்கு வளையல் அறுக்கும் தொழில் புரிந்தனர். இப்பகுதியில் சென்ற நூற்றாண்டில் இருந்த சங்கு அணிகலன் தொழில் நுட்ப முறையைப் பற்றி ஹார்னல் கீழ்வருமாறு குறிப்பிடுகிறார்[1].

டாக்காவிலும் கல்கத்தாவிலும் இத்தொழில் வசதி படைத்தோரின் கைப்பிடியில் இருந்தது. மற்ற இடங்களில் இவை குடிசைத் தொழிலாக இருந்தன. டாக்காவில் சங்கு வளையல் செய்யும் பணி இருபெரும் பிரிவாக நடைபெற்று வந்தது. முதல் பிரிவில் சங்குகள் சுத்தம் செய்யப்பட்டு அவை வளையல்களாக அறுக்கப்படும். அவை இரண்டாம் பிரிவுக்கு அனுப்பப்பட்டு வழுவழுப்பாக்குதல் மற்றும் அழகூட்டுதல் செய்யப்பெறும். சில வேளைகளில் அவை வேறு ஊர்களுக்கு அனுப்பப்பட்டு இரண்டாம் பிரிவின் பணிகள் செய்யப் பெறுவதுமுண்டு.

சங்கறுப்பதற்கு அதனைச் சுத்தம் செய்யும் தொடக்கப்பணியானது தொழிற்கூடத்தில் நிழலுள்ள இடத்தில் நடைபெறும். பெரும்பாலும் சங்கறுப்போர்

---

[1] Hornell 1914

ஆறுபேர் இப்பணியைப்புரிவர். முதலில் சங்கறுக்கத் தகுந்தாற்போல் சங்கின் சுருளச்சு (Columella) உடைக்கப்படும். இதனால் வளையல் அறுப்பதன் காலம் குறைவதோடு மட்டுமன்றிச் சங்கறுப்பது எளிதாகவும் இருக்கும். இப்பணியில் சங்கின் உச்சிப்பகுதி உடைக்கப்பட்டு, சுருளச்சில் பின்னப்பட்டுள்ள இடைச்சுவர்கள் உடைக்கப்படும். இதை உடைப்பதற்கான கருவியான சுத்தியலின் தலைப்பகுதி நிலவரைவியல் வலலுனரின் சுத்தியல் போன்று (Geologists hammer) இருபுறமும் துருத்திக்கொண்டு இருக்கும். இதன் ஒருமுனை கூராகவும், மறுமுனை தட்டையாகவும் இருக்கும். பிறிதொரு சுத்தியல் கொண்டு தாக்க வசதியாகவும் இருக்கும். இம்முறையில் சங்கின் உச்சிப்பகுதியும் சுருளச்சும் உடைக்கப்பட்ட பின்னர் அது வளையல்களாக அறுப்பதற்கு ஏற்றத் தோற்றத்தில் இருக்கும்.

சங்கறுப்பதற்கென்றே சிறப்பாகச் செய்யப்பட்ட கனமான ரம்பம் வளைந்த உருவம் கொண்டது (படம் 35). பார்ப்பதற்கு மற்ற ரம்பங்களைப் போலல்லாமல் வளைந்த தோற்றம் கொண்டது. இரும்பாலான வெட்டுவாய்ப்பகுதி ஆழமான பிறைவடிவம் கொண்டது. இதன் இரு பக்கங்களும் நொய்தாக்கிக் கொம்புகளைப் (attenuate horn) போல் இருக்கும். இந்த இரும்பு ரம்பப் பகுதியின் சாய்ந்தவாறு இருக்கும் மேற்பகுதியில் நீளமான இரும்பாலான செருகுற்ற உளிப்பகுதி (iron tang) கைப்பிடி போன்றவை தரையாணிகளால் (rivet) இணைக்கப் பட்டிருக்கும். செருகுற்ற இரு உளிப்பகுதியின் மறுபக்கங்கள் மெல்லிய பிரம்பால் (cane) குறுக்காக இணைக்கப்பட்டிருக்கும் அல்லது கைப்பிடி பிரம்பால் கயிறுடன் சுற்றப்பட்டிருக்கும். செருகுற்ற உளிப்பகுதிகள் நேராக இல்லாமல் கொக்கி போன்ற வளைவுடன் இரும்பு வெட்டுவாய்ப்பகுதி இணைக்கப்பட்டிருக்கும். இரும்பு வெட்டுவாய்ப் பகுதி 2 மிமீ தடிமன் கொண்டது. ரம்ப வாய்ப்பகுதி 0.6மிமீ தடிமன் கொண்டது. செருகுற்ற உளிப்பகுதியின் இடையில் ரம்பத்தின் மேல்பகுதி இரும்புக் குழாயினால் உறுதிப்படுத்தப்

பட்டிருக்கும். ரம்ப முனைகள் உருவாக்கப்பட்ட இரும்புத் தகட்டின் பக்கங்களிலும் நன்மையைக் குறிக்கும் சிவப்புக் குறியீடுகள் வரையப்படும்.



படம் 35. வங்காளம், தமிழகப்பகுதியில் சங்கு அறுக்கப்பயன்பட்ட ரம்பம் (நன்றி Hornell 1914)

சங்குத் தொழிற்கூடத்தில் இரு கூர்முனைக்கம்புகள் தரையிலிருந்து சுமார் 6 அங்குலம் உயரம் வரை இருக்குமாறு அடிக்கப்பட்டிருக்கும். இக்கம்புகள் உயரம் சமமாக அன்றி ஏறத்தாழ இருக்கும். கம்புகளின் இடைவெளி சுமார் 6 அங்குலம் இருக்கும். உயரமான குச்சியில் வளையல் அறுப்பவரின் பின்பகுதி படுமாறு அமர்வார். குறைந்த உயரக் கம்பில் இருகால் பாதங்களும் அழுந்துமாறும் கால்களைப் பரப்பி இரு கம்புகளுக்கிடையில் அவர் இறுக்கமாக அமர்வார். அவர் வளையலை அறுக்கும்போது பக்க உறுப்புகள் (limbs) அசையாமல் இருப்பதற்காகவே இவ்வாறான அமைப்பு ஏற்படுத்தப்படுகிறது. ஏனெனில் சங்கறுக்கும்போது அவருடைய கால்கள் பிடித்திறுக்கி (vice)யாகச் செயல்பட வேண்டும்.

சுருளச்சும் உச்சிப்பகுதியும் உடைக்கப்பட்ட சங்கின் மேல் பகுதியில் சிறிய மரப்பலகை கொண்டு மூடி, சங்கைக் கால்களால் இறுக்கியபடி ரம்பத்தால் அறுக்கத் தயாராவார். சங்கின் உச்சிப்பகுதியை வலதுபுறத்திலும் சங்கறுப்போர் உடலின் வெளிப்பக்கத்திலும் சாய்வாகக் கால்களுக்கிடையே வைப்பார். பின்னர் இடது கையால் செருகுற்ற உளிப்பகுதியைப் பிடித்து வலதுகையை ரம்பத்தின் வலது கொம்புப் பகுதியில் பிடிப்பார். அரத்தைச் சமநிலையில் பிடித்துச் சற்றே பக்கவாட்டில் அசைப்பார் (படம் 36). சற்றே பள்ளம் உருவாக்கப்பட்டு அரம்பப் பற்கள் நன்றாகப் பதிந்தபின் பக்கவாட்டில் மேலும் கீழும் அசைப்பார். ஒவ்வொரு முறையும் மேலும் கீழும் அசைக்கும் பொழுது வட்டப்பகுதியில் வில் போன்ற அசைவுத் தோற்றம் இருக்கும். இவ்வாறு மேலும் கீழும் அசைக்கும் பொழுது சற்று ஓய்வெடுத்துச் சங்கைத் திருப்பி வைத்துப் பின்னர் அறுக்கும் தொழிலைப் புரிவார். சராசரியாக ஒருமுறை சங்கறுப்பதற்கு 4½ நிமிடங்கள் வரை பிடிக்கும்.



படம் 36. வங்காளம், தமிழகப்பகுதியில் சங்கு அறுக்கும் முறை (நன்றி Hornell 1914)

ஒரு முழுச்சங்கில் அறுக்கப்படும் வளையல்களின் எண்ணிக்கை, சங்கின் உருவம், அளவு மற்றும் வளையல்களின் குறுக்களவு (thickness) ஆகியவற்றைப் பொறுத்து வேறுபடும். ஒரு சங்கில் மெல்லிய குறுக்களவுடைய வளையல்கள் சுமார் 10 வரை அறுக்க இயலும். பாலா எனப்படும் அகல வளையல்கள் 3 மட்டுமே செய்ய இயலும். ஒருசங்கில் எத்தனை வளையல்கள் செய்ய இயலுமோ அதைவிட ஒருமுறை அதிகம் அறுக்க வேண்டும். எடுத்துக்காட்டாக நான்கு வளையல் அறுத்தால் 5 முறை ஒரு சங்கில் அறுக்க வேண்டும். ஒவ்வொரு சங்கிற்கும் சங்கறுப்போர் எடுக்கும் ஓய்வு, ரம்பத்தில் பற்களை கூர்மை செய்தல் ஆகியவற்றைக் கணக்கில் கொண்டால் ஒருமுறை சங்கறுக்கச் சராசரி 5 நிமிடம் ஆகும். ஆயினும் சங்கை முழுவதுமாகத் திருப்பித் திருப்பி அறுக்காமல் மேல்பகுதியில் மட்டும் அறுத்து வாட்பல் விளிம்பமைவில் சுத்தியலால் மெதுவாகத் தட்டி சங்கிலிருந்து வளையல் பகுதியை உடைத்தெடுப்பதே வழக்கமாக இருந்து வந்துள்ளது. இவ்வளையல்கள் முழு வட்டமாக இன்றிக் கோணலான வளையங்களாகவே இருக்கும்.

டாக்காவில் இருந்த சங்கறுப்போர் (உச்சிப்பகுதியையும் சுருளச்சையும் உடைத்தெடுக்கப்பட்டுக் கொடுக்கப்படும்) சங்குகளில் அதிகபட்சம் 100 வளையல்களை ஒரு நாளில் அறுக்க இயலும். ஆனால் நடைமுறையில் ரம்பத்தின் வாள்முனை சீர்செய்தல், சரியாகச் சுருளச்சு எடுக்கப்படாத சங்கு, ரம்பம் தவறி சங்கு வளையல் பாகத்தில் பட்டுக் காயம் ஏற்படுத்துதல் ஆகியவற்றால் சராசரியாக ஒருவர் அறுக்கும் சங்கு வளையல்களின் எண்ணிக்கை குறைந்தே இருக்கும். மிகத் திறமையானவரும் நடுக்கமுறாத கை, தோள் மற்றும் இரும்புபோல் அசையாமல் வசதி குறைந்த இடத்தில் அமரும் தன்மை ஆகியன நிறைந்தோரே வளையல் அறுக்க இயலும். மேலும் இச்செயல் தினமும் ஒரே இடத்தில் ஒரே மாதிரியாகச் செய்ய வேண்டியுள்ளதால் மனச்சோர்வும், சலிப்பும் சங்கறுப்போருக்கு ஏற்படும். எனவே தினமும் ஒருவரின்

சங்கறுக்கும் வளையல்களின் எண்ணிக்கை குறைவாகவே இருக்கும். திறமையாகச் சங்கறுப்போர் சங்கறுக்கும் தொழிற்கூடத்தின் சொத்தாவார். அவ்வாறு நன்றாக வேகமாகச் சங்கறுப்போரைத் தொழிலக உரிமையாளர் அதிக முன்பணம் கொடுத்து அவர்களைத் தமது தொழிலாளியாக நிரந்தரப்படுத்த முயல்வர். 1900ஆம் ஆண்டுகளில் சங்கறுப்போரில் திறமையானோர் முன்பணமாக ரூ.200/- வரை பெற்று வந்துள்ளனர். இது அத்தொழிலாளரின் குடும்ப விழாவிற்கு அல்லது மற்றைய செலவினங்களுக்குக் கொடுக்கப்படும். அவர் கடன் வாங்கிய தொழிலகத்தில் பணிபுரியும்போது சிறிது சிறிதாக அக்கடன் கழிக்கப்படும். இப்பணியைப் பாதியிலேயே விட்டுவிட நேர்ந்தால் மீதப் பணத்தைச் செலுத்தியாக வேண்டும். வேறு தொழிலக உரிமையாளர் இவர்கள் கடனைச் செலுத்தித் தமது தொழிலகத்தில் வேலைக்கமர்த்துவதும் உண்டு.

டாக்காவில் இருந்த சங்கறுப்போர் சங்கறுக்க எவ்வித இயந்திரங்களையும் பயன்படுத்தவில்லை. அவர்கள் வளையல்களின் மேற்புறம் கீறல்கள் விழாமலும் உடைந்து விடாமலும் எவ்வொரு இயந்திரத்திலும் அவற்றை அறுக்க இயலாது என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர். கையால் அறுக்கப்படும் வளையல்களைவிட இயந்திரத்தால் அறுக்கப்படும் வளையல்கள் சிறுசிறு விரிசல்களை உருவாக்குவதால் வளையல்கள் பயன்பாட்டின்போது வெகு விரைவிலேயே உடைந்துவிடுவதாயும் கூறியுள்ளனர். தொடக்கக் கால கட்டங்களில் பயன்படுத்தப்பட்ட இயந்திரப்பற்கள் சொரசொரப்பாகவும் பெரிய அளவினதாகவும் இருந்ததாலும் வளையல்கள் அதிக எண்ணிக்கையில் உடைந்திருக்கலாம் என ஹார்னல் கருதுகிறார். ஆனால் கை ரம்பத்தின் பற்கள் வெகு சிறியனதாகவும், முன்பின் சாய்வுகளுற்றும் இருந்தன. இம்மாதிரியான ரம்பங்களில் அறுப்பதனால் இடமிருந்து வலமாகவோ, வலமிருந்து இடமாகவோ அறுத்தாலும் ஒரே கோட்டில் மாசற்று அறுக்க இயலுகிறது. இப்பற்களைச்

கூர்மைப்படுத்தச் சிறிய உளிகொண்டு இலகுவாக அடித்தாலே போதுமானது.



படம் 37. சங்கு வளையங்களின் உட்புறப்புடைப்புகளை அகற்றுதல் (நன்றி **Hornell 1914**)

சங்கிலிருந்து வளையங்கள் அறுக்கப்பட்ட பின் அவற்றை முழு அணிகலன்களாக மாற்றும் பணி வளையல்களின் வணிகத் தேவைகளைப் பொறுத்து வேறுபடும். உதாரணமாக மொத்தமான சொரசொரப்பான வளையல் விரும்பும் சந்தைக்கு அனுப்பப்பட வேண்டுமென்றால் சங்கின் உட்பகுதியில் உள்ள பிசிறுகள் இலேசாகத் தட்டி எடுக்கப்பட்டு மேல்பகுதி சற்றே தேய்க்கப்பட்டுக் குறைந்த தரமுடைய வளையல்கள் தயார் செய்யப்படும். சுருளச்சுடன் இணைந்திருக்கும் திருகு வளையங்களின் பிசிறுகள் மிக இலேசான சுத்தியல் கொண்டு கவனமாகத் தட்டியெடுக்கப்படும் (படம் 37). இப்பகுதியே சங்கு வளையலில் உறுதி குறைந்த பகுதியென்பதால் மிகுந்த கவனத்துடன் பிசிறுகளைக் களைய வேண்டும். ஆயினும் உட்புடைப்புகளை அகற்றுவோர் சற்றே வேகமாகத் தட்டுவதால் இவ்வளையல்கள் அடிக்கடி உடைந்து போகின்றன. திருகுச்சுருள் பிசிறுகளைத் தட்டிய பின்னரும்

வளையலின் உட்பகுதி வழுவழுப்பற்று சிறு பிசிறுகளுடன் இருக்கும். இவ்வளையல்கள் கோணல் வளையங்களாக இருப்பதால் இதன் நீட்டப்பகுதி ரம்பத்தால் தேய்த்துச் சரிசெய்யப்படும்.



படம் 38. சங்கு வளையங்களின் உட்புறப்பிசிறுகளை அகற்றுதல் (நன்றி Hornell 1914)

இவ்வளையங்களின் உட்பகுதியின் பிசிறுகளைக் களையவும் சொரசொரப்பை நீக்கவும் மரக்கதிரி (wooden spindle) பயன்படுத்தப்படும் (படம் 38). இது 45இலிருந்து 50 செ.மீ. வரை நீளம் கொண்டது. இதன் மேற்பகுதி சிறுசிறு ஆற்று மணல்களால் அரக்குப் பசையோடு உறைப்புத்தாள்கள் போன்று ஒட்டப்பட்டிருக்கும். இம்மரக்கதிரி உறைப்புக் கோல் சாய்வாக மரப்பலகைகளின் இடையில் செருகப்பெற்று மரப்பலகையின் மேல் பளபளப்பாக்குபவர் அமர்ந்திருப்பார். கோலின் அடுத்தபகுதி நடப்பட்ட கோலில் சார்த்தப்பெற்றிருக்கும். வளையல்கள் உறைப்புக் கோலில் உள்ளே செருகப்பட்டு முன்னும் பின்னும் இழுக்கப்பட்டு வளையல்களின் உட்பகுதி பிசிறுகளற்று வழுவழுப்பு ஆக்கப்படும். மணல் துகள்களுடன் அரக்கு பயன் படுத்துவதால் இச்செயலுக்குக் கூலி அதிகம் கொடுக்கப்படும். இவ்வரக்கு அஸ்ஸாமிலிலுள்ள கேரோ

மலைப்பகுதியிலிருந்து கொண்டு வரப்படுகிறது. செய்யக்கூடிய வளையல்களில் வேலைப்பாடுகள் அதிகம் தேவையில்லையெனில் வளையலின் மேற்புறம் காசி அருகிலுள்ள மிர்சாபூரிலிருந்து கொண்டு வரப்பட்ட மணற்பாறைக் (sand stone) கற்பலகைகளில் (படம் 39) தேய்க்கப்பட்டு விற்பனைக்கு அனுப்பப்படும். இவ்வகைக் கற்பலகைகளின் அளவு சுமார் 16 " x 18 " ஆகும்.



படம் 39. சங்கு வளையங்களின் மேற்புறம் தேய்த்தல்
(நன்றி Hornell 1914)

மிக நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த வளையல்கள் செய்ய செதுக்கு வேலை (carving), துரப்பிடுதல் (drilling), துலக்கிடுதல் அல்லது பொலிவிடுதல் (Polishing) அரக்கிடுதல் அல்லது வண்ணம்பூசுதல் (lacquering) ஆகியன செய்யப்பெறுதல் வேண்டும்.

செதுக்கு வேலை (carving) செய்யச் சிறிய பொருத்துமுனை ரம்பம் (tenon saw) மற்றும் அரம் (file) போன்றவை பயன்படுத்தப்படும் (படம் 40). பெரும்பாலும் பொருத்துமுனை ரம்பமே பயனுடையதாக இருக்கும்.

ஏனெனில் செதுக்கு வேலை செய்ய மிகவும் வளைந்து கொடுக்கும் தன்மையுடையதாயும் (flexibility), செய்விரைவு உடையதாயும் (expeditious), நீடித்து உழைக்க வல்லதாகவும் அது இருக்கும். ரம்பத்தின் முனைப்பகுதி சிறுபற்களுடன் இருக்கும். உளியுடன் கூடிய சுத்தியலால் இவற்றின் முனை சீர் செய்யப்படும். செதுக்கு வேலையில் வளையலின் மேல் மற்றும் பக்கப் பகுதியில் உருவாக்கப்படும் வரிப்பள்ளங்கள் பெரும்பாலும் நேர்க்கோடுகளாக இருக்கும். பெரும்பாலும் V வடிவ இரு கோடுகளே வளையலைச் சுற்றி இடப்பட்டிருக்கும்.



படம் 40. சங்கு வளையல்களில் செதுக்கு வேலைகள் செய்தல்
(நன்றி **Hornell 1914**)

செதுக்குவேலையைச் செய்பவர் பயன்படுத்தும் வளையல்மேடை இடத்திற்கிடம் வேறுபடும் (படம் 41). இரண்டு குட்டையாகவும் ஒன்று நீளமாகவும் உள்ள சிறிய கழிகள் முக்காலி வடிவில் வைக்கப்படும். இரண்டு குட்டைக் கழிகள் திருப்பி வைக்கப்பட்ட V வடிவில் இருக்கும். இவை இரண்டும் இணையும் இடத்தில் நீளமான மூன்றாவது கழி செருகப்பட்டு ஒரு முனை செதுக்கு வேலை செய்பவரின் காலில் அழுத்தப்பட்டும் மறுமுனை கட்டைகளின் இணைப்புக்கு மேலே சற்று நீண்டும் இருக்கும். நீண்ட

முனையில் வளையல் செருகப்பட்டு செதுக்கு வேலை செய்வோர் தன் விருப்பத்திற்கு ஏற்றவாறு வைத்துப் பணிபுரிவார்.



படம் 41. சங்கு வளையல்களில் செதுக்கு வேலைகள் செய்தல் (நன்றி **Hornell 1914**)

கிழக்கு வங்காளப் பகுதியில் செதுக்குவேலை வளையல் மேடை தேக்கினால் A வடிவில் செய்யப்பட்ட ஒரு சட்டமும் அதன் மேற்பகுதியில் சிறு பள்ளமும் காணப்படும். இப்பள்ளத்தில் மூங்கில் குத்துவாக்கில் வைக்கப்பட்டு ஒரு முனை செதுக்கு வேலை செய்வார் காலிலும் மறுமுனை A வடிவ சட்டத்தின் வெளியே சற்றே நீட்டியவாறும் இருக்கும். இப்பகுதியில் வளையல் திணிக்கப்பெற்று வளையலின் மேற்பகுதியில் செதுக்கு வேலைகள் செய்யப்படும்.

### நெய்யரக்குப் பூசுதல் (Lacquering)

வங்கப் பகுதியில் நடைபெறும் திருமணங்களில் மணமகளுக்கு சகாஸ் (Shakhas) எனப்படும் இரண்டு நெய்யரக்குப் பூசிய சிவப்பு வண்ண வளையல்கள் மணமகளின் தந்தை, சீர்வரிசையாக அளிப்பதால் நெய்யரக்குப் பூசிய வளையல்கள் பெருமளவு செய்யப் படுகின்றன. திருமண வளையல்கள் மட்டுமன்றிப் பாலா

எனப்படும் ஒருவகைச் சங்கு வளையல்கள் வேறு நிறங்களைக் கொண்டு பூசப்பட்டு உயர்சாதி இந்துப் பெண்களால் அணியப்பட்டு வந்தது. கடைகளில் இயல்பாகக் கிட்டும் தகட்டுரு அரக்கு (shellac), தேவையான நிறமிகள் (pigments) கொண்டு நெய்யரக்கு உருவாக்கப்படும். இதனைச் சங்கு தொழிற்கூடங்களிலுள்ளோரே தயாரிப்பர் (படம் 42). முதலில் கருஞ்சிவப்புப் படிகக்கல்லான இரசகந்தகை (cinnabar) தட்டுப் போன்ற கருங்கல்மேல் இட்டுக் குழவிகொண்டு தேய்த்து நன்கு தூளாக்கப்படும். இப்பொடியின் ஒரு பங்கை எடை மூன்று பங்கு எடையுடைய தகட்டுரு அரக்குடன் பயன்படுத்தி அரக்கு நீர் தயாரிக்கப்படும்.



படம் 42. நெய்யரக்கு (வண்ணம்) தயாரித்தல்
(நன்றி **Hornell 1914**)

முதலில் நிறமிகளுடன் இரண்டு பங்கு எடை தகட்டுரு அரக்கு சேர்க்கப்பட்டு சூட்டினால் சிறிய குவளை வடிவத்தில் செய்யப்பெறும். இதன்பின்னர் தூளான இரசகந்தகை குவளையில் வைக்கப்பட்டு அதை மூடும் வகையில் மேலே மற்றொரு பங்கான தகட்டுரு அரக்கு போடப்பட்டு குவளை போன்ற அரக்கு மூடப்படும். இதன்பின்னர் குவளை வடிவுடைய அரக்கில் இரசகந்தகையைக் கலப்பதற்குக்

கைத்திறம் மிகவும் தேவை. மொத்த உருவமும் நெருப்புக்கரியில் திற வினைப்பாடாகச் சுற்றப்பட்டு அவ்வுருண்டை மென்மையான நெகிழ்வுத்தன்மையுடன் மாறியவுடன் எழுதுகோல் நீளமுள்ள இரண்டு சிறு கோல்களால் அது பிசையப்படும். மென்மையான அப்பொருள் கோல்களால் முன்னும் பின்னும் உருட்டப்பட்டு நெருப்பில் சூடு படுத்தப்படும். இம்முறையில் எழுதுகோல் போன்ற உருவ அமைப்பு வந்தவுடன் அரக்கு பூசத் தயாராகிறது.



படம் 43. வளையல்களில் நெய்யரக்கு (வண்ணம்) பூசுதல்
(நன்றி Hornell 1914)

உடைந்த அகலமான சட்டியில் நெருப்புக்கரி இடப்பட்டு சங்கின் வண்ணம் பூச வேண்டிய பகுதி நெருப்பில் வைக்கப்படும். சரியான அளவு சூடேற்றியபின் வண்ணம் பூசுபவர் சங்கு வளையலை எடுத்து அதன்மேல் வண்ண அரக்கைத் தேய்ப்பார். இவ்வாறு சிறிது சிறிதாக முழு வளையலிலும் வண்ணம் பூசப்படும் (படம் 43). செதுக்கப்பட்ட பள்ளப் பகுதியில் அரக்கு நன்கு அழுந்திவிடும் மேற்பகுதியில் ஒட்டியிருக்கும் அரக்குகள்

சுரண்டி எடுக்கப்பட்டு மிக அழகிய வண்ண வேலைப்பாடுடைய சங்கு வளையல்கள் கிட்டும்.

சங்கு வளையல்களின் வெளிப்புறம் மணற் பாறைகளில் தேய்த்து வழுவழுப்பாக்கப்படும். இதன் உட்பகுதி மண் ஒட்டிய மரக்கடைசல் உருளைக் கோலினால் வழுவழுப்பாக்கப்படும். இதை வங்காளத்தில் சலை (Salai) என்றழைப்பர்[1]. பின்னர், சங்குகள் நைட்ரிக் அமிலத்தில் வெளுக்கப்பட்ட பின்னர் துணியால் வழுவழுப் பாக்கப்படும்[2]. உடைந்த வளையல்கள் அரக்கு, பிசின், சிப்பித்தூள் கொண்டு ஒட்டப்பட்டு வண்ண வளையல்களாக மாற்றப்படும். மெல்லிய ஈயக்கம்பி கொண்டு சுற்றப்பட்டு வண்ணத்தால் மறைக்கப்படுவதால் உடைந்த பாகம் தெரியாமல் மறைக்கப்படுகிறது[3].

அக்காலத்தில் இத்தொழிலின் முக்கியத்துவம் கருதி சங்கறுக்கும் இயந்திரங்களை உருவாக்குவதே முக்கிய வழியாகும் என தத் கூறியுள்ளார்[4]. 1920களிலேயே வங்காளத் தொழில்துறை இயக்குநரின் முயற்சியால் சங்கறுக்கும் இயந்திரம் தயாரிக்கப்பட்டு ஆய்வு நிலையில் இருந்தது[5]. அக்காலங்களில் இருந்த தொழில்நுட்பத் திறனால் எளிதாகச் சங்கறுக்கும் இயந்திரங்களை உருவாக்க இயலவில்லை. இதனால் 1960கள் வரை மரபுவழி தொழிற்கருவிகளையே இவர்கள் பயன்படுத்தி வந்தனர்[6]. 1960களில் கூட வங்காளத்தில் சங்கறுப்போர் இத்தகைய பழைய மரபுக் கருவிகளையே பயன்படுத்தி வந்துள்ளனர். சிறிய அளவான சங்கை அறுக்கப் பயன்படுத்தப்படும் அளவில் பெரிய

---

[1] Dutt 1924:426

[2] Chattopadyay 1976:111

[3] Chattopadyay 1976:111

[4] Dutt 1924:427

[5] Dutt 1924:428

[6] Mehta 1960:25

மாறுபட்ட உருவமுடைய ரம்பம் பார்ப்போரை அசரவைக்கும் என்கிறார் சர் ஜார்ஜ் வாட் என்பார்[1].

1970களில்தான் சங்கறுக்கும் இயந்திரங்கள் வங்காளத்தில் அறிமுகப்படுத்தப்பட்டன[2]. இச்சமயத்தில் தமிழகத்திலும் இயந்திரங்கள் அறிமுகப்படுத்தப்பட்டன.

திருகுச்சுருளில் உள்ள அழி சங்குத்திரி எனவும் வழங்கப்பெறும்[3]. மேலும் சங்கறுக்குங் கருவி, சங்குத்திருகி என்றழைக்கப்பட்டது[4]. ஆயினும் சங்குத் திருகி எனும் சொல் குறித்து வேறு சான்றுகள் இல்லை. தற்காலத்தில் சங்கு அணிகலன்கள், அழகுப் பொருட்கள் தமிழகத்தில் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பது குறித்த கள ஆய்வு கீழக்கரை, இராமேஸ்வரம் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்டது. கீழக்கரையிலுள்ள ஜமாலியா சங்குத் தொழிலகத்தில் முழுவிவரமும் பெறப்பட்டது. மேலும் இராமேஸ்வரத்தில் உள்ள பெரிய அளவிலான சங்குத் தொழிலகங்களிலும் செய்திகள் சேகரிக்கப்பட்டன. இத்தொழிற்கூடங்களில் சங்கல்லாது பிற கடற்படு சோழிகள், சிப்பிகளில் அழகுப் பொருட்கள் மிகுந்த அளவில் செய்யப்படுகின்றன. வெண்சங்கு கொண்டு ஊதும் சங்கு, வழிபாட்டுக்குரிய வழுவழுப்பான சங்கு, குழந்தைகளுக்குப் புகட்டும் பாலடை ஆகியனவே உருவாக்கப்படுகின்றன. சங்கு வளையல்கள், மோதிரங்கள் மிகவும் அரிதாகவே செய்யப்படுகின்றன. தமிழகத்தில் சங்கு வளையல்களின் தேவை மிகக் குறைவாக இருப்பதே இதன் முதல் காரணமாகும். இரண்டாவதாக வங்காளத்தில் சங்குகளில் செய்யப்படும் அணிகலன்கள் தமிழகத்தில் செய்யப்படுவதைவிட உருவாக்கச் செலவு குறைவு என்பதாகும். வங்காளத்தில் பெரிய அளவிலான தொழிற் சாலைகள் இருப்பதும், சங்கை சுத்தப் படுத்துவதிலிருந்து வளையல்களின் அழகுருவாக்கம் வரை

---

1 Mehta 1960:144

2 Chattopadyay 1976:111

3 *Tamil Lexicon* 1982:1230

4 Rottler 1834:209

ஒரே இடத்தில் செய்யப்படுவதில்லை. சங்கின் உட்பகுதியை உடைத்தெடுத்தல், வளையல்கள் அறுத்தல், புடைப்புகளை அகற்றுதல், செதுக்குவேலை செய்தல், துலக்கிடுதல் ஆகிய பணிகள் வெவ்வேறு பணியிடங்களில் செய்யப்படுகின்றன. இதனால் குறிப்பிட்ட கலைத்திறனைக் கொண்ட ஒருவர் ஒரு செயலை மட்டும் மிக நேர்த்தியாகவும் விரைவாகவும் செய்ய இயலுகிறது. எனவே அணிகலன்களின் உற்பத்தி விலை தமிழகத்தைவிடக் குறைவாக உள்ளது. ஆகையால் தமிழகத்தில் சங்கு வளையல்கள் செய்யும் தொழில் இலாபகரமானதாக இல்லை. ஆயினும் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான சங்குகள் சுத்தம் செய்யப்பட்டு வழுவழுப்பாக்கப்பட்டுச் செதுக்கு வேலைகளுடன் உள்ளூர்ச் சந்தைகளுக்கும் பிற மாநிலங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. சிறு எண்ணிக்கையிலான சங்கு வளையல்கள் அறுப்போர்களே தமிழகத்தில் இன்றும் உள்ளனர். கேரளாவில் நெய்யாத்தங்கராவில் 1970களில் சிறிய சங்குத் தொழிற்கூடம் தொடங்கப்பட்டது[1].

கீழக்கரை என்னும் ஊரில் மேற்கொண்ட கள ஆய்வின் போது நாகநாதன் என்னும் கைவினைக் கலைஞர் சங்கில் வளையல்கள் மற்றும் மோதிரங்கள் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பதைப் பற்றிய செய்முறை விளக்கம் அளித்தார்.

### சங்கின் உச்சி, உட்பகுதியை உடைத்தெடுத்தல்

வளையல்களாகச் சங்கு அறுக்கப்படும் முன்னர் சங்கிலுள்ள உச்சிப்பகுதி, திருகுச்சுருள், இணைப்புச்சுவர் ஆகியன உடைத்தெடுக்கப்பட வேண்டும். இதற்கென இருவகைச் சுத்தியல்கள், சிறிய உளி மற்றும் கைஊசி ஆகியன பயன்படுத்தப்படுகின்றன (படம் 44). கடலிலிருந்து பெறப்பட்ட வெண்சங்கில் உள்ள சதைப்பகுதிகள் தரையில் வைக்கப்பட்ட மரக்கட்டையில் தட்டப்பட்டு, நீளமான வளைந்த இரும்பூசியைக் கொண்டு தோண்டி எடுக்கப்படும் (படம் 45).

---

[1] Chattopadyay 1976:111



படம் 44. சங்குகளை சுத்தம் செய்து திருகுசுருளை உடைக்கப் பயன்படும் கருவிகள்





படம் 45. சங்குகளைச் சுத்தம் செய்தல்

**பின்னர் சங்கின் உச்சிப் பகுதி சுத்தியலால் தட்டி உடைக்கப்படும் (படம் 46). குழிவான தரையில் சங்கு செங்குத்தாக நிறுத்தப்படும். தலையில் அடிக்கப்படும் அமைப்பு கொண்ட சுத்தியாலும், சிறு உளியாலும் சங்கின்**

திருகுச்சுருள், இணைப்புச் சுவர் ஆகியன தட்டி உடைக்கப்படும் (படம் 47). இப்பணி முடிந்தபின் சங்கு வளையல்கள் அறுக்கும் கோணத்தில் இணை வரிகள் சங்கின் மேல் இடப்படும் (படம் 48).



படம் 46. சங்கின் உச்சிப்பகுதியை உடைத்தெடுத்தல்



படம் 47. சங்கின் திருகுச்சுருளை உடைத்தெடுத்தல்

### வளையங்கள் அறுத்தல், உட்புடைப்புகள் அகற்றுதல்

சென்ற நூற்றாண்டு வரை வளையல் அறுக்கப் பயன்படுத்தப்பட்ட ரம்பங்கள் தற்பொழுது பயன்பாட்டில் இல்லை. அதற்குப் பதிலாக இயந்திரங்கள் பயன்படுத்தப்

படுகின்றன. மின்விசை இயந்திரம் ஒன்றில் மிக வேகமாகச் சுற்றும் நீண்ட இரும்புத் தண்டு பயன்படுத்தப் படுகிறது (படம்49). இதன் இரு முனைகளிலும் இருவர் பணிபுரியலாம். இம்முனைகளில் பணியின் தன்மைக்கேற்ப வட்ட வடிவிலான உலோகத் தகடுகள், வழுவழுப்பாக்கும் கற்கள், கொண்டை உருளைகள், மற்றும் அவைகளைப் பொருத்துவதற்குத் தேவையான பிற கருவிகளும் இணைக்கப்படும். மின்விசையில் இரும்புத் தண்டு சுற்றும் பொழுது உலோகத் தகடுகள் வேகமாகச் சுற்றும். வளையங்கள் அறுப்பார் சங்கை இரு கைகளிலும் உறுதியாகப் பிடித்தபடி ஏற்கெனவே வரிகள் இட்ட பகுதியைத் தகட்டின் முனையில் செலுத்தி அறுக்கத் தொடங்குவார் (படம் 50). சங்கு இரு துண்டங்களாகப் பிரிக்கப்படும் (படம் 51). அத்துண்டங்களில் கீழ்ப்பகுதி வளையலறுக்கப் பயனற்றது. மேல்பகுதியை மீண்டும் இருகைகளில் பிடித்தபடி சிறுசிறு வளையங்கள் வெட்டியெடுக்கப்படுகின்றன (படம் 52). இவ்வளையங்களின் உட்பகுதியில் புடைப்புகள் காணப்படும். கல்லாலான கொண்டை உருளைகள் சுற்றுத் தண்டின் தலைப்பகுதியில் பொருத்தப்பட்டு வளையங்களின் உட்பகுதிகள் நேர்த்தியாகத் தேய்த்து எடுக்கப்படுகிறது (படம் 53).



படம் 48. சங்கு வளையங்கள் அறுப்பதற்குக் கோடிடுதல்



படம் 49. சங்கு வளையங்கள் அறுக்கும் மின்னியநதிரம்



படம் 50. தகடு இணைக்கப்பட்ட சுழற்தண்டில சஙகு வளையங்கள் அறுத்தல்



படம் 51. இரண்டாகத் துண்டிக்கப் பட்ட சங்கு





படம் 52. சங்கு வளையங்களை அறுத்தல்



படம் 53. வளையங்களின் உட்புறப் புடைப்புகளைத் தேய்த்தல்



படம் 54. வளையங்களின் மேற்புறம் தேய்த்தல்



படம் 55அ. செதுக்கு வேலைகள் செய்தல்



படம் 55ஆ. ஊது சங்கு, வளையல்கள், மோதிரங்கள்

**கசடுகளை அகற்றுதல், பளபளப்பாக்குதல்**

சங்கு வளையங்களின் மேல்பகுதி மண் கசடுகள் நிறைந்ததாகவும், சொரசொரப்பாகவும் இருக்கும். அவை கல் உருளைகளில் தேய்த்து வெண்மையாக்கப்படும் (படம் 54). பின்னர் மென்மையான பொருட்கள் கொண்ட துணிகள் சுற்றிய உருளைகள் இரும்புத் தண்டில் பொருத்தப்பட்டு, சங்கு வளையலின் மேற்பகுதி தேய்க்கப்படும். இதனால் சங்கு வளையலின் மேற்பகுதியின் சொரசொரப்புகள் நீங்கி அவை மெருகேறுகின்றன.

**செதுக்கு வேலைகள்**

சங்கறுக்கப் பயன்பட்ட உலோகத்தகடுகளின் உதவியுடன் சங்கு வளையங்களின் மேற்பகுதியில், பக்கவாட்டிலும், முன்னும் பின்னும் செதுக்கு வேலைகள் செய்யப்படும் (படம் 55அ).

**வழுவழுப்பாக்குதல்**

சங்கு வளையங்கள், நீரில் கரைக்கப்பட்ட குறைந்த அடர்த்தி கொண்ட ஹைட்ரோ குளோரிக் அமிலத்தில் சிறிது நேரம் ஊறவைக்கப்பட்டு, பின்னர் துணியினால் தேய்க்கப்படும். இத்தகைய அழகூட்டப்பெற்ற சங்கு வளையல்கள் விற்பனைக்குத் தயார் நிலையில் இருக்கும்.

**மோதிரங்கள், கழுத்தணிகள் செய்தல்**

வளையல்கள் அறுத்தவை போக எஞ்சிய பகுதிகளின் சிலவற்றில் மோதிரமும், கழுத்தணி மணிகளும் அறுத்தெடுக்கப்பட்டு, துளையிட்டு, செதுக்கு வேலைகள் செய்யப்பட்டு, அமிலங்களில் ஊறவைத்து மெருகூட்டப் பெற்று விற்பனைக்குத் தயாராகும் (படம் 55 ஆ).

**அழகுப் பொருட்கள், ஊதுசங்கு செய்தல்**

சென்ற நூற்றாண்டு வரை சங்கின் மேற்பகுதியைச் சுத்தம் செய்து வழுவழுப்பாக்கச் சிறப்புவகை மண்பாறைக் கற்கள் பயன்படுத்தப்பட்டன (படம் 56). சங்குக் கலைஞர் தரையில் குத்துக்காலிட்டு அமர்ந்தபடி இருகைகளாலும் பிடித்தபடி கல்லின் மேல் உரசி கசடுகளைக் களைவார் (படம் 57). பின்னர் கை ரம்பங்களைக் கொண்டு மேல் பகுதியில் செதுக்குவேலை செய்யப்படும். அவை அமிலத்தில் ஊறவைத்து பளபளப்பாக்கப்படும். ஊதும் சங்காக இருப்பின் அதன் உச்சிப் பகுதி அறுக்கப்பட்டு விற்பனைக்கு அனுப்பப்படும்.

தற்பொழுது இயந்திரங்களின் உதவியுள்ளதால் இப்பணி சற்றே மாற்றம் பெற்றுள்ளது. இயந்திரத்தால் சுற்றும் கல் உருளைகளில் சங்குகளின் மேற்பகுதி தேய்க்கப்பட்டு சொரசொரப்பான பகுதிகள் நீக்கப்படும் (படம் 58). ஊது சங்கின் மேற்பகுதியும் இக்கல்லிலேயே தேய்த்து உருவாக்கப்படும். பின்னர் சுற்றும் உலோகத்

தகடுகளின் உதவியுடன் செதுக்கு வேலைகள் செய்யப்படும் (படம் 59). இச்சங்கின் மேற்புரம் சொரசொரப்பாகக் காணப்படும் (படம் 60).

ஊதுசங்கு, பூஜைக்குரிய சங்கு, அழகுக்காகப் பயன்படுத்தப்படும் சங்கு ஆகியன பின்னர் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட துணி உருளைகள், நார் உருளைகளைக் கொண்டு சொரசொரப்புகள் நீக்கப்படும். அமிலத்தில் ஊறவைத்துத் துணியில் தேய்த்து வழுவழுப்பாக்கப்பட்டபின் விற்பனைக்கு அவை அனுப்பப்படும் (படம் 61,62).

பாலடை செய்தல்

சிறிய அளவிலான சங்குகளின் கீழ்ப்பகுதியிலிருந்து வாயின் மேல்பகுதி வரையுள்ள திருகுச்சுருள்கள் உடைக்கப்பட்டு, சொரசொரப்பு நீக்கப்பட்டு, செதுக்கு வேலை, வழுவழுப்பாக்குதல் ஆகியன செய்யப்பெற்று பாலடைகள் விற்பனைக்கு அனுப்பப்படும்.



படம் 56. சென்ற நூற்றாண்டில் சங்கின் மேற்புறத்தைத் தேய்க்கப் பயன்பட்ட மணற்கல்





படம் 57. மணற்கல் மேல் தேய்க்கப்படும் சங்கு



படம் 58. இயந்திரத்தில் சங்கின் மேற்புறம் தேய்க்கப்படுதல்



படம் 59. இயந்திரத்தில் சங்கில் செதுக்கு வேலைகள் செய்தல்



படம் 60. செதுக்கு வேலைகள் முடிவுற்று மேற்புறம்



படம் 61. அமிலத்தில் ஊறவைத்துச் சங்கை வழுவழுப்பாக்குதல்



படம் 62. விற்பனைக்குத் தயாரான அழகிய சங்கு

# 6. சமயப் பண்பாட்டில் சங்கு

இந்துசமயக் கடவுளர்களின் உடைமையாகச் சங்கு கருதப் படுகிறது. முக்கியமாக வைணவக்கடவுளான திருமாலின் ஐம்படைகளுள் ஒன்றாக இது குறிக்கப்படுகிறது. இலக்கியம், சிற்பம் போன்றவற்றில் திருமால் மற்றும் சிவன், முருகன், துர்க்கை முதலிய கடவுளர்களின் கைகளில் சங்கு வைத்திருப்பதாகச் சுட்டப்பெறுவதுண்டு.

**திருமால்**

திருமால் பெரும்பாலான அவதாரங்களில் சங்கு வைத்திருப்பவராகக் காட்டப்படுகிறார். திருமால், சங்கபாணி என்றும் சங்கமேந்தி எனவும் அழைக்கப்பெறுகிறார்[1]. சங்கு அடையாளம் இருந்தாலே அது திருமாலைக் குறிப்பதாகவே மக்கள் நம்பிவருகின்றனர். வளைக்கையன், வளைக்கரன் என்னும் பெயர்களும் திருமாலுக்கு உண்டு[2]. சமய இலக்கியங்களில் *மச்ச அவதாரம், கூர்ம அவதாரம், வராக அவதாரம், நரசிம்ம அவதாரம்* ஆகிய அவதாரங்களில் திருமாலின் கையில் சங்கு இருப்பதைச் சித்திரிக்கின்றன. திருமாலின் அவதாரங்களான கிருஷ்ணரும், நாராயணரும் சங்கு வைத்திருப்பதைப் போல் சித்திரிக்கப் பெறுகின்றனர். இச்சித்திரிப்புகள் அனைத்திலும் அரிதாகக் கிட்டும் வலம்புரிச் சங்குகள் காட்டப்பெறுகின்றன. *பாகவத புராணம்* என்னும் நூல், சங்கு போன்ற உருவுடைய ஓர் அசுரன் பிரபாச தீர்த்தத்தில் சாந்தீபனி குமாரனைக் கொன்றதால் அவ்வசுரனைக் கிருஷ்ணமூர்த்தி கடலில் நுழைந்து கொன்று அவன் உடலைப் பாஞ்சசன்னியம் என்னும் சங்காகப் பெற்றார் எனக் குறிப்பிடுவதை *அபிதான சிந்தாமணி*

---

[1] *TL* 1982:1223

[2] கதிரைவேற் பிள்ளை 1918

சுட்டுகிறது[1]. சங்கசூடன் என்பவன் குபேரனுடைய தூதன் என்றும் அவன் பிருந்தாவனத்திலிருந்து யாதவப் பெண்களை வடதிசைக்குக் கொண்டு சென்றபொழுது கிருட்டிணனால் கொல்லப்பட்டான் என்ற கூற்றும் உண்டு[2]. இருப்பினும் சங்கு திருமாலின் ஆயுதமாக எவ்வாறு, எப்பொழுது இடம்பெறத் துவங்கியது என்பதற்கான சான்றுகள் இல்லை. மத்திய ஆசியாவிலிருந்து இந்தியாவிற்கு இடம் பெயர்ந்த ஆரியர் சங்கைப் பற்றி அறியாதவர்கள். இவர்கள் கத்தியவார் பகுதியில் வாழ்ந்த மக்களின் கலாச்சாரத்தில் கலந்தனர். அப்போது அவர்தம் சமூகத்தில் முக்கியப் பங்குபெற்று விளங்கிய சங்கு, திருமாலின் ஐம்படைகளுள் ஒன்றாகச் சேர்க்கப் பட்டிருக்கலாம் என ஹார்னல் கருதுகிறார்[3]. இக்கூற்று மேலும் ஆய்வுக்கு உரியதாகும்.

சங்க இலக்கியங்களில் தொடக்க காலங்களில் திருமால் குறிக்கப்பெறினும், அத்தெய்வத்தின் படைப் பொருளாக சங்கு சுட்டப்படவில்லை. ஆனால் சங்க இலக்கியங்களில் *முல்லைப்பாட்டிலும் பரிபாடலிலும்* முதன் முதலாகத் திருமாலின் ஆயுதங்களில் ஒன்றாகச் சங்கு

நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
(*முல்லைப்பாட்டு* 1-2)

சலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வயநேமியவை
வரிசிலை வயவம்பினவை (*பரிபாடல்* 15:58-60)

எனக் குறிக்கப்படுகிறது. எனவே தமிழகத்தில் சங்க காலத்தின் பிற்பகுதியில் திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகச் சங்கு கருதப்பட்டிருக்க வேண்டும். மேலும் அக்காலத்தில் சங்கு என்ற சொல் தமிழகத்தில் புழக்கத்தில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

---

[1] சிங்காரவேலு முதலியார் 1934:1007

[2] கதிரைவேற்பிள்ளை 1918

[3] Hornell 1914:117-129

7-8ஆம் நூற்றாண்டுகளுக்குப் பின்னர் இயற்றப்பட்ட பிரபந்தங்களில் திருமாலின் சங்கு பற்றிப் பல இடங்களில் குறிக்கப்படுகிறது. பாஞ்சசன்யம், சலஞ்சலம், வலம்புரி என்னும் சொற்கள் அவற்றில் மிகுந்து காணப்படுகின்றன. நாச்சியாரின் ஏழாம் திருமொழியில் உள்ள பத்துப் பாடல்கள் திருமாலின் ஆயுதமான சங்கினிடம் கடவுளைப் பற்றிக் கேட்பதாய் உள்ளது. இப்பாடல்களில் பாஞ்சசன்யம், வெண்சங்கு, நற்சங்கு, கோலப்பெருஞ்சங்கு, செல்வப் பெருஞ்சங்கு, வலம்புரி என அது விளிக்கப்படுகிறது[1]. ஏறத்தாழ அனைத்து ஆழ்வார்களாலும் திருமால் கரத்திலுள்ள சங்கு பற்றிப் பாடப்பட்டுள்ளது.

காட்டாக, சங்குகள் அதிகம் வந்திறங்கும் தாமிரபரணி நதிமுகத்துவாரத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி கோயிலில் உள்ள திருமாலை, *பொருநர் சங்கணித்துறைவன்* என்று நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்[2].

திருமாலின் முக்கிய ஆயுதங்களில் ஒன்றாக வலம்புரிச் சங்கு கருதப்பட்டதால், அது கடவுள்தன்மை உடையதாகக் கருதப்பட்டு வழிபடப்பட்டது. பிராமணர்களின் தினசரி வழிபாட்டில் சங்கு வழிபாடும் ஒன்றாக இருந்தது. வழிபாடு செய்யும் பிராமணர் சங்கைக் கையில் எடுத்து "அதன் வாய்ப்பகுதியில் உள்ள சந்திரக்கடவுளும் பக்கத்தில் உள்ள வருணனும் சங்கின் பின்புறத்தில் பிரஜாபதியும் உச்சியில் உள்ள கிருஷ்ணரின் ஆணைப்படி தேவர்கள் மூழ்கி எழும் கங்கை, சரசுவதி மற்றும் ஏனைய மூவுலகம் சார்ந்த புனித நதிகளையும் வணங்குகிறேன். ரமணர்களின் தலைவர் சங்கில் உள்ளார். எனவே சங்கைத் துதிக்கிறேன். முன்னர் திருமாலின் கரத்திலமைந்த சங்கை வழிபடுகிறேன். நாங்கள் மகிழ்ச்சியுடன் இருக்க அருள்புரியட்டும். சங்கிற்கு அரிசியையும், மலர்களையும் வாசனைப் பொருட்களையும் சமர்ப்பிக்கின்றேன்" என உச்சாடனம் செய்வர். 19ஆம்

---

[1] கோபாலாசாரியர் *1959:102-104*

[2] *Tamil Lexicon* 1982:1221

நூற்றாண்டின் முற்பகுதிவரை இவ்வழிபாடு வீட்டின் தலைவரால் தவறாது நிகழ்த்தப்பெற்றது[1].

தென்னிந்தியாவில் கர்நாடகப் பகுதியில் மேலைச் சாளுக்கியரால் உருவாக்கப்பட்ட குகைக்கோயில்களில் முந்தையதாகக் கருதப்படும் ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்த பாதாமிக் குகைக் கோயில்கள் மூன்றிலும் வைணவக் கடவுளின் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றில் திருமாலின் அவதார மூர்த்திகளான திருவிக்ரமன், வராகம், ஹரிஹரன், வைகுண்ட நாதர், நரசிம்மர், அஷ்டபூஜர் ஆகியோரின் உருவச்சிலைகளில் திருமாலின் சங்குடன் சேர்ந்த ஐம்படைகளும் காட்டப்பெறுகின்றன (படம் 63)[2]. மேலும் குகை I ல் பெண் தெய்வமான மஹிசாசுரமர்த்தினி ஒருகையில் சங்கு வைத்திருப்பதாகக் காட்டப்படுகிறது (படம் 64)[3]. கர்நாடகத்தில் உள்ள அய்யவோளேக்கு அருகில் உள்ள ரவுல பாடி என்னுமிடத்தில் 7ஆம் நூற்றாண்டைச் சார்ந்த குகைக் கோயிலில் ஹரிஹரனின் சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது[4]. மேலும் பூவராகர், மஹிசாசுர மர்த்தினி ஆகிய தெய்வங்களின் சிலைகள் ஒருகையில் சங்குடன் சித்திரிக்கப்பட்டுள்ளன[5].

இதுபோன்று எல்லோரா குகைகளில், தசாவதாரக் குகையிலும் கோவர்த்தனதாரி, சேஷசாயி, கஜேந்திரவரதா விஷ்ணு, திரிவிக்ரமன், வராகம், லங்கேஸ்வரர் குகையில் நரசிம்மர், திருமால் ஆகியோரின் உருவச்சிலைகளில் சங்கு உள்ளமை காட்டப்பெறுகிறது[6].

தமிழகப் பகுதியில் முதன்முதலாகப் பல்லவர் காலத்திலேயே கற்பாறைகளில் கோயில் எழுப்பும் வழக்கம்

---

[1] Hornell 1914:133

[2] Soundara Rajan 1981:47-68

[3] Soundara Rajan 1981:56,60

[4] Soundara Rajan 1981:104

[5] Soundara Rajan 1981:105

[6] Soundara Rajan 1981



படம் 63. பாதாமி குகைக்கோயிலில் ஹரிஹரன் சிற்பத்தில் சங்கு
(நன்றி Soundara Rajan 1981)



படம் 64. பாதாமி குகைக்கோயிலில் மஹிசாசுரமர்தினி சிற்பத்தில் சங்கு
(நன்றி– Soundara Rajan 1981)

தொடங்கப்பெற்றது. இக்கோயில்களில் எழுப்பப்பட்ட கடவுளர் சிலைகளில் காலத்தால் முந்தையதாகக் கருதப்படும் கடவுள் சிலைகளில் துர்க்கையே இடம்பெறுகிறது. செங்கல்பட்டு மாவட்டம், வல்லம் குகைக்கோயில் மகேந்திரனால் (கி.பி.580-630) எழுப்பப்பட்டது[1]. இக்கோயிலில் முதன்முதலில் சங்கு காட்டப்பெறுகிறது என்பது சுட்டத்தகுந்தது.

இதன் பின்னர் முதலாம் நரசிம்மன் (கி.பி.630-668) காலத்தில் குடையப்பட்ட திருக்கழுக்குன்றக் குடைவரையில் திருமாலின் சிலையிலும், செங்கல்பட்டு மாவட்டம் சிங்கப் பெருமாள் கோயிலில் உள்ள நரசிம்மர் சிலையிலும், மகாபலிபுரம் வராக மண்டபத்தில் திருமால், திருவிக்ரமன் ஆகியோர் கைகளிலும் சங்கு உள்ளது[2]. திண்டிவனம் வட்டம் கீழ்மாவிலங்கையில் இராஜசிம்மனால் (கி.பி700-728) குடையப்பெற்ற கோயிலில் திருமாலின் கையில் சங்கு காட்டப்பெறுகிறது[3].

**சிவன்**

சிவனும் சங்கைக் கையில் வைத்திருப்பதாகக் காட்டப் பெறுகிறார். வடமொழியில் எழுதப்பெற்ற *தர்மசிந்து* (Dharmasindu) என்னும் நூலைப் பதிப்பித்த ஜகன்னாத ஆனந்தா என்பவரால் பொறிக்கப்பட்ட ஓவியத்தில் சிவன் சங்கைக் கையில் வைத்திருப்பதைக் காணலாம்[4].

சங்கு, சிவனின் ஆயுதமாகப் பண்டைச் சிற்பங்களிலும் காட்டப்பெறுகிறது. மூவுலகங்களையும் அழிப்பதைக் காட்டும் சிவனின் சிற்பங்களில் பத்துக் கரங்கள் சித்திரிக்கப்படும். சில சிற்பங்களில் பதினாறு கைகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. இச்சிற்பங்களில் ஒரு கையில் சங்கு வைத்திருப்பதாகச் சித்திரிக்கப்படுகிறது. பைரவராகச் சிவனைக் காட்டும் போது பதினெட்டுக்

---

[1] ராசவேலு மற்றும் சேஷாத்திரி 2000:34
[2] Srinivasan 1964:103, 112
[3] Srinivasan 1964:130
[4] Hornell 1914:130

கைகளை உடையவராகச் சித்திரிக்கப்பெறுகிறார். சங்கும் இச்சித்தரிப்பில் ஒன்றாகும்[1].

சைவ ஆகமங்களில் சுட்டப்பெறும் பாசுபதாஸ்திரம் மனித உருவமாகச் சித்திரிக்கப்படுகிறது. அது நான்கு முகங்கள், முகத்திற்கு மூன்று கண்கள், கோரைப்பற்கள், சிலிர்த்த முடி, முறுக்கு மீசை, நான்கு கைகள் கொண்டதாகக் கூறப்படுகிறது. இவ்வுருவம் சிவனின் உக்கிரமான காட்சியாகக் கொள்ளப்படுகிறது. பத்மாசன நிலையில் உள்ள சிவனின் பசுபதாஸ்திர சிற்பத்தில் உள்ள நான்கு கைகளில் சக்தி, முருகன், கதாயுதம், சங்கு ஆகியன காட்டப் பெறுகின்றன[2].

தேவாரப்பதிகங்களில் சிவபெருமான் காதணியாகச் சங்கணிகுழை, சங்கக் கயனு, சங்கத் தரளம், சங்கவாரி குழை, சங்கவெண் குழை, சங்கவெண்தோடு எனப் பல இடங்களில் சங்கணி பற்றிய குறிப்புக் காணப்படுகிறது[3]. சிவன் சங்கு வளையத்தைக் காதணியாக அணிந்திருப்பதை அனைத்து சிற்பங்களிலும் காணமுடிகிறது.

**துர்க்கை, மஹிசாசுரமர்த்தினி**

மகாபலிபுரம் வராக மண்டபத்தில் துர்க்கையின் சிற்பத்தில் கைகளில் சங்கு சித்திரிக்கப்பட்டுள்ளது[4]. முதலாம் நரசிம்மனால் குடையப்பெற்ற சிங்கவரம் ரங்கநாதர் குகைக்கோயிலிலும் துர்க்கையின் கையில் சங்கு காட்டப்பெறுகிறது[5]. பல்லவர்காலக் குகைக்கோயில்களில் துர்க்கை சிற்பத்தில்தான் சங்கு சித்திரிக்கப்பட்டது. குறைந்த கால இடைவெளியில் திருமாலின் கையிலும் அது சித்தரிக்கப்பட்டது எனலாம்.

---

[1] Gopinatharao 1993:115-116

[2] Gopinatharao 1993:216-217

[3] *சதாசிவ செட்டியார் 1987, 1988*

[4] Srinivasan 1964:146-151

[5] Srinivasan 1964:115

**ஹரிஹரன்**

சிவனும் திருமாலும் இணைந்த நிலையில் உள்ள ஹரிஹரனின் சிற்பத்தில் திருமாலுடைய பாகத்தில் சங்கு இருப்பதாகச் சுட்டப்பெறுகிறது[1].

**சுப்பிரமணியர்**

சுப்பிரமணியரின் பன்னிரு கரங்களில் ஒரு கரத்தில், சங்கு உள்ளதாகச் சித்திரிக்கப்படுகிறது[2]. *ஸ்ரீதத்வநிதி* என்னும் வடமொழி நூலில் கார்த்திகேயன் கரங்களில் சங்கு இருப்பதாகச் சுட்டப்பெறுகிறது[3]. பட்டீஸ்வரம் சிவன் கோயிலில் கையில் சங்கு வைத்திருக்கும் சண்முகரின் சிற்பம் உள்ளது[4].

**வீரபத்திரர்**

தக்கனின் யாகத்தை அழிக்கச் சிவனால் அனுப்பப்பட்ட ஆயிரம் தலைகள் கொண்ட வீரபத்திரரின் உருவச் சிற்பத்தில் சங்கு காட்டப்பெறுகிறது[5].

**சப்த மாதர்**

சப்த மாதர் சிற்பங்களில் காட்டப்பெறும் காயத்ரி தேவியின் இடது கரத்தில் சங்கு காணப்படுகிறது. புதுக்கோட்டை மாவட்டம் கொடும்பாளூர் மூவர் கோயிலில் உள்ள சப்த மாதர் சிற்பத்தில் இக்காட்சி அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

**நேமிநாதர்**

இந்துக் கடவுள்களல்லாது சமண சமயத்திலும் சங்கு முக்கியத்துவம் பெற்று விளங்கியது. சமணத்

---

[1] Gopinatharao 1993:335-6

[2] Gopinatharao 1993:427

[3] Gopinatharao 1993:447

[4] Gopinatharao 1993:531

[5] Gopinatharao 1993:115-6

தீர்த்தங்கரர்களான ஆதிநாதர், நேமிநாதர் ஆகியோரின் உடைமையாகத் தர்மச்சக்கரமும், சங்கும் கருதப்பட்டன. கி.பி.9ஆம் நூற்றாண்டில் செதுக்கப்பட்ட சமணச் சிற்பங்களில் ஆதிநாதர், நேமிநாதர் ஆகியோர் அமர்ந்திருக்கும் பீடங்களில் அவர்களது சின்னங்களாகிய தர்மச்சக்கரமும் சங்கும் பொறிக்கப்பட்டிருக்கும்[1].

**வலம்புரிச் சங்கு**

வலம்புரிச்சங்கு பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்கள் முதல் இக்கால இலக்கியங்கள் வரை காணப்படுகின்றன. தமிழகத்தில் வலம்புரிச் சங்கு சமய முக்கியத்துவம் பெறும் முன்னரே சமுதாய முக்கியத்துவம் பெற்று விளங்கியது. வலம்புரிச் சங்கின் ஒலி குறித்தும் இலக்கியங்களில் பரவலாகச் சுட்டப்பெறுகிறது (பின்னிணைப்பு 1). காலைப் புலர்தலின் பொருட்டு எழுந்த வலம்புரிச் சங்கின் ஒலியைப் *புறநானூறு* (397:5-6) குறிக்கிறது. வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்கு செல் (*பரிபாடல் 13:44*), வால்வளை செறிய வலம்புரி வலனெழ (*சிலப்பதிகாரம் 27:257*), வலம்புரிச் சங்கம் வரிதெழுந்தார்ப்ப (*மணிமேகலை 7:113*) என வலம்புரிச்சங்கின் ஒலி உயர்வைக் குறிக்கும் பாடல்கள் இங்கு சுட்டத்தகுந்தன.

வலம்புரி அரியதாகக் கிடைப்பதால் அச்சங்கில் செய்யப்பெற்ற அணிகலன்கள் விலைமதிப்பற்றதாய் விளங்கின. *நெடுநல்வாடை* (141-2) வலம்புரியில் அறுத்துச் செய்யப்பட்ட கை வளையைப் பாண்டியனின் மனைவி அணிந்திருந்ததாகச் சுட்டுகிறது. இலங்கை மன்னன் தேவனாம்பிரிய திசன் (கி.மு. 250-210), அசோகருக்கு அனுப்பிய பரிசுப் பொருட்களில் வலம்புரிச் சங்கும் ஒன்றென மகாவம்சம் குறிப்பிடுகிறது[2]. இலங்கை மன்னன் கீட்டி ஸ்ரீராஜசின்ஹாவனி சியாம் மன்னர் தம்மிகாவிற்கு அனுப்பிய

---

[1] ஏகாம்பரநாதன் 2001:216

[2] Geiger 1950:78

பரிசுப் பொருட்களில் வலம்புரிச் சங்கும் ஒன்றாகும் என *மகாவம்சம்* (100:154) குறிக்கிறது[1].

வலம்புரி குறையேதும் இல்லாதது எனவும் தூய்மையானது எனவும் *பெரும்பாணாற்றுப்படை* (34-35) குறிக்கிறது. இதன் தூய்மை பிற பொருட்களுக்கு உவமையாகவும் சுட்டப்பெறுகிறது. பதினாறு மங்கலப் பொருட்களில் வலம்புரிச் சங்கும் ஒன்றெனப் *பெருங்கதை* (2.5.28) கூறுகிறது.

வலம்புரியில் பிறந்த முத்து உயர்ந்ததாகக் கொள்ளப்பெற்றது.[2] வலம்புரியிற் பிறந்த முத்தை நல்லோருக்கும் அவர்தாம் பிறந்த குடிக்கும் ஒப்பாகக் குறிப்பிடுவர்.

> மாசறு பொன்னே வலம்புரி முத்தே (*சிலப்பதிகாரம்* 2:73)
>
> வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும் (*பெருந்தொகை* 1530:1)
>
> வலம்புரி யொரு முத்தன்ன
> நலம்புரி வைத்திய நாத தேசிகனே (*பெருந்தொகை* 1530:1)

என்னும் பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றன.

திருமாலின் ஆயுதங்களில் ஒன்றாகச் சித்திரிக்கப்படும் சங்கு வலம்புரி வகையைச் சார்ந்தது. திவ்யப்பிரபந்தங்களில் திருமாலின் கரத்திலுள்ள வலம்புரிச் சங்கு பல பெயர்களில் வருணிக்கப்படுகிறது. திருமாலின் உடமைகளில் ஒன்றானதாலும், அரிதாகக் கிடைப்பதாலும் வலம்புரிச் சங்குகளைக் கோயிலுக்கு நன்கொடையாக வழங்குவது சிறப்பாகக் கருதப்பட்டது. மன்னரோ, வசதிபடைத்தோரோ இச்சங்குகளை நன்கொடையாக அளித்தனர். கோயிலில் உள்ள வலம்புரிச்சங்குகளில் கீழும் மேலும் தங்கத்தால் அழகான வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கும்.

---

[1] Adithiya 1981:40

[2] சங்கில் முத்து உருவாவதில்லை. காண்க இயல் 3.

வலம்புரிச் சங்குகள் கோயில்களிலும் மிக அரிதாகவே காணப்படுகின்றன. திருவிதாங்கூர் பகுதியில் உள்ள கோயில்களில் மொத்தம் 12 வலம்புரிச் சங்குகள் உள்ளதாகவும், சுசீந்திரம் ஸ்தானுமாலயப்பெருமாள் கோயிலில் உள்ள 9 அங்குல நீளமுள்ள வலம்புரிச் சங்கு பலவித மணிக்கற்களால் அலங்கரிக்கப்பட்டது எனவும் கே.கே.பிள்ளை குறிப்பிடுகிறார்[1].

1905ஆம் ஆண்டு ஹார்னல் கத்தியவார் பகுதியில் இருக்கும் சங்கரநாராயணன் கோயில், லக்ஷ்மி கோவில், சத்தியபாமா கோயில் ஆகியவற்றில் வலம்புரிச் சங்கு வணங்கிப் போற்றப்பட்டதைக் கண்டதாகக் குறித்துள்ளார் (படம் 65). பனாரசிலுள்ள கோவில் கருவூலத்தில் வலம்புரிச் சங்கு முக்கிய செல்வமாகக் கருதப்பட்டது[2].



படம் 65. கத்தியவார் பகுதியில் பெட் துவாரகை என்னுமிடத்திலுள்ள சத்தியபாமா கோயிலில் காணப்படும் வலம்புரிச் சங்கு (நன்றி Hornell 1914)

[1] Pillay 1953:438

[2] Hornell 1914:130

ஆங்கிலேயர் காலத்திலும் அதற்கு முன்னரும் மன்னர்களும் ஜமீன்தார்களும் வீட்டில் வலம்புரிச் சங்கை வைத்திருப்பதைப் பெரும் பேறாகக் கருதினர். வலம்புரிச் சங்கில் நீரூற்றிக் கடவுளுக்கு திருமுழுக்கு செய்வதை வழக்கமாகவும் கொண்டிருந்தனர். வலம்புரிச்சங்கை வீட்டில் வைத்திருந்தால் செல்வவளம் கூடும் என்ற நம்பிக்கையை அவர்கள் கொண்டிருந்தனர். தமிழகத்தில் இந்நம்பிக்கை இசுலாமியரிடமும் இருந்தது. வலம்புரிச்சங்கு தானாகவே ஒலி எழுப்பும் என்ற நம்பிக்கையும் தமிழகத்தில் இருந்தது.[1] தூத்துக்குடியைச் சார்ந்த ரோமன் கத்தோலிக்க மீனவர் ஒருவர் வலம்புரிச்சங்கின் ஒலி செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் பெரும் ஆரவாரத்துடன் இருக்கும் என ஹார்னலிடம் கூறியுள்ளார்.

வலம்புரிச்சங்கு தங்கத்தின் எடைக்கு ஈடாகத் திபெத்திலும் சீனாவிலும் கருதப்பட்டது. திபெத்தில் ஷிகேட் (Shigate) என்னும் இடத்திற்கு அருகே அமைந்துள்ள சாக்ய மத ஆலயத்தில் குப்ளாய்கானால் நன்கொடையாக வழங்கப்பட்ட வலம்புரிச்சங்கைத் தான் கண்டதாக அப்பகுதியை அளவீடு செய்த அரசு அதிகாரி சரத் சந்திரதாஸ் குறிப்பிடுகிறார்[2]. ஏழு அவுன்ஸ் வெள்ளியை நன்கொடையாக வழங்கினால் அவ்வலம்புரிச்சங்கை லாமாக்கள் ஊதுவர். இச்செயலை நன்கொடையாளர் பெருமையாகக் கருதினர் எனவும் அவர் கூறுகிறார். யோகிகள் தங்களது மூச்சுப் பயிற்சியின் போது (ப்ராணயாமா) வலம்புரிச் சங்கின் ஒலி கேட்பதாகக் கூறுவதுமுண்டு [3].

சமய முக்கியத்துவம் பெற்றதாலும், மங்கலப் பொருளாகக் கருதப்பட்டதாலும் வலம்புரிச் சங்கின் உருவம் மன்னர்களின் நாணயங்களில் இடம் பெறலானது. ஆங்கிலேயர் காலத்தில் திருவிதாங்கூர் மாவட்டப் பகுதியில்

---

[1] காண்க இயல் 3.

[2] Hornell 1914:137

[3] Hornell 1942:117

படைச்சின்னத்தில் கேடயத்தின் மத்தியில் நீலவண்ணத்தின் மேல் மூன்று வெள்ளி நிற வலம்புரிச்சங்குகளும், அதன்மேல் ஒரு கடற்குதிரையும் காட்டப்பட்டுள்ளது. கொச்சிப் பகுதி படைச் சின்னத்தில் ஒரு வலம்புரிச் சங்கு பல்லக்கு, பித்தளை விளக்கு, குடை ஆகியனவும் சேர்த்துக் காணப்பட்டது. திருவிதாங்கூர் மன்னரது முடிசூட்டு விழாவில், துலாபாரம் அளிக்கும் பொற்காசுகளில் ஒருபுறம் வலம்புரிச்சங்கும் மறுபுறம் 'ஸ்ரீபத்மநாப' என்று மலையாளத்திலும் பொறிக்கப் பட்டிருந்தது. முடிசூட்டு விழா முடிவடைந்தபின் இப்பொற்காசுகள் பல ஊர்களிலிருந்து வந்த பிராமணர்களுக்கு வழங்கப்பட்டன. மேலும் திருவிதாங்கூர் சமஸ்தான முத்திரை ஓலை ஆவணங்களில் சங்கு உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது[1].

### சங்குத் திருமுழுக்கு

தமிழகத்தில் மட்டுமல்லாது இந்தியாவில் பிற பகுதிகளிலும் சங்கில் நீர் ஊற்றிச் செய்யப்படும் திருமுழுக்கு தெய்வத்தன்மை பொருந்தியதாகக் கருதப்படுகிறது. கிருத்தவ காலத்தைச்சார்ந்த ஆந்திர மாநிலத்திலுள்ள நாகார்ஜுனகொண்டாவில் கண்டெடுக்கப்பட்ட எழுத்துப் பொறித்த சங்குகளின் கீழ்ப்பகுதியில் துளைகள் காணப் படுகின்றன. அவை கிட்டிய இடத்தில் கிடைத்த ஏனைய தொல்பொருட்களைக் கொண்டு சிவலிங்க திருமுழுக்கின் போது நீர் ஊற்ற இச்சங்குகளைப் பயன்படுத்தி இருக்கலாம் எனவும் இக்காலத்திலேயே சங்கு சிவ ஆலயங்களில் பயன்படுத்தத் தொடங்கி இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது[2].

மேற்கூறிய சங்குபோல் மிகப்பழமையான திருமுழுக்குச் சங்கு ஒன்று தஞ்சாவூருக்கு அருகில் காவிரியாற்றில் கண்டெடுக்கப்பட்டுள்ளது (படம் 66). இச்சங்கின்

---

1 முனைவர் கோவை மணி, தமிழ்ப் பல்கலைக் கழகம் அவர்கள் தெரிவித்தது.

2 Sarma 1982:104

உச்சிப்பகுதி துளையிடப்பட்டுள்ளது. சுருளச்சு நேர்த்தியாக இரண்டடுக்கு கால்வாய் அமைப்பு போன்று செதுக்கப்பட்டுள்ளது. கிடைமட்டமாக வைக்கும்போது சங்கின் கீழ்ப்பகுதியில் துளை ஒன்று காணப்படுகிறது. இச்சங்கின் உச்சிப்பகுதியிலுள்ள துளை திருமுழுக்கு நீர் ஊற்றும்வண்ணம் விளையுயர்ந்த உலோகத்தால் புனல் மற்றும் பூணுடன் பொருத்தப்பட்டிருக்கும் (படம் 67). புனலில் ஊற்றப்படும் நீர் துளைவழியாக சுருளச்சிலுள்ள கால்வாய்களில் வழிந்து சங்கின் கீழ்ப்பகுதியிலுள்ள துளைவழியாக சீராக ஊற்றும். இது சங்குத் திருமுழுக்காட்டிற்குக் கோயில்களில் பயன்பட்டிருக்கும். இது போன்ற அரிய கைவினைப்பாடமைந்த திருமுழுக்காட்டுச் சங்கு தமிழகத்தில் வேறெங்கும் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தகுந்தது.





படம் 66. தஞ்சாவூர் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட
கைவினைப்பாடமைந்த மிகப்பழைய் திருமுழுக்கு சங்கு
(நன்றி ஆறுமுக சீதாராமன்)



படம் 67. கைவினைப்பாடமைந்த மிகப்பழைய சங்கினில் திருமுழுக்கு செய்யும் முறை

ஆகமநூல்கள் சங்கினால் செய்யும் வழிபாட்டு முறைகளைப்பற்றி விரிவாகக் கூறுகின்றன. கார்த்திகை மாதங்களில் சிவாலயங்களில் "சங்காபிஷேகம்" நடைபெறும். இறைவனைப் பஞ்சபூதங்களாலும் திருமுழுக்கு செய்து வழிபடுதல் மரபாகும். அங்ஙனம் வழிபடும்போது நீரின் அம்சமாகக் கருதப்படும் சங்கினால் நீராட்டுதல் நீண்ட காலமாக நடைபெற்று வருகிறது[1]. கோயில்கள் கட்டப் பெறும் தொடக்க கட்டத்தில் அமைக்கப்பட உள்ள கடவுள் சிலைக்கு 108 சங்குகளிலோ 1008 சங்குகளிலோ நீர் ஊற்றப்பட்டுச் சங்குத்திருமுழுக்கு செய்வது வழக்கமாக இருந்தது. தற்காலங்களிலும் பெரும்பாலான சிவத் தலங்களில் 1008 வலம்புரிச் சங்கில் திருமுழுக்கு செய்வது மரபாக உள்ளது. இவ்வலம்புரிச் சங்குகள் இந்தியாவில் பெறப்பட்டவையல்ல. இவை ஆப்பிரிக்கக் கடல் பகுதியில் பெறப்படுபவை (படம் 68). இந்தியக்கடல் பகுதியில் கிடைக்கும் பிற வகை வலம்புரிச் சங்குகளின் மேற்பகுதி தேய்க்கப்பட்டுப் போலியான வலம்புரிச் சங்குகளும்

---

1 ஸ்ரீநிவாசன் 1984:1

செய்யப்படுகின்றன. இதன் புரிகளின்மேல் சிறிய அளவிலான புடைப்புக்கள் காணப்படுவதுடன் சற்றே சிவப்பு கலந்த வெள்ளை நிறத்தில் காணப்படும். கோயில்களில் செய்யப் படும் சங்காபிஷேகம் முடிந்தவுடன் விலை மதிப்பில் குறைந்த இவ்வலம்புரிச் சங்குகள் வழிபாட்டிற்குப் பதிவு செய்தோருக்கு அளிக்கப்படுகின்றன.



படம் 68. ஆப்பிரிக்கக் கடல் பகுதியில் பிடிக்கப்பட்டு இந்தியாவில் விற்பனையாகும் வலம்புரிச் சங்கு

செங்கல்பட்டு மாவட்டம் திருக்கழுக்குன்றத்தில் வேதகிரீஸ்வரர் கோயிலிலுள்ள சங்குத் தீர்த்தம் என்னும் குளத்தில் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை சங்கு தானாகவே உதிப்பதாகவும் நம்பிக்கை உண்டு[1]. ஹார்னல் அவ்வூர் கிராம அதிகாரியான டி.ஏ.வேதாசல சாஸ்திரியவர்களிடம் பெற்ற தகவல்களைக் குறிப்பிட்டுள்ளார். சங்கு உதிக்கும் நாளுக்கு மூன்று நாட்கள் முன் குளத்தில் உள்ள நீர் கலங்கி நுரையுடன் கூடிய பேரிரைச்சலுடன் இருக்கும். சங்கு இக்குளத்தில் உதித்த

[1] Hornell 1914:134-5

பின் குளத்து நீர் தானாகத் தெளிந்துவிடும் எனவும் குறிப்பிடுகிறார். குளத்தின் ஓரத்திற்குச் சங்கு வந்த பின்னர் மங்கல தீர்த்தம் தெளிக்கப்பட்டு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். பின்னர் கோயிலில் வைத்து வழிபாடு செய்து கருவூலத்தில் வைக்கப்பெறும்.

இவ்வரிய நிகழ்வுக்கு ஒரு புராணக் கதையும் வழங்கப் பெறுகின்றது. மார்க்கண்டேயன் தனது சீடர்களுடன் திருக்கழுக்குன்றத்திற்கு வருகை புரிந்த பொழுது அன்றாடம் புரியும் சிவவழிபாட்டுக்கான பொருட்களை எடுத்துவரச் சீடர்கள் மறந்துவிட, வழிபாட்டுக்குத் தேவையான சங்கு இல்லாததால் வருத்தமுற்ற மார்க்கண்டேயன் இறைவனை வேண்டினார். ஆண்டவன் அருளினால் சங்கு குளத்தில் உதித்ததாகவும் கதை வழங்கப்பெறுகிறது. இதன்பின்னர் மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து இனிவரும் காலங்களில் தனது நாள் வழிபாட்டின் பொழுது சங்கு உதிக்கவேண்டும் என வேண்டியதற்குச் சிவன் வரமளித்ததாகவும் கூற்று உண்டு. தேவர்களுக்கு 12 ஆண்டுகள் ஒரு நாள் என்பதால் 12 ஆண்டுக்கு ஒருமுறை சங்கு உதிப்பதாகக் கூறப்படுகிறது.

கடலில் சங்கு உருவாகும் முறை இயல் இரண்டில் விளக்கப்பட்டுள்ளது. தரையில் வாழும் நத்தையைப் போன்ற உயிரினமே சங்காகும். சங்கின் உள்ளே யிருக்கும் மெல்லுடலி வெளியே எடுக்கப்பட்டுக் கடல் மண்கலந்த சொரசொரப்பான மேல்பகுதியைத் தேய்த்த பின்னரே கோயில்களில் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்படும் அளவிற்குத் தயாராகும். எனவே திருக்கழுகுன்றம் சங்குதீர்த்தக் குளத்தில் 12 ஆண்டுகட்கொருமுறை சங்கு உருவாகும் என்பதைத தொன்மக்கதை எனக் கூறலாம். மேலும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை சங்கு உதிக்கவில்லை என்பதை கீழ்க்கண்ட மெக்கன்சியின் சுவடிகள் தொகுப்பில் உள்ள திருக்கழுக்குன்றம் கைபீயத்து

*(டி 3182)இல் சங்குத் தீர்த்தம் பற்றிய குறிப்பில் காணமுடிகிறது*[1].

> விருத்தி வருடம் நாட்டு விறாகுமுதலியார் கொயிலுக்குக் கிழக்கு பூமிக்கிறையம் வாங்கி, யிருபது வீடுகட்டி பிராமணாளுக்குத் தானம் பண்ணான். கர வருடம் திருமணம் நல்லதம்பி முதலியார் மலையடிவாரத்தில் மண்டபம் கட்டி, சத்திரமும் கட்டி, தற்மம் பண்ணிக்கொண்டு வருகிறார். அதின் பிறகு, ஐதர்கலாபத்தில் ரோம்ப ஆராச்சிகமாய் எருக்கங்காடு மூடியிருந்தது. சோபகிருது வருடம் வடுகநாத முதலியார் அமிலுக்கு வந்து அநேகம் பணம் சிலவு பண்ணிக்காட்டையும் வெட்டி, தேரும் பண்ணிவைத்து, சங்குதீர்த்தம் குளம் மண் எடுப்பித்து, பாதி மட்டுக்கும் படியும் கட்டி வைத்தார். சங்கு தீர்த்தத்தில், யுவ வருடம் அப்பாச்சி நயினார் அமிலில் யிரண்டு சங்கம் பிறந்து கோயிலிலே வைத்திருந்து. ஐதர் கலாபத்திலே போய்விட்டது. அதின் பிறகு, பராபவ வருடம் வடுகநாத முதலியார் அமிலில் ஒரு சங்கம் பிறந்து, வைத்திருக்கிறது; அது வாம விருத்தம் (இடம்புரி சங்கு) அதன் பிறகு தேசம் சுபிஷ்ஷ மில்லாத்தினாலே சங்கம் உற்பத்தியில்லை. பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு திரம் சங்கம் உற்பத்தியாகிற நிபந்தனையில்லை. யிதுக்கு முன்னாலே மாக்கண்டய்யருக்கு சங்கம் பிரதிஷ்ஷமான பிற்பாடு கால அபாந்திரம் வந்துபடியினாலே சங்கம் பிறந்ததும் யிருந்தும் தெரியது.

*இச்சான்றுகளை நோக்கினால் சங்கு தானாக உதித்ததை நேரடியாக எவரும் பார்த்ததில்லை எனலாம். சங்கு கடலில் பிறக்கும் என்பதால் மேற்கண்ட கூற்றில் உண்மையில்லை என்ற முடிவுக்கு வரமுடிகிறது.*

*மார்க்கண்டேயரால் வழிபடப்பட்ட சிவலிங்கம் எனத் திருக்கடையூர் சிவன் கருதப்படுகிறார். இங்கு சங்குத்*

---

[1] *சௌந்தரபாண்டியன் 1997:286-7*

திருமுழுக்காட்டிற்குப் பயன்படுத்தும் தீர்த்தத்தில் 100க்கும் மேற்பட்ட மூலிகைகளைக் கலந்து சங்குகளில் நிரப்பி வழிபாடு நடைபெறுகிறது[1]. இவ்வழிபாட்டுப் புனிதநீர் எல்லா நன்மைகளையும் தரக்கூடியது, நோய்களையும் தீர்க்கக்கூடியது என்ற நம்பிக்கை உண்டு. வீடுகளில் வழிபடும்போது சங்கில் நிரப்ப புனிதநீரைத் தண்ணீரில் மூழ்கவைத்து எடுக்காமல் உத்தரணியால் நிரப்பிய பின்னரே திருமுழுக்காடு செய்ய வேண்டும். மேலும் வழிபடும் முன்னர் சங்குப் பூசை செய்த பின்னரே சங்குத் திருமுழுக்காடு செய்ய வேண்டும்[2].

சங்குத் திருமுழுக்காடு என்பதை சைவ சமயத்தில் ஒருவரை ஆசாரியனாக்குவதற்குக் கடவுள் முன்னிலையில் அவரைச் சங்கினால் திருமுழுக்காடு செய்யும் வழிபாடாகவும் இது கொள்ளப்படும்[3]. இச்சங்குத் திருமுழுக்காடு இறை உணர்வுள்ள பெருமகற்கு செய்யப்பட்டது. திருவாவடுதுறை ஆதீனத்தில் எட்டாவது பட்டம் பெற்றிருந்த மாசிலாமணி தேசிகர் (1625-1658) என்பார் சங்குத் திருமுழுக்காட்டிற்குப் பின்னர் ஈசானதேசிகர் என்னும் பெயரைப் பெற்றார்[4].

ஆந்திராவிலுள்ள கஞ்சம் பகுதியில் வசித்த பௌரீஸ் மற்றும் தண்டாசி குல மக்கள் மஞ்சள் கரைசலை சங்கிலிட்டு மணமக்களின் இணைந்த கைகளில் ஊற்றுவது வழக்கமாகும்[5].

## சங்கு முத்திரையிடுதல்

வைணவர்களுக்கு உபநயனம் செய்விக்கும்போது பூணூல் அணிவது மட்டுமல்லாமல் திருமாலின் முக்கிய உடைமையான சங்கு, சக்கர முத்திரைகள் சூடேற்றப்பட்ட

---

1 தினமலர் 29.11.2002

2 தினமலர் 29.11.2002

3 *Tamil Lexicon* 1982:1225

4 கிருஷ்ணமூர்த்தி 1999:30-31

5 Hornell 1914:147

செம்பு அச்சின்மூலம் தோளில் இடப்படும். இதைச் *சமாட்சரணம்* என்பர். இவை பொதுவாக வைணவர்களின் வாழ்வில் ஒருமுறைதான் நடைபெறும். கர்நாடகத்தைச் சேர்ந்த மாதாவா பிரிவு வைணவர்கள் அடிக்கடி இட்டுக் கொள்வர். சைவத்திலிருந்து வைணவப்பிரிவிற்கு மாறுபவர்களும் இத்தகைய சமாட்சரணம் செய்து கொள்ள வேண்டும்[1]. சென்ற நூற்றாண்டில் ஐம்பதுகள் வரை சைவத்திலிருந்து வைணவப் பிரிவிற்கு மாறியவர்களும் சங்கு, சக்கர முத்திரை இட்டனர் எனக் கள ஆய்வில் தெரிய வருகிறது. இதற்கு அவர்கள் நீர்நிலைகளில் மூழ்கிக் கடவுளை வழிபட்டபின் தரிசித்தபின் நேரடியாகக் குருமார் வீட்டிற்கு அல்லது மடத்திற்குச் செல்வர். அங்கு வலது தோள்பட்டையில் சக்கரமும் இடது தோள்பட்டையில் சங்கும் சூடேற்றப்பட்ட முத்திரை பதிக்கப்படும். அப்பொழுது மூலமந்திரம், ஓம்கார மந்திரம், பிரம்ம ரகசிய மந்திரம் போன்றன கற்றுத்தரப்படும். இம்முறையில் உபநயனம் பெறாதவர்கள் பிராமணர்களின் விழாக்கள், பண்டிகைகள் முதலியனவற்றில் கலந்துகொள்ள அனுமதியளிப்பதில்லை. உபநயனம் செய்யப்பட்டவர்கள் தயாரித்த உணவு எடுத்துக் கொள்ளும் வழக்கம் குருமார்களிடம் இருந்துள்ளது. இச் செயலைச் செய்யும் குருமார்கள் மிகச் சிலரே இருந்ததனால் இவர்கள் ஊர் ஊராகச் சுற்றி உபநயனம் செய்து வைப்பர்.

வைணவர்கள் அதிகம் நிறைந்த பகுதிகளில் இச்செயல் புரியும் குருமார்கள் மிகவும் போற்றி மதிக்கப்பட்டனர். மற்றச் சாதியரை வைணவர்களாக மாற்றம் செய்யவும் இம்முறையைப் பயன்படுத்தினர். பறையர் சாதியைச் சேர்ந்தவர்களைக் கூட இவர்கள் விட்டு வைக்கவில்லை. ஓமகுண்டம் வளர்க்கப்பட்டு அதில் வைணவப் பாடல்களை உச்சரித்து வைணவ உபநயனம் செய்வோர் அனைவருடைய தோள்களிலும் முத்திரைகள் இடப்பட்டன. பின்னர் முத்திரை பதிக்கப்பட்ட இடத்தில்

1 Thurston and Rangachari I:370

நாமக்கட்டித் துளைத் தடவி நெற்றியில் நாமத்தையும் தாசரி அல்லது வைணவ ஆண்டிகள் இடுவர்.

பறையர் சாதிகளுக்குப் பிராமணரல்லாத தாசரிகளே இம்முத்திரை இடுவர். மாதவா பிராமணர்கள் இம்முத்திரையிடுவதன் மூலம் தாங்கள் கடவுளின் அனுக்கிரகம் பெற்றவர் என நம்புகின்றனர்[1]. இதற்காக மைசூரில் வியாசரயா (Vayasaraya), சுமதந்தரா (Sumathandra), முலபகல் (Mulabagal) ஆகிய மடங்களும், உத்தராசா (Uttaraja) என்னும் மடமும் தெற்கு கன்னடா (இன்றைய மங்களூர் பகுதி) வில் இருந்தன.

உத்தராஜா மடத்தில் உபநயனம் செய்வோரில் ஆண்களுக்கும், சிறுவர்களுக்கும் ஐந்து இடங்களில் முத்திரை இடப்படும். தொப்புள், மேல்பகுதி வலது நெஞ்சு, வலது கையின் மேல்பகுதி ஆகிய இடங்களில் சக்கரமும், தோள்பட்டை, நெஞ்சு ஆகிய இடங்களில் சங்கும் இடப்படும். திருமணமான பெண்களுக்கு வலது முன் கையில், சக்கரமும், இடது முன்கையில் சங்கும் இடப்படும். மற்ற மடங்களில் வலது மேல் கையில் சக்கரமும், இடது மேல்கையில் சங்கு முத்திரை மட்டுமே இடப்படும். சமாட்சரணம் இதுவரை செய்த பாவத்தைப் போக்கும் என்னும் நம்பிக்கை இருப்பதனால் வைணவர்கள் தமது குருமார்களைச் சந்திக்கும் போதெல்லாம் இச்செயலைச் செய்துகொள்வர். ஆண், பெண் சிறுவர்களுக்குத் தொப்புளுக்கு மேல் வயிற்றுப் பகுதியிலும் இளம் வயதோருக்குக் குறைந்த சூடுள்ள முத்திரை வைக்கப் படுவதாகவும் தெரிகிறது. அதிக சூடாக முத்திரை இடாமல் இருக்க இவாகள் கைக்கூலி கொடுத்தனர்.

ஒருவரின் உடல் வாகைப் பொறுத்து முத்திரை இடும் நேரம் கூட்ட அல்லது குறைக்கப்படும். பெரும்பாலும் பருமனாயிருப்பவர்களுக்கு அதிகநேரம் சூடு வைக்கப் பட்டதாகத் தெரிகிறது. குருகாணிக்கை சரியாகச்

---

1 Thurston and Rangachari I:370-373

செலுத்தாதவர்களுக்கும் அதிகநேரம் சூடு வைக்க வேண்டும் என மடாதிபதிகள் கூறுவதுண்டு. ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் காணிக்கை அளவு குறைவு. மாதவா பிரிவினர் மூன்று மாதங்களுக்கு ஒருமுறை காணிக்கை செலுத்த வேண்டும். சூடுபட்ட இடம் ஒருசில நாட்களில் சரியாகிவிடும் தழும்பு சில நாட்களில் மறைந்துவிடுவதும் உண்டு. சிலருக்கு வாழ்நாள் முழுவதும் தங்கிவிடுவதுமுண்டு. மாதவா சாதியினர் தினமும் வெண்களிமண், சந்தனம் கலந்த கோபி சந்திரம் என்னும் பசையைக் கொண்டு சக்கரம், சங்கு, கதை, பத்மம், நாராயண முத்திரைகளை இட்டுக் கொள்வர். வங்காளத்தில் ராமானுஜப் பிரிவைச் சார்ந்த வைணவர்கள் தப்த முத்ரா (tapta-mudra) எனும் உபநயனத்தில் அஸ்டதாதுக்களான தங்கம், வெள்ளி, செம்பு, வெண்கலம், துத்தநாகம், ஈயம், இரும்பு, வெள்ளீயம் ஆகியவைகளால் ஆன உலோக முத்திரைகளில் சூடேற்றி வைத்துக் கொள்வர் என ரைஸ்லி என்பார் குறித்துள்ளார்[1].

தக்காணப் பகுதியில் இருந்த போடர் அல்லது போயர்கள் ஆஞ்சனேயர் கோயில்களுக்குச் சென்று இம்முத்திரைகளை இட்டுக்கொள்வர். இதனால் இறந்தபின் தாங்கள் சொர்க்கத்திற்குச் செல்வர் என்ற நம்பிக்கையை இவர்கள் கொண்டிருந்தனர். கோயிலுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட பெண் போடர்கள் இந்த முத்திரைகளை இட்டுக் கொள்வது வழக்கம்.

கர்நூலைச் சேர்ந்த பாசவி என்னும் நாட்டியப் பெண்களுக்கு நாமம் பொறித்த தாலி அணிவிப்பர். வலது கையில் பிச்சைப் பாத்திரமும் இடது கையில் கரும்பும் அளித்து சங்கு, சக்கர முத்திரை இடப்படும்[2].

தமிழகக் கோயில்களில் இருந்த தேவதாசிகளுக்கு இம்முத்திரைகளை இடுவது வழக்கமாயிருந்தது. இச்சங்கு முத்திரையைக் கேரளத்தைச் (மலபார்) சார்ந்த தண்டன்

---

[1] Hornell 1914:141

[2] Thurston and Rangachari II:136-137

(Tandan), தியன் சாதியைவிட உயர்வானவர்கள். தனது கைகளில் சங்கு முத்திரை குத்திக் கொள்ளும் வழக்கம் இருந்துள்ளது.

*சங்கநிதி*

நவநிதிகளுள் சங்கநிதியும் ஒன்றாகும்[1]. குபேரனுடைய இருநிதிகளாகச் சங்கநிதியும் பத்மநிதியும் குறிப்பிடப்படுகின்றன. எனவே, பெரும்பாலும் சங்கநிதி, பத்மநிதியுடன் இணைத்தே கூறப்பெறுகிறது. *மகாவம்சம்* (27:37, 87:31) எட்டுப் புனிதப் பொருட்களுடன் சங்கும் ஒன்றெனக் குறிப்பிடுவதோடு குபேரனுடைய நிதிகளுள் ஒன்றாகச் சங்கநிதியையும் குறிப்பிடுகிறது[2].

இருநிதிக்கிழவன் மகன் ஈரெட்டாண்டு அகவையான்

என கோவலன் தந்தையை இருநிதிக்கிழவன் என *சிலப்பதிகாரம்* (1:34) கூறுவதே தமிழகத்தில் சங்கநிதி பற்றிய முதல் குறிப்பாகும்[3]. பெருங்கதையில் வரும்

மதியுறழ் சங்கின் வாய்வயிற் போந்த
நிதியம் பெற்ற நீர்மையர் போல
(பெருங்கதை 3.3.67-68)
மதியுறழ் சங்கநிதியஞ் சொரிய (பெருங்கதை 5.6.29)

என்று நரவாணதத்தன் பிறந்த நிமித்தம் நிகழ்ந்தவற்றைக் கூறுமிடத்து சங்கநிதி சொரிந்தது என்னும் குறிப்பாலும் அக்காலங்களில் சங்கநிதியின் முக்கியத்துவத்தை அறியலாம்[4].

வடமொழி நூல் *அம்சுத்பேதாகமத்தில்* சங்கநிதி, பத்மநிதி ஆகியனவற்றின் உருவம் பற்றிய விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. இரு நிதிகளும் குட்டைக்கால்கள், பெரிய முகம் கொண்ட பூதகணங்களாகச் சித்திரிக்கப்படுகின்றன.

---

[1] கதிரைவேற்பிள்ளை 1918

[2] Adithiya 1981:40

[3] சாமிநாதையர் 1985:35

[4] சாமிநாதையர் 1968:846

சங்கநிதி சங்கையும், பத்மநிதி தாமரையையும் கையில் உயர்த்திப் பிடித்தபடி காட்சியளிப்பன[1].

சைவத்தொண்டர் திருநாவுக்கரசரின் தேவாரப்பாடல் ஒன்று சங்கநிதியின் உயர்வைக் குறிக்கிறது.

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லோம்[2]
(தேவாரம் 306.10:1)

குபேரனிடம் உள்ள இவ்விரு நிதிகள் அள்ளஅள்ளக் குறையாதவை எனக் கூறுவர்[3]. பின்னர் வந்த இலக்கியங்களிலும் சங்கநிதி பற்றிய குறிப்புகளைப் பரவலாகக் காணலாம். பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த *சீவகசிந்தாமணி* (139) மன்னனுடைய சங்கநிதி பற்றிய குறிப்பைத் தருகிறது[4]. *பாண்டிக்கோவை*(61:3) குபேரனை நிதியின் கிழவன் என்று குறிப்பிடுகிறது. மேலும் நிதியின் கிழவன், நிலமகள் கேள்வன் ஆகியோரைக் கவர்ந்த நெடுமாறன் எனப் பாண்டியனைப் புகழ்கிறது[5].

சங்கநிதியை வற்றாத பெரு நிதியாகக் கருதும் வழக்கம் தொடர்ந்து இருந்தமையை *நளவெண்பா* (306) பாடல் மூலம் அறியலாம்[6]. சங்கநிதியைப் பற்றிய குறிப்புகள் *செழியதரையன் பிரபந்தங்களிலும்*[7] சங்கநிதி பத்மநிதி பற்றிய குறிப்புகள் *கப்பற்கோவையிலும்* காணப்படுகின்றன[8].

---

[1] Gopinatharao 1993:536

[2] சதாசிவ செட்டியார் 1988:621

[3] சோமசுந்தரத் தம்பிரான் 1963:706

[4] சாமிநாதையர் 1986:76,250

[5] துரைசாமி 1985:27

[6] புலியூர் கேசிகன் 1978:134

[7] சண்முகம் பிள்ளை 1986:222-3

[8] சந்திரசேகரன் 1958:64

குபேரனுடைய இருநிதிகளுள் சங்கநிதியும் ஒன்றாகக் கருதப்பட்டதால் நாணய மதிப்புப் பெற்றிருக்கலாம். எனவே நாணயங்களிலும் முத்திரைகளிலும் சங்கு இடம் பெற்றது எனலாம். முத்திரை நாணயங்களிலும், பின்னர் வெளிவந்த நாணயங்களிலும் சங்கு இடம் பெறலானது. சங்கநிதியும் பத்மநிதியும் சமய முக்கியத்துவம் பெற்றதால் அவை கோயில் சிற்பங்களில் இடம்பெறலாயின. பல்லவர்கால கோயில்களிலிருந்து தற்காலக் கோயில்கள் வரை நுழை வாயில்கள் குபேரனுடைய சங்க நிதியும், பத்மநிதியும் செதுக்கப்பட்டோ அல்லது சுதை உருவத்துடனோ காணப்படுகின்றன (படம் 69).

வளமையைக் குறிக்கக் கோவில்களின் கோபுரவாசல்களில் சங்கநிதி, பத்மநிதியைச் சிற்பங்களில் சித்திரிப்பது பண்டைக் காலமுதலே இருந்து வருகிறது. காஞ்சிபுரம், சிதம்பரம், தஞ்சாவூர், மதுரை ஆகிய ஊர்களிலுள்ள கோயில்களில் இச்சிற்பங்கள் காணப் படுகின்றன.




படம் 69. தஞ்சாவூர் பெரிய கோயிலில் உள்ள சங்கநிதி, பத்மநிதி சிற்பங்கள்
(நன்றி ASI)

## மங்கலப்பொருளாகச் சங்கு

*பண்டைக் காலந்தொட்டு இறைவனோடு இணைத்துச் சங்கு சித்திரிக்கப்பட்டதால் ஒரு மங்கலப்பொருளாகக் கருதப்பட்டது. பதினாறு மங்கலப் பொருட்களில் சங்கையும் ஒன்றாகப் பெருங்கதை ப் பாடல் குறிக்கிறது*

அயின்முனை வாளும் வயிரத் தோட்டியும்
கொற்றக் குடையும் பொற்பூங் குடமும்
வலம்புரி வட்டமும் இலங்கொளிச் சங்கும்
வெண்கண் ணாடியுஞ் செஞ்சுடர் விளக்கும்
கவரியுங் கயலுஞ் தவிசுந் திருவும்
முரசும் படாகையு மாகிய லாழியும்
ஒண்வினைப் பொலிந்த வோமாலிகையும்
*(பெருங்கதை 2.5.26-32)*

*மங்கலமாகக் கருதப்பட்டதால் ஓவியங்களிலும், ஓலைகளிலும் சங்கு பொறிக்கப்பட்டது.* சக்கர வட்டமொடு சங்கு பல பொறித்த ஓலை *(பெருங்கதை 4.10.93)* என்னும் *வரியினால், ஓலையில் கடிதம் எழுதும் போது சங்கும் சக்கரமும் பொறிக்கும் வழக்கம் இருந்ததை அறியலாம்*[1].

## வெண்மைக்கு உவமை

*வெண்மைக்கு உவமையாக இலக்கியங்களில்* பல *இடங்களில் சங்கு சுட்டப்பெறுகிறது. ஐங்குறுநூறு (106:3) தலைவியைக் கடலில் தோன்றும் சங்கினிலும் அழகியவள் என வருணிக்கிறது*[2]. *வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒத்த வெள்ளிய நரைமுடியினரை* வலம்புரி புரையும் வானரை முடியினர் என்று *திருமுருகாற்றுப்படை (127) குறிக்கிறது*[3]. *கருமையான கடலில் சங்கைக் கண்டாற் போன்ற வெள்ளிய கழுத்தின் மயிரையுடைய குதிரைகளை*

---

[1] *சாமிநாதையர் 1968 :751*

[2] *துரைசாமிப்பிள்ளை 1978:290-291*

[3] *சாமிநாதையர் 1986:53*

வளைகண்டு அன்ன வால் உளைப் புரவி என்று *பெரும்பாணாற்றுப்படை (489)* குறிக்கிறது[1]. காந்தள் பூ வெண்மையான உடைந்த சங்கு வளையலைப் போல் காட்சியளித்ததை வளை உடைந்தன்ன வள் இதழ் காந்தள் என *மலைபடுகடாம் (519)* குறிக்கிறது.

கடற்கண்ணே வளரும் சங்கையொத்த நிறத்தையுடைய தலைவனைக் கடல் வளர் புரிவளை புரையுமேனி எனப் *புறநானூறு (56:3)* கூறுகிறது. திருமால் வெண்ணிறமுடையவன் என்பதை வரமாயுடை மலர் மார்பின் மையில் வால் வளைமேனி*(பரிபாடல் 1:3)* எனவும் பொலம்புரி யாடை வலம்புரி வண்ண *(பரிபாடல் 3: 88)* எனவும் அழைக்கப்படுவதைக் காணலாம். பலராமனின் வெண் நிறத்தைப் பால்நிற வெண்சங்கம் யார் நின்னின் மிக்க பழமையரே எனச் சங்கின் வெண்மை உவமையாகப் *பாண்டிக்கோவை (338:4)* கூறுகிறது. சுமார் 350 ஆண்டுகளுக்கு முற்பட்ட *கப்பற்கோவை* எனும் நூலில் பலதேவன் சங்கவண்ணன் எனக் குறிக்கப்பெறுகிறான். வெண்மையைச் சங்குக்கு உவமையாகக் குறிக்கப் பெறுவதை இதனில் காணலாம்[2].

சங்கின் வெண்மை நற்குடிக்கு உவமையாகச் சங்கினும் பாலினுஞ் சலமில் வாய்மை எனப் *பெருங்கதை (2.5.65)* குறிக்கிறது. சங்கு சுட்டாலும் வெண்மைதரும் *(முதுரை 4:3-4)* எனக் குலத்தின் உயர்வைக் குறிக்கச் சங்கின் வெண்மையைக் காட்டாக ஔவையார் கூறுகிறார். வெண்மையான அரிசிக்குச் சங்கின் வண்ணத்தை உவமையாகத் தளையுலை வெந்த வளை வாலரிசி எனப் *பெருங்கதை (1.40.133)* குறிக்கிறது. சங்கின் வெண்மை கனிமத் தாதுக்களின் நிறத்திற்கு உவமையாக *அர்த்த சாஸ்திரத்தில்* கூறப்பட்டுள்ளது[3].

---

[1] *சாமிநாதையர் 1986:259*

[2] *சந்திரசேகரன் 1958:41*

[3] Shamasastry 1967:86

## சங்க ரேகை

சங்கின் வடிவாகக் கையிலமைந்த இரேகை சங்கரேகை எனப்படும். இவ்வாறு அமைவது அவரது நற்காலத்தைக் குறிப்பதாக நம்பப்படுகிறது. *திருவாரூருலாவில்* சங்கரேகையிது சக்ரரேகையிது என்னும் அடி சங்கரேகையைச் சுட்டுகிறது[1]. மேலும் *சூளாமணியில்* குறிப்பிடப்படும் சங்கலேகையும் சக்கிரலேகையும் என்னும் வரிகள் இங்குச் சுட்டத்தகுந்தது[2].

திருவாலங்காட்டுச் செப்பேட்டில் லட்சுமி கடாட்சத்தால் முதலாம் ராஜராஜன் பிறக்கும் போதே சங்கு ரேகையும் சக்கர ரேகையுடனும் பிறந்தார் என மெய்க்கீர்த்தி புகழ்கிறது[3]. திருமாலின் உடைமையான சங்கு வடிவம் கொண்ட இரேகையை உயர்ந்ததெனக் கருதும் வழக்கமும் அது கடவுள்தன்மை உடையது எனக்கருதும் வழக்கமும் இடைக்காலத்திற்கு முன்னரே ஏற்பட்டது.

## ஆடற்கலை

ஆடற்கலை கடவுள்தன்மை உடையதாக கருதப்பட்டதால் சங்கு முத்திரை முக்கியத்துவம் பெற்று விளங்கியது. வலக்கைப் பெருவிரல் நுனி சுட்டு விரலினடியைத் தொடும் முத்திரை *சங்க முத்திரை* எனப்படும்[4].

இசைக்கலை, ஆடற்கலைகளுக்கு இலக்கணமாக விளங்குவது *பஞ்சமரபு* என்னும் நூல். இந்நூலில் அவிநயமரபு பற்றிக் குறிப்பிடுகையில் பொதுக்கை வகையில் ஒற்றைக் கையில் சிறுவிரலும் பெருவிரலும் சுட்டுவிரலின் அகம்

---

[1] *Tamil Lexicon* 1982:1224

[2] *Tamil Lexicon* 1982:1224

[3] *South Indian Inscription*, iii:205

[4] *Tamil Lexicon* 1982:1223

வளைந்து ஒழிந்த இரண்டும் நிமிர்ந்து இறைஞ்சி நிற்பது *வலம்புரி முத்திரையாகும்* என உள்ளது[1].

மேலும் பெருவிரல் நிமிர ஒழிந்த நான்கு விரலும் வளைந்து நிற்பது ஒற்றைக்கை முறைச் சங்கு எனப்படும்[2]. இரு கைகளில் காட்டப்பெறும் முத்திரையும் உண்டு[3] (படம் 70).



படம் 70. ஆடற்கலையில் காட்டப்பெறும் வலம்புரி முத்திரை,சங்கு முத்திரை, இரு கைகளால் காட்டப்பெறும் சங்கு முத்திரை (நன்றி– தெய்வசிகாமணிக் கவுண்டர் 1975, **Anita Ratnam 1979)**

### சங்கு, சக்கர உருவங்கள்

திருமாலின் ஐம்படைகளுள் முக்கியமான சங்கு, சக்கர உருவங்களைப் பொறித்தல் பண்டைக் காலத்திலிருந்து நிலவிவருகிறது என்பதை சக்கர வட்டமொடு சங்கு பல பொறித்த (ஓலை) என்னும் *பெருங்கதை* (4.10.93.) கூற்றினால் அறியலாம். வைணவர்கள் சங்கு, சக்கர உருவங்களைக் கல்வெட்டுகள், செப்பேடுகள் போன்றவற்றில் பொறித்தனர். திருமாலின் ஊர்வலங்களில் சங்கு, சக்கர உருவங்களைத் தூக்கிச் செல்லுதல் மரபானது. இடைக்காலத்தில் சங்கு, சக்கர தூக்கன் என்போர் இவ்வுருவங்களைத் தூக்கிச் சென்றனர்[4]. கோயில் கோபுரங்களில் சங்கு, சக்கர உருவங்கள் கல் அல்லது சுதையில் உருவாக்கப்பட்டன.

---

1 தெய்வசிகாமணிக் கவுண்டர் 1975:2.68,

2 தெய்வசிகாமணிக் கவுண்டர் 1975:2.69

3 தெய்வசிகாமணிக் கவுண்டர் 1975:2.69

4 *TDI* 5:92

9-13ஆம் நூற்றாண்டுகளில் மாமல்லபுரம் பகுதியில் வைணவ ஆதிக்கம் நிலவியது. அப்போது தர்மராஜன் மண்டபத்தில் மஹேந்திரன், நரசிம்மனால் உருவாக்கப்பட்ட சிவகணங்களின் பகுதிகள் உடைக்கப்பட்டுச் சங்கு, சக்கர முத்திரைகள் பொறிக்கப்பட்டன[1]. இதேபோன்று, மகாபலிபுரம் கோனேரி மண்டபத்திலும் சிவ கணங்கள் உடைக்கப்பெற்றுச் சங்கு, சக்கர முத்திரைகள் பொறிக்கப்பட்டுள்ளன[2]. வைணவர் ஆதிக்கம் செலுத்திய இடங்களில் இவ்வாறு சங்கு, சக்கர முத்திரைகள் பொறிக்கப்படுவது 9ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்கி இருத்தல் வேண்டும். கல்வெட்டுகளிலும் சங்கு, சக்கர முத்திரைகளைப் பயன்படுத்தியமை காஞ்சி



படம் 71. காஞ்சி வரதராஜப்பெருமாள் கோயிலில் உள்ள சங்கு, சக்கரம் உருவங்கள் பொறிக்கப் பட்ட கல்வெட்டு (நன்றி – **Raman, 1975**)

---

[1] Srinivasan 1964:125

[2] Srinivasan 1964:141

வரதராஜப்பெருமாள் கோயிலில் தாயார் திருவழி அருகில் காணப்படும். ஆதன் ஜீயரின் கி.பி1710ஆம் ஆண்டு கல்வெட்டைக் காட்டாகச் சுட்டலாம்[1]. இக்கல்வெட்டில் மேல்பகுதியில் நாமமும், இடதுபகுதியில் சக்கரமும், வலது பகுதியில் சங்கும் சித்திரிக்கப்பட்டுள்ளன (படம் 71).

## கல்வெட்டுகளில் சங்கு பற்றிய சான்றுகள்

சமயப் பண்பாட்டில் முக்கியத்துவம் பெற்று விளங்கிய சங்கு குறித்துக் கல்வெட்டுகளில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. கோயிலுக்கு நன்கொடை அளித்தோர் பற்றிய செய்திகளும், சங்கூதுவோர்க்கு அளிக்கப்பட்ட நிலக் கொடைகளைப் பற்றிய செய்திகளும் கல்வெட்டுகளில் அதிகம் காணப்படுகின்றன. சில கல்வெட்டுகளில் ஊர்த் தலைவர்கள் பல்லக்கில் செல்லும் போது சங்கு ஊதிக்கொள்ள மன்னன் அனுமதியளித்தது குறித்த செய்தி காணப்படுகிறது.

கல்வெட்டுகளில் முதன்முதலாகத் தஞ்சாவூர் மாவட்டம், திருச்சாத்துறையில் உள்ள ராஜகேசரி (கி.பி. 890)யின் 19ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் கோவிலுக்கு ஊதுவதற்கு இரண்டு சங்குகளை நக்கனாதித்தன் என்பான் அளித்ததாகக் கூறப்பட்டுள்ளதை நோக்கும்போது கோயில்களில் இரட்டைச்சங்கு ஒலிக்கும் நடைமுறை இருந்ததை அறியலாம்[2].

கி.பி.921ஆம் ஆண்டைச் சேர்ந்த பெரிய சின்னமனூர்ச் செப்பேட்டில் மன்னர் இரண்டாம் ராஜசிம்மனின் மெய்க்கீர்த்தியில் சங்கால் செய்த வெள்ளைநிற வளையலை அணிந்தோனாகச் சுட்டப் படுகிறான்[3].

---

[1] Raman 1975:85

[2] *SII* v:615

[3] *SII* iii:206

கும்பகோணம் கோனேரி ராஜபுரத்தைச் சேர்ந்த உத்தம சோழர் கல்வெட்டு கோயிலில் சங்கு ஊதுவார்க்கு நன்கொடையாக 4மா, 3காணி நிலம் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது[1].

திருமயம் தாலுகா சித்தூரிலுள்ள கோயில் ஒன்றில் முதலாம் இராஜராஜன் காலத்தில் கி.பி.(1007), காளம், சங்கு, திமிலை போன்ற இசைக்கருவிகள் வாசிப்போருக்கு 1½வேலி நிலம் கொடையாக வழங்கப்பட்டுள்ளது எனத் தெரியவருகிறது[2].

கி.பி.1014இல் இராஜராஜன் காலக் கல்வெட்டு ஒன்றில் தஞ்சாவூர் வணிகர் நாராயணன் காம்பை செட்டி என்பவர் பெரியகோவில் கணபதிக்கு நன்கொடையாக அளித்த இரத்தினங்களில் சங்கு வைத்து அடைத்த கற்கண்டு என்ற ஓர் ஆபரணமும் இடம்பெறுகிறது[3].

கி.பி.1014இல் இராஜராஜன் கல்வெட்டு கோயிலில் முத்திரைச்சங்கு ஒன்று ஊதும் நபருக்கு ஒரு பங்கு நிலம் வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகிறது[4].

சங்கூதுவோர்க்கு அரிகேசரிமங்கலத்தின் குளத்தில் மீன் பிடிப்பதனால் கிடைக்கும் வருமானத்தை (பாசிப்பற்று) ஊதியமாக வழங்கியதை, திருநெல்வேலி மாவட்டம் கங்கை கொண்டான், கைலாசபதி கோயில் கல்வெட்டு கூறுகிறது[5].

போளூர் அருகிலுள்ள திருமலையில் முதலாம் இராஜேந்திரனின் 12ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் (கி.பி.1024) மெய்க்கீர்த்தியில் கடற்சங்கு கொட்டன் மகிபாலனை வென்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது[6]. கல்வெட்டறிக்கையில்

---

[1] *South Indian Inscriptions* iii:151-159

[2] *Inscriptions of Pudukottai State* 185

[3] *South Indian Inscriptions SII* ii:89

[4] *South Indian Inscriptions SII* ii:66

[5] *South Indian Inscriptions SII* v:726

[6] *South Indian Inscriptions SII* i:67

சங்கு வந்து மோதும் கடற்கரையை உடைய மகிபாலனை என்று விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது தவறானதாகும். ஏனெனில் சங்குகள் வடக்கெல்லையான கோதாவரி முகத்துவாரம் வரையே ஓரளவிற்குக் கிடைக்கின்றன. சங்கு வந்து மோதும் மன்னார் வளைகுடாப்பகுதியைச் சார்ந்த கடற்கரையை அவ்வாறு குறித்தலே சரியானதாக இருந்திருக்கும். ஒரிசாவில் கடற்கரை ஓரமாக வசித்த மக்கள் சங்கு வளையல்களைக் கையில் அணிந்திருந்ததை தாமஸ் பௌரி என்பார் தாம் பார்த்ததாகக் கூறியிருப்பது இங்குச் சுட்டத்தகுந்தது[1].

நார்த்தாமலையிலுள்ள இரண்டாம் ராஜேந்திரன் கல்வெட்டு ஒன்று (கி.பி.1055-56) சங்கு பரமேஸ்வரி என்னும் தெய்வத்தின் சிலையை அங்கு பிரதிட்டை செய்யப் பட்டதாகத் தெரிவிக்கிறது[2].

திருமயம் வட்டம், காரையூர், சுந்தரராஜப் பெருமாள் கோயிலில் உள்ள கி.பி.1472ஆம் ஆண்டு விருபாக்ஷ மன்னர் காலக் கல்வெட்டில் அங்கிருந்த வாணாதிராயர் குடும்பம் ஊர்க்காவல்புரிய நன்கொடையாக வழங்கப்பட்ட பல உரிமைகளில் அவர்கள் வெளியே செல்ல (பல்லக்கு, தேர்) ஏறும்போதும், இறங்கும்போதும் ஏறச்சங்கு, இறங்கச்சங்கு ஊதிக்கொள்வதற்கு உரிமை வழங்கப்பட்டதிலிருந்து சங்கூதுதலுக்கு மேல்நிலைக் குடியினர் அளித்த முக்கியத்துவத்தை அறியலாம்[3].

விஜயநகரக் காலத்தில் கி.பி.1485ஆம் ஆண்டு காஞ்சிபுரம் கைக்கோளர்கள் பல்லக்கு வைத்துக்கொள்ளவும், சங்கூதிக் கொள்ளவும் அனுமதிக்கப்பட்டனர்[4]. இதே அனுமதி 1503-04 ஆண்டில் நற்சடங்குகளிலோ, ஈம

---

[1] Bowrey 1967:208-9

[2] *South Indian Inscriptions SII* xvii:389

[3] *Inscriptions of Pudukottai State* 715:27

[4] *ARE* 1921/473

ஊர்வலத்திலோ பயன்படுத்திக்கொள்ள அனுமதி வழங்கப் பட்டது[1].

**கல்வெட்டுகளில் சங்கு உருவங்கள்**

பண்டைக் காலங்களில் வணிகக் குழுக்கள் பல ஊர்களுக்குச் சென்று வணிகம் மேற்கொண்ட பொழுது சில செய்திகளைக் கல்வெட்டில் பொறித்தனர். அவை பெரும்பாலும் கல்வெட்டு காணப்பெறும் ஊரிலுள்ள கோயில்களுக்கு அளித்த கொடைகளைப் பற்றியதாகும். அக்கல்வெட்டுகளில் வணிகர்களின் படைக் கலன்களின் உருவங்களும் பொறிக்கப்பட்டிருக்கும். அப்படைக் கலன்களில் சங்கும் ஒன்றாகும். காட்டாக, திருச்சிராப்பள்ளி மாவட்டம், தொட்டியம் அருகே உள்ள நாகை நல்லூர் என்னும் ஊரில் கி.பி.10-11ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்று கண்டறியப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் பொறிக்கப்பட்ட பதினொரு படைக்கலன்களின் புடைப்புச் சிற்பங்களில் ஒன்றாகச் சங்கும் உள்ளது[2] (படம் 72). இது போன்றே திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள இடமலைப் பட்டிப்புதூர், சிங்களாந்தபுரம், ஈரோடு மாவட்டத்தில் உள்ள பழமங்கலம், கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள எல்காம்வலசு ஆகிய இடங்களில் காணப்படும் வணிகக் கல்வெட்டுகளில் சங்கு உருவம் பொறிக்கப்பட்டுள்ளது[3]. மேலும் இலங்கையில் புதுமுத்தாவ என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட வணிகக் கல்வெட்டிலும் சங்கு பிற படைக்கலன்களுடன் பொறிக்கப்பட்டுள்ளது[4].

---

[1] Mahalingam 1975:23

[2] ஸ்ரீதரன் 2002:1-2

[3] Rajagopal 2002:103-4

[4] சுப்பராயலு மற்றும் சண்முகம் 1998:37



படம் 72. நாகைநல்லூர் வணிகக் கல்வெட்டில் பொறிக்கப் பட்ட படைக்கலன்களில் சங்கு உருவம் (நன்றி – **Rajagopal, 2002)**



படம் 73. வட இந்தியாவில் சங்கு வடிவம் கொண்ட எழுத்துக்கள் (நன்றி – **Mukherjee, 1990)**

### சங்கு வடிவ எழுத்துகள்

சங்கு வடிவம் கொண்ட பல எழுத்துப் பொறிப்புகள் இந்தியாவில் காணப்படுகின்றன[1]. இவற்றின் உருவ அமைப்புகள், சங்கு மற்றும் சிப்பிகளின் வடிவங்களை ஒத்துள்ளன. சங்கைப் போன்ற வளைந்த தோற்றத்துடன் அழகூட்டப்பட்டதாக இவை தோற்றமளிக்கும் (படம் 73). எனவே இந்த எழுத்துக்களைச் *சங்க லிபி* என வழங்குவர். பெரும்பாலும் ஒரு சில சொற்களே இவ்வெழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்புவரை சங்கு வடிவப் பொறிப்புகள் எழுத்துக்களாக நோக்கப்படவில்லை. தற்பொழுது கல்கத்தா தேசிய அருங்காட்சியகத்தில் காணப்பெறும் குப்தர் காலத்தைச் சேர்ந்த கல் குதிரையின் மேல் காணப்பட்ட பொறிப்புகளை முதன் முதலில் பி.என். முகர்ஜி என்பார் படித்தார். காஷ்மீர் முதல் கர்நாடகம் வரையிலுள்ள பகுதிகளில் சங்கு வடிவ எழுத்துப்பொறிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன[2].

### எழுத்துப்பொறித்த சங்குகள்

சமயத்தலங்களுக்கு நன்கொடையாக அளிக்கப்படும் சங்குகளில் நன்கொடை வழங்கியவரின் பெயர் பொறிக்கும் வழக்கம் நீண்ட நாட்களாக இருந்துள்ளது. ஆந்திர மாநிலம் ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் வம்சதாரா நதிக்கரையில் சாலிகுண்டம் எனும் இடத்தில் நடைபெற்ற அகழாய்வில் கி.பி.1-4ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஐந்து சங்குகள் கிடைத்துள்ளன. இவற்றில் இரு சங்குகள் பிராமி எழுத்து பொறிக்கப்பட்டவை. இங்கு மேலும் உடைந்த சங்கு வளையல்கள், மணிகள் ஆகியன கிடைத்துள்ளன. இச்சங்குகளில் ஊதும் துளையுடன் அதற்குக் கீழே கயிற்றால் தொங்கவிடும்படியாக ஒருதுளையும் இடப்பட்டுள்ளது[3] (படம் 74).

---

[1] Mukherjee 1990:21-44

[2] Amina Kar 1990:73-82

[3] *IAR* 1953-54:11-12



படம் 74. ஆந்திராவில் உள்ள சாலிகுண்டம் என்னுமிடத்தில் அகழாய்வில் கிடைத்த எழுத்துப் பொறித்த சங்குகள் (கி.பி. 1–4 நூற்றாண்டு) (நன்றி – *IAR*, 1953-54)

முதல் சங்கு

கோ$_{3}$வலவைச பிகா$_{3}$ச த$_{3}$னம்ஸ லிப் த$_{3}$க சிதியாஸ

சாலிபேதகா (சாலிகுண்டம்)வில் உள்ள புத்த சைத்யத்திற்கு கோவலயபிகா$_{3}$ என்பவரால் அளிக்கப்பட்டது எனும் பொருளுடையது.

இரண்டாம் சங்கு

க$_{3}$ஹபதி அபு$_{3}$தி$_{4}$ஸ ப$_{4}$ரிய ச$_{2}$த$_{3}$கய த$_{3}$ன$_{3}$ ஸலிபடகா

து$_{2}$(ஸ) கதாகே

அபூதி என்பவரின் மனைவி சதகா என்பவரால் துபகடக எனும் (சமய) நிறுவனத்ததிற்கு அளிக்கப்பட்டதைக் குறிக்கிறது.

ஆந்திர மாநிலத்திலுள்ள நாகார்ஜுனகொண்டா என்னுமிடத்தில் நடைபெற்ற அகழாய்வில் அஸ்டபூ₃ஜாஸ்வாமி கோயிலருகே இரண்டு எழுத்து பொறித்த சங்குகள் கிடைத்துள்ளன.

முதல் சங்கு

பு₃க₃வதோ அத₂பூ₃ஸமிஸா

இவ்வெழுத்துப் பொறிப்பின் முன் மேடை போன்ற அமைப்பில் கம்பில் நடப்பட்ட சக்கரமும் மற்றொரு கம்பில் அங்குசமும் கத்தியும் சேர்ந்து பொறிக்கப்பட்டுள்ளன[1].

இரண்டாம் சங்கு

த₃ச்சி நாகநஸர

இச்சங்குகளைத் தொங்கவிடும்படியாகக் கயிற்றுத் துளை ஒன்று சங்கின் அடியில் காணப்படுகிறது.

தமிழ் எழுத்துக்கள்

கி.பி. 10-11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்து பொறித்த இரு சங்குகள் தஞ்சாவூர் மாவட்டம் திருவிடைவாசல் என்னும் இடத்தில் கிடைத்துள்ளன[2].

முதல் சங்கு

சிலை .... மாகோன் கொடுத்த சங்கு பொன் கெட்டியது

வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ள இச்சங்கிற்கு மாகோன் என்பான் சங்கிற்குப் பொன் கட்டிக் கொடுத்தான் என அறியலாம். பொன் கட்டுதல் என்பது சங்கின் இரு முனைகளிலும் அழகிய வேலைப்பாடுகள் பொன்னால் செய்யப்படுவது எனக் கொள்ளலாம்.

---

1 *IAR* 1958-59:8

2 வசந்த கல்யாணி 1994:93-94

**இரண்டாம் சங்கு**

ஸ்வஸ்திஶ்ரீ .. வெளாந்துட பிட
ரன (அடியா)ள் ஆதிச்சியார்
மகள் உமையன்
ணய் இட்ட சங்
கு அங்கா
டி தாழன்

கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது இக்கல்வெட்டு. ஆதிச்சியார் மகள் உமையன்னை கொடுத்துள்ள சங்கைப்பற்றி இது குறிப்பதாகும். வேலூர் மாவட்டம் கழிஞ்சூர் என்னும் ஊரிலுள்ள சொர்ணபுரீசுவரர் கோயிலில் புதையலாகச் செப்புத் திருமேனிகளுடன் கிடைத்த சங்குகளில் எழுத்து பொறிக்கப்பட்ட சங்கு ஒன்றுள்ளது. அதில்

ஶ்ரீ கெஞ்சூர் இறையா நீசுர
முடையார்க்கு நகருடையாந்
செய்ய கோவந் இட்ட சங்கு

என்ற குறிப்பு காணப்படுகிறது

கி.பி. 10-11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இக்கல்வெட்டு இக்கோயிலுக்குச் செய்யகோவன் என்பான் சங்கு இட்டான் என்பதைக் குறிப்பதாகும்[1]. மேலும் கடலூர் மாவட்டம் திருவதிகை சிவன் கோயிலில் 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்தமைதியில் திருச்சிராப்பள்ளி உடையார் என்னும் எழுத்துப் பொறித்த சங்கு கிடைத்துள்ளதிலிருந்து திருச்சிராப்பள்ளி உடையார் என்பார் அக்கோயிலுக்குச் சங்கு கொடுத்தமை விளங்குகிறது[2].

---

[1] வசந்த கல்யாணி 1994:94

[2] வசந்த கல்யாணி 1994:95

## நாணயங்கள், முத்திரைகளில் சங்கு உருவங்கள்

தமிழகத்திலும் வட இந்தியாவிலும் சங்க காலத்தில் சமய வாழ்வில் முக்கியத்துவம் பெற்று விளங்கியதால் மன்னர்கள் தாங்கள் வெளியிடும் நாணயங்களிலும் முத்திரைகளிலும் சங்கு உருவத்தைப் பொறித்தனர். கி.மு.3ஆம் நூற்றாண்டுக்குப்பின் பாண்டியர் பெருவழுதி நாணயங்கள் ஒன்றில் ஆமை, யானை, எருது, மலை முகடுகள் ஆகியவற்றுடன் சங்குப் பொறிப்பும் காணப்படுகிறது[1]. மேலும் சங்கு உருவத்துடன் பிற உருவங்கள் பொறிக்கப்பட்ட சங்க காலப் பாண்டியர் நாணயங்கள் பல நாணயவியல் ஆய்வாளர்களால் கண்டெடுக்கப்பட்டுள்ளன(படம் 75). பாண்டியர் மட்டுமல்லாது சங்க காலச் சோழர்களும் சங்கின் உருவம் பொறித்த காசுகளை வெளியிட்டுள்ளனர். சங்ககாலச் சோழர் வெளியிட்ட நாணயம் ஒன்று கருருக்கு அருகே அமராவதி ஆற்றுப்பகுதியில் கிடைத்துள்ளது (படம் 76)[2]. மேலும் அங்கு கிடைத்த மௌரியர் நாணயத்தின் அமைப்புடன் கூடிய சங்க காலத்தைச் சார்ந்த வெள்ளிக்காசில் சங்கு உருவம் பொறிக்கப்பட்டுள்ளது [3].

மேலும் கி.பி.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்த முத்திரை நாணயம் ஒன்றில் சங்கு தெளிவாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இந்நாணயம் மன்னரால் வெளியிடப்பட்டதா? அல்லது அக்காலத்தில் பிறரால் தயாரிக்கப்பட்டதா? என்பது அறியப்படவில்லை. எனினும் இந்நாணயம் முக்கியத்துவம் வாய்ந்ததென குப்தா, மற்றும் ஹட்கேர் ஆகியோர் குறிப்பிடுகின்றர்[4] (படம் 77). சமண மதத்தை ஆதரித்த ஆந்திர மன்னர் வெளியிட்ட காசில் சமணக்கோயிலின் உருவமும் 22ஆம் தீர்த்தங்கரரின் சின்னமான சங்கும் பிறவும்

---

[1] கிருஷ்ணமூர்த்தி, 1987:45

[2] நாணயவியல் ஆய்வாளர் ஆறுமுக சீதாராமன் இந்நாணயங்களைப் பற்றிய செய்திகளையும், நிழற்படங்களையும் கொடுத்து உதவினார்.

[3] Mitchner 1998:67

[4] Gupta and Hardker 1985:28



படம் 75. சங்க காலப் பாண்டியர் நாணயங்களில் சங்கு உருவம்
(நன்றி – ஆறுமுக சீதாராமன்)



படம் 76 கரூருக்கு அருகே அமராவதி ஆற்றுப்பகுதியில் கிடைத்த சங்க காலச் சோழர் நாணயங்களில் சங்கு உருவம்
(நன்றி – ஆறுமுக சீதாராமன்)



படம் 77. முத்திரை நாணயத்தில் சங்கு உருவம்
(நன்றி – **Gupta and Hardker 1985**)



படம் 78. ஆந்திர மன்னர் வெளியிட்டக் காசில் சங்கு உருவம்
(நன்றி – **Elliot 1970**)



படம் 79. விஷ்ணுகுண்டின் கால நாணயத்தில் சங்கு உருவம்
(நன்றி – **Mitchner 1998**)









படம் 80. பல்லவர் கால நாணயத்தில் சங்குகள்
(நன்றி– ஆறுமுக சீதாராமன்)

பொறிக்கப்பட்ட நாணயம் ஆந்திரப்பிரதேசத்தில் கிடைத்துள்ளது[1] (படம் 78).

இவர்கட்குப் பின் வந்த விஷ்ணுகுண்டின், பல்லவர் கால நாணயங்களில் சங்குப் பொறிப்பு முக்கியத்துவம் பெற்று விளங்கியது. விஷ்ணுகுண்டின் மன்னர்களின் கால நாணயங்களின் ஒருபுறத்தில் பெரிய அளவிலான சங்கும் அதன் இருபுறமும் ஒவ்வொரு குத்துவிளக்கும் பொறிக்கப் பட்டுள்ளது[2]. சில நாணயங்களில் ஒரு கும்பத்தின் இருபுறங்களிலும் சங்குகள் இருப்பது [illegible]ாலும் காட்டப் பெறுகிறது[3](படம் 79). பல்லவர்களின் [illegible]களிலும் சங்குப் பொறிப்பு முக்கியத்துவம் பெற்று விளங்கியது. ஒருபுறத்தில் பெரிய அளவிலான சங்கும் மறுபு[illegible]ல் பெரும்பாலான நாணயங்களில் காணப்படும் காளை, பிறை, சங்கு, பாம்பு முதலிய உருவங்களும் சித்திரிக்கப்பட்டுள்ளன[4]. 'மாமல்ல' என்ற பெயர் பொறித்த முதலாம் நரசிம்மனின் காசுகளிலும் சங்கு உருவம் பொறிக்கப் பட்டுள்ளது(படம் 80). சங்குருவம் பொறிக்கப்படாமல் அதற்குப் பதிலாகச் சக்கரம், தாமரை மற்றும் பிற சின்னங்களைப் பொறிக்கும் வழக்கம் இருந்தமையால் திருமாலின் ஐம்படைக் கருவிகளில் முக்கியம் வாய்ந்தவற்றை நாணயத்தில் பொறித்ததாகக் கொள்ளலாம். சோழர் கால நாணயங்களில் ஒரு பக்கத்தில் சங்கு சிறிய அளவில் பொறிக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான செப்புக் காசுகளில் ஒருவர் சங்கு ஊதுவதுபோல் சித்தரிக்கப்படுகிறது (படம் 81). ஈழப்பகுதியில் சங்கு அதிகம் கிடைப்பதாலும், சங்கு பொறிக்கப்பட்ட ஈழக்காசுகளில் 'லங்கவீர' என்னும் எழுத்துக்கள் காணப்படுவதாலும் தன் வெற்றியின் நினைவாக முதலாம் இராஜராஜன் அதை வெளியிட்டு இருக்கலாம் என ஆறுமுக சீதாராமன் கருதுகிறார்[5]. இவர்தம் கருத்து ஆராயத்தக்கதாகும். சோழர்களின் சமகாலத்திய

---

[1] Elliot 1970:126

[2] Chattopadhyaya 1977:pl.13

[3] ஆறுமுக சீதாராமன், 2002d

[4] ஆறுமுக சீதாராமன், 2002d

[5] ஆறுமுக சீதாராமன் 1989:22





படம் 81. சோழர் கால நாணயத்தில் சங்கு, சங்கு ஊதுவது போன்ற சித்திரிப்பு (நன்றி– ஆறுமுக சீதாராமன்)



படம் 82. மதுரை நாயக்கர் நாணயத்தில் சங்கு (நன்றி– ஆறுமுக சீதாராமன்)



படம் 83. தஞ்சாவூர் நாயக்கர் நாணயத்தில் சங்கு (நன்றி– ஆறுமுக சீதாராமன்)

மன்னர்களான சாளுக்கியர்களும் தங்களது நாணயங்களில் சங்கு உருவத்தைப் பொறித்தனர்[1].

இடைக்காலப் பாண்டியர் நாணயங்களிலும் சங்கு, சக்கரம் போன்ற திருமாலின் உடைமைகள் பொறிக்கப்பட்டன[2]. காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 1223 முதல் 1250 முடிய ஆட்சி செய்த தெலுங்குச் சோழர் முதலாம் திக்கன் என்னும் திருக்காளத்தி தேவன் கண்டகோபாலன் என்பான் வெளியிட்டச் சங்கின் உருவம் பொதித்த நாணயம் ஒன்று கிடைத்துள்ளது[3]. இம்மன்னன் வைணவப்பற்று மிக்கவனாக இருந்தமையால் தனது நாணயங்களில் சங்கைப்பொறித்து வெளியிட்டிருக்கலாம் என ஆறுமுக சீதாராமன் கருதுகிறார்.

விஜயநகரப் பேரரசர் காலத்திலும், மதுரை, தஞ்சாவூர் நாயக்கர் கால நாணயங்களில் சங்கு சக்கரம் ஆகியன பொறிக்கும் வழக்கம் இருந்துள்ளது (படங்கள் 82, 83). சங்ககாலத்திலேயே சங்கு உருவங்களை நாணயங்களில் பொறிக்கும் வழக்கம் இருந்துள்ளது. ஆனால் விஜயநகரப் பேரரசிற்கு பிறகே திருமாலின் முக்கியத்துவம் அதிகரித்து நாணயங்களில் சங்கும் சக்கரமும் இடம்பெறத் தொடங்கின என்று சுரேஷ் குறிப்பிடுகிறார்[4]. விஜயநகரப்பேரரசிற்கு முன்னரே சங்கு சக்கரங்கள் தமிழகத்தில் பிற மன்னர்களால் வெளியிடப்பட்டுள்ளதால் இக்கூற்று மீளாய்விற்குரியது. 15-16ஆம் நூற்றாண்டுகளில் இராமநாதபுரம், கொங்கு ஆகிய பகுதிகளில் இருந்த சிற்றரசுகள் விஜயநகரப் பேரரசின் நாணயங்களால் கவரப்பட்டு அவர்தம் நாணயங்களிலும் கருடன், சங்கு, சக்கரம் ஆகியனவற்றைப் பொறித்தனர்[5]. திருவிதாங்கூர் மன்னர்களின் குலச் சின்னமாக சங்கு இருந்ததோடல்லாமல் நாணயத்திலும் இடம்பெற்று விளங்கியது (படம் 84). ஆங்கிலேயர்கள் காலத்தில் நாணயங்களில் சங்கு பொறிக்கும் வழக்கம் முடிவுக்கு வந்தது.

---

[1] Elliot 1970:54,56

[2] Elliot 1970:126

[3] ஆறுமுக சீதாராமன் 2003b:115

[4] Suresh 1993:273-278

[5] Nagasamy 1981:164



படம் 8.4. திருவிதாங்கூர் சமஸ்தான நாணயங்களில் சங்கு
(நன்றி– ஆறுமுக சீதாராமன்)

சங்க காலத்திலிருந்து தமிழகத்திலும் வட இந்தியாவிலும் சமய, சமூகத்தில் சங்கு முக்கியத்துவம் பெற்றிருந்ததால் நாணயங்களிலும் இடம் பெற்றது. தொடர்ந்து தமிழகப் பகுதியை ஆண்ட விஷ்ணுகுண்டின், பல்லவர், சோழர், பாண்டியர், விஜயநகரப் பேரரசர்கள், தஞ்சை, மதுரை நாயக்கர்கள் பெரும்பாலான நாணயங்களில், சங்கு உருவம் பொறிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை மேற்கண்ட சான்றுகள் வாயிலாக அறிமுடிகிறது.

உத்திரப்பிரதேசத்திலுள்ள ஹஸ்தினாபுரத்தில் நிகழ்ந்த அகழாய்வில் கி.மு.200-300 கி.பி ஆண்டுகளின் மண்ணடுக்கில் இருபுறமும் சங்கு உருவம் பொறிக்கப்பட்ட எழுத்துக்களுடன் கூடிய முத்திரை ஒன்று கிடைத்துள்ளது[1] (படம் 85). இடைக்காலத்தில் வட இந்தியப் பகுதியில் இருந்த

---

[1] *Ancient India* 10-11:101

குறுநில மன்னர்களின் முத்திரைகளிலும், நாணயங்களிலும் சங்கு உருவம் பொறிக்கப்பட்டது[1]. வியட்நாமில் உள்ள கியன் ஜியாங் (Kien Giang) அருங்காட்சியகத்தில் இடைக்காலத்தைச் சார்ந்த கார்னீலியன் வகை மணிக்கல்லாலான சங்கு முத்திரைகள் இரண்டு உள்ளன (படம் 86). இது தமிழகத்திலிருந்து வணிகர்களால் எடுத்துச் செல்லப்பட்டிருக்கலாம்[2].



படம் 85. ஹஸ்தினாபுரம் அகழாய்வில் கிடைத்த சுடுமண் முத்திரையில் சங்கு (நன்றி– *AI* vol.10-11)



படம் 86. வியட்நாம், கியன் ஜியாங் அருங்காட்சியகத்திலுள்ள தென்னிந்தியாவைச் சேர்ந்த சங்கு உருவம் உள்ள முத்திரைகள் (நன்றி சுப்பராயலு)

---

[1] Thapliyal 1972

[2] கல்வெட்டறிஞர், பேராசிரியர் எ.சுப்பராயலு அவர்கள் சங்கு முத்திரையின் மசிப்படத்தையும், செய்தியையும் அளித்துதவினார்.

## நாணயமாகச் சங்கு

பண்டைக் காலம் தொட்டு சங்கு, பிற கடற்சோழிகள் போன்றவை நாணயமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. இத்தகைய வழக்கத்தை 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிவரை திபெத்திய பழங்குடியினரிடம் காணமுடிகிறது[1]. *அர்த்தசாஸ்திரத்தில்* கருவூலங்களில் சேர்க்கவேண்டிய பொருளாகச் சங்கும் இருந்தது என்பதும் சுட்டத்தக்கது[2]. அஸ்ஸாமில் உள்ள நாகர் இனக்குழுவினர் கி.பி.1850 வரை சங்கினை நாணயமாகப் பயன்படுத்தினர். மலைப்பகுதிகளில் கிடைக்காத பொருளாகவும் அரிதாகக் கிடைக்கும் பொருளாகவும் சங்கு இருந்த காரணத்தால் நாணய மதிப்பு ஏற்பட்டிருக்கலாம். அடிமைகளையும், கால் நடைகளையும் சங்கின் மதிப்பைக் கொண்டு விலை வைத்தனர். ஒரு ஆண் அடிமை ஒரு பசு மற்றும் மூன்று சங்குகளுக்கும் ஒரு பெண் அடிமை மூன்று பசுக்களும் மற்றும் நான்கு அல்லது ஐந்து சங்குகளுக்கும் விற்கப்பட்டனர்[3]. ஒரு பசு பத்து சங்குகளுக்கும், ஒரு பன்றி இரண்டு சங்குகளுக்கும், ஆடு, காட்டுக்கோழி ஆகியவை ஒரு பை உப்பிற்கும் விற்கப்பட்டன[4]. அக்காலங்களில் நாகர் இன மக்களின் வீடுகளில் சங்குகள், மணி, பசு, பன்றி ஆகியவை நிறைந்திருக்கும். சங்குக்ள் தமிழகப் பகுதியிலிருந்து பெறப்பட்டு வங்காளத்தில் சிறு மணிகளாக வெட்டப்பட்டு நாணயமாகப் பயன்படுத்தப்படுத்தப்பட்டன[5]. 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிவரை காகிதம் மற்றும் உலோக நாணயங்கள் ஆங்கிலேயர்களால் அறிமுகப்படுத்தபட்டதால் சங்குகள் நாகர் இனத்தோரிடம் நாணய மதிப்பிழந்தன. இருப்பினும் அரசியல் முக்கியத்துவம் கருதி சங்கு, சங்காலான பொருட்களுக்கு நாணய மதிப்பளித்து

---

[1] Hornell 1914:165

[2] Samasastry 1967:77

[3] Hutton 1926:223

[4] Hornell 1914

[5] Maclean_1893:187

ஆங்கிலேயர்கள் அவர்களிடம் சில காலம் வரியாக வசூலித்தனர்.

குலச்சின்னம்

பண்டைக் காலத்திலிருந்து சங்கு குலச்சின்னமாக விளங்கியுள்ளது. பிறிதொரு இனத்தில் திருமணம் புரியும் எண்ணம் கொண்ட இனவழிக் கிளைக்குழுக் (exogamous sept) கள் தமது குலமரபுச்சின்னங்களைக் கொண்டிருத்தல் பழந்தமிழரின் (திராவிடர்) குல மரபிலிருந்து பிறந்திருத்தல் வேண்டும்[1]. இக்குலமரபுச் சின்னங்களை ஆரியத் தெய்வங்களை வணங்காத, சாதியை அறியாத, அவர்கள் வாழும் இடத்தைச் சுற்றி வழங்கிவரும் மொழியினும் வேறுபட்ட மொழியைக் கொண்ட சந்தால் (Santals), ஒரான் (Oraons) இன மக்களிடம் காணமுடிகிறது[2]. கிழக்கிந்திய மலைப்பகுதியில் வாழும் மலையின மக்கள் திராவிடர் இனத்தைச் சார்ந்தோராகக் கருதப்படுகின்றனர்[3]. சந்தால் இன மக்களின் ஒரு கிளைக்குழுவின் பெயர் சங்க் (Sankh) ஆகும். இக்கிளைக்குழுவினர் சங்கை அறுப்பதோ, சுடுவதோ, பயன்படுத்துவதோ அணிவதோ இல்லை.

மிகப்பழமை வாய்ந்த ஆனால் சாதியத்தாக்கம் உள்ளதுமான இந்து மரபைப் போற்றுவோர் குலமரபுச் சின்னங்களைக் கொண்டிருந்தனர். வங்கத்தில் குருமிக் குலத்தோரும், தென்னிந்தியாவில் குறவர்களும் தமது கிளைக்குழுவில் சங்கைக் குலமரபுச் சின்னமாகக் கொண்டுள்ளனர். குருமியினத்தில் சங்கவார் என்னும் கிளைக் குழுவிற்கும், குறவர் குலத்தில் சுமுத்ரதாலா என்னும் கிளைக்குழுவிற்கும் சங்கு குலமரபுச் சின்னமாகும். இவர்கள் எக்காரியத்திற்கும் சங்கைப் பயன்படுத்த மாட்டார்கள்[4].

---

[1] Hornell 1914:149

[2] Hornell 1914:149

[3] Singh 1987:63

[4] Hornell 1914:150

தென்னிந்தியப் பகுதியில் குறவர்களைவிட உயர்ந்த சாதியாகக் கருதப்பட்ட கலிஞ்சர்களில் சங்கோ (Sankho) என்னும் கிளைக்குழுவும், குறும்பர்களில் சங்கு (Sankhu) என்னும் கிளைக்குழுவும் உள்ளன[1].

விசாகப்பட்டினம் பகுதியில் கொப்பலா (Koppala) என்னும் வேலமா (Velamas) குடிகளின் கிளைக் குழுவிற்கும் சங்கு குலமரபுச் சின்னமாக இருந்து வந்துள்ளது. தற்பொழுது திருமண உறவுகள் குலமரபின்படி நடப்பதில்லை[2].

பணிச்சவர்களின் குலக்குறியாகவும் சங்கும் இருந்தது. கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளிப் பகுதியில் சங்கூதும் தொழிலைப் பறையர்கள் செய்து வந்தனர். கோயமுத்தூர்ப் பகுதியில் சங்கூதும் தொழில் புரிவோர் சங்குப் பறையர் என்றே அழைக்கப் பெற்றனர்[3].

*இடங்கையர் வலங்கையர் வரலாறு* என்னும் நூலில், சங்கறு கவறைகள் எனும் பிரிவு வலங்கையினராகவும், சங்கு கட்டும் மாறமங் கொல்லியரும், கறையாளரும் இடங்கைப் பிரிவைச் சார்ந்தவராகவும் கூறப்பட்டுள்ளன[4]. ஆயினும் இப்பிரிவினற்குக் குலக்குறியாகச்(totem) சங்குத் தரப் படவில்லை. வலங்கைப் பிரிவைச் சார்ந்த காராளற்கு - சித்திர மேழியும், குவளைத் தண்டும், சங்கும், கவின்னியும், சாமரமும், வைகானஸனுக்கு சங்கும் துளசிமாலையும் அடையாளமாகக் காட்டப்பெறுகின்றன[5].

மேலைச்சாளுக்கியர்களின் குலச் சின்னங்களில் ஒன்றாகவும் சங்கு விளங்கியது[6]. திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் சின்னமாகவும் சங்கு விளங்கியது[1].

---

[1] Hornell 1914:150

[2] Thurston and Rangachari 1987 VII:370

[3] Thurston and Rengachari 1987 I:81

[4] சௌந்தரபாண்டியன் *1995:97,101, 102*

[5] சௌந்தரபாண்டியன் *1995:103, 105*

[6] Maclean 1893:187

## இரட்டைச்சங்கு

வலங்கையர் நூல்களில் அனைத்திலும் "சம்பரனை வெட்டி ரெட்டச்சங்குதனைப் பறித்தோன்" என்று குறிக்கப் பட்டுள்ளது[2]. சம்பரன், தீவு ஒன்றில் இருந்ததாகவும், அவனிடம் இரு வலம்புரிச் சங்குகள் இருந்தன எனவும், வலங்கையர் அதைப் பறித்து வந்தனர் எனவும், அதனால் அவர்களது ஈமச்சடங்கில் இரட்டைச்சங்கு ஊதும் பழக்கம் தொடங்கிற்று என்றும் சொல்லப்படுகிறது[3]. வலங்கையர் வரலாற்றில் கரிகாலன் வலங்கைப் பிரிவினரைத் துணைக்கு அழைத்துச் சம்பரன் என்னும் அசுரனை வென்று அவனது இரட்டைச் சங்குகளைப் பறித்து வந்ததாகக் கூறப்படுகிறது. இவ்வரலாறு மீளாய்வுக்கு உட்பட்டதாகும். எனினும் இரட்டைச் சங்கு என்னும் வழக்கு இவ்விலக்கியங்கள் இயற்றப்பட்ட காலத்தில் வெற்றியின் சின்னமாகவோ அல்லது சமூகத்தில் முக்கிய அமைவாகவோ கருதப்பட்டு வந்துள்ளது. மேலும் சோழர் கல்வெட்டுகளில் கோயில்களுக்கு இரண்டு சங்குகளைத் தானமாக அளித்த செய்தி காணப்படுகிறது[4]. இவ்விரண்டிற்கும் தொடர்புள்ளதா என்பது குறித்து மேலும் ஆய்வு செய்தல் வேண்டும்.

## வளை நெகிழ்தல்

பண்டைய காலத்தில் பெண்கள் சங்காலான வளையல்கள் அணிந்தனர். வளையல்களின் முக்கியத்துவம் கருதி *ஐங்குறுநூற்றில்* பத்துப் பாடல்கள் வளைப்பத்து என்னும் தலைப்பில் இடம் பெறுகிறது. தலைவனின் பிரிவு தாளாமல் தலைவியின் உடல் இளைத்து கை வளையல்கள் கழன்று போவது போன்ற குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன (பின்னிணைப்பு-1). எடுத்துக்காட்டாக,

---

1 Maclean 1893:187

2 தசரதன் 1996:48

3 தசரதன் 1996:50

4 *South Indian Inscriptions* iii:25, v:238.

*ஐங்குறுநூறு* (20:5) தலைவி தலைவனை நினைத்து வருந்தியதால் கைவளை நெகிழ்ந்ததாகக் குறிப்பிடுகிறது[1].

தலைவனின் வருகையை அறிந்த தலைவியின் உடல் வளமுற்று வளைகள் கையை நெருக்கியதாகவும் சில பாடல்கள் உள்ளன. தலைவன் முன்னர்ப் பிரிந்ததனால் நெகிழ்ந்து நீங்கிய என் வளைகள் அவன் வரவால் முன் கைகட்கிடந்து வீங்கின எனத் தோழியிடம் தலைவி கூறும் கூற்றை *ஐங்குறுநூற்று* (165:4)ப் பாடலில் காணலாம்.

*பதினெண்கீழ்க்கணக்கு* நூல்களிலும் வளை நெகிழ்தல் பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன. பிரிந்து சென்ற தலைவன் வருகையை எதிர்நோக்கி இளைத்ததால் கையிலணிந்த வரிவளையல் கழன்று போகும்படியாகத் தலைவி வருந்துவதாகக் *கார் நாற்பது* (9) கூறுகின்றது[2].

இடைக்கால இலக்கியங்களிலும் தலைவனின் பிரிவைக் குறிக்க வளை நெகிழ்தல் சுட்டப்பெறுகிறது.

வெள்வளை நெகிழவு மெம்முள்ளாத
கள்வனைக் காணாதிவ் ஆரெனக் கிளந்தன்று
(புறப்பொருள் வெண்பாமாலை, 333)

எங்கள் கோல் வளைக ணில்லா
விபரீத மிகுந்த வாறே
(நந்திக்கலம்பகம் 39:4)

அங்கோல் வளைக்கை யிளையாரி ழப்ப
அரசாள்வதென்ன வகையோ
(நந்திக்கலம்பகம் 42:2)

கழலும் வரிவளை காக்க வந்தின்று கனலும்
(பாண்டிக்கோவை 307:3)

---

1 துரைசாமிப்பிள்ளை 1978:64

2 வேங்கடசாமி நாட்டார் 1971:12

என்னும் அடிகளாலும் தலைவி தோழியிடம் மன்னர் வருவதை அறிவிக்கும் திருகிய சங்கின் ஒலி வந்த காரணத்தினால் என்னுடைய அழகிய வேலைப்பாடுகள் செய்த வளையல்கள் நெகிழாமல் நின்றுவிட்டன என்ற *முத்தொள்ளாயிரப்*(46) பாடலாலும் அறிய இயலுகிறது[1].

பாலடை

குழந்தைகளுக்குப் பாலூட்டவும், மருந்தூட்டவும் பாலடை எனப்படும் சிறிய சங்குகள் ப்யன்படுத்தப்படுகின்றன. இப்பாலடைச் சங்குகள் சரியாகச் சுடுநீரில் கழுவப்படாமல் இருந்தால் குழந்தைகளுக்கு நோய்வரும் அபாயம் உண்டு என ஹார்னல் கருதினார்[2]. 1947க்கு முன்னர்ப் பெரும்பாலும் யாழ்ப்பாணக் கழிமுகப்பகுதியில் மண்ணடியில் புதைந்த சிறிய சங்குகளைக் கொண்டு பாலடைகள் செய்யப்பட்டன. தற்பொழுது இந்தியப் பகுதியில் கிடைக்கும் சங்குகளால் இவை செய்யப்படுகின்றன. பிற உலோகங்களில் செய்யப்படும் பால் வார்க்கும் புதிய பொருளும் சங்கு என்று அழைக்கப்படுவதால் முதன் முதலில் பாலடைகள் சங்கினால் செய்யப்பட்டன என அறியலாம். சங்கு மற்றும் பிற உலோகங்கலால் செய்யப்பெற்ற பாலடை குறித்து குழந்தைகளுக்கான தாலாட்டுப் பாடல்களில் அதிக அளவில் குறிப்பிடப்படுகிறது (பின்னிணைப்பு-2). சிந்து சமவெளி நாகரிக காலத்தில் இவ்வடிவமைப்புள்ள சங்குகள் கிடைத்துள்ளன[3] (படம் 87). ஆனால் அவை பாலடைகளாகப் பயன்படுத்தப்பட்டனவா என்பதை அறுதியிட்டுக்கூற இயலவில்லை.

---

1 சிதம்பரநாத முதலியார் 1947:120

2 Hornell 1914:165

3 Kenoyar 1984:59



படம் 87. சிந்து சமவெளி அகழாய்வில் கிடைத்த பாலடை
(நன்றி: டோக்கியோ தேசிய அருங்காட்சியகம் 2000)

பாலடையைச் செய்ய சங்கின் உள்புறத்திருகுச்சுருள், சுருளச்சு ஆகியன உடைத்து எடுக்கப்படும். கால்வாய் போன்ற சங்கின் கீழமைப்பு மேலும் ஆழப்படுத்தப்படும். சங்கின் மேற்பகுதி சற்றே வழுவழுப்பாக்கப்பட்டுச் சுருள் வடிவமும், நட்சத்திர வடிவு உருவங்களும் செதுக்கப்படும். நாகரிக மாற்றத்தால் தற்பொழுது குழந்தைகளுக்குப் பால்புட்டிகளைக் கொண்டு பாலூட்டப்படுவதால் சங்கிலோ அல்லது பிற உலோகங்களிலோ செய்த பாலடைகளின் தேவை குறைந்துள்ளது. இருப்பினும் கிராமப் புறங்களில் பாலடைச் சங்கில் குழந்தைகளுக்குப் பால் வார்ப்பது தற்பொழுதும் வழக்கத்தில் உள்ளது.

## கோயில், வீடுகளின் அடிக்கட்டுமானத்தில் வைத்தல்

கோயில்கள், புதிய வீடுகள் கட்டப்படும் பொழுது கட்டுமானத்திற்காக வெட்டப்படும் குழிகளில் சங்குகளைப் புதைத்து அதன்மேல் கட்டடம் எழுப்பப்படும் வழக்கம் இன்றும் இருந்து வருகிறது. சங்கு வளமையைக் கொணர்ந்து தீய சக்திகளிடமிருந்து காக்கவுதவும் என்ற நம்பிக்கையைக் கொண்டது. 1734இல் வீலர் என்பார் எழுதிய சென்னை

வரலாற்று நூலில் அங்கு 'வீடுகட்டும் பொழுது முதலில் சங்கைப் புதைத்து அதன்மேல் கட்டத்தொடங்கியதாகக் குறிப்பிடுகின்றார்[1].

ரோமன் கத்தோலிக்கப் பரதவர்களும் சங்குடன் பிற பொருட்களைப் புதைத்து அதன்மேல் வீடு கட்டத் தொடங்கியதாக ஹார்னல் குறிப்பிடுகிறார்[2]. தூத்துக்குடியில் இருந்த பறையர் சாதியைச் சேர்ந்த ஒருவர் தனது வீடு கட்டப்பட்டபோது அஸ்திவாரக்குழியில் ஒரு சங்கு, பவளப்பாறை ஆகியவற்றைச் சுண்ணாம்புடன் சேர்த்து வைத்து அதன்மேல் கட்டடம் எழுப்பியதாகக் குறிப்பிடுகிறார். தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய ஐந்து உலோகங்களைச் சங்கினுள் வைத்து மஞ்சள், சந்தனக் கரைசலை அதன்மேல் தெளித்து நறுமண மலர்களையும் வைத்து முதல் கல்லை அதன்மேல் வைப்பார்கள். இம்முறையில் கட்டப்பட்ட கட்டடத்தில் வசிப்போர் வளமையுடன் இருப்பர் என்ற நம்பிக்கையும் உண்டு. ஒரு வீட்டில் வசிப்பவர் வளமையுடன் இல்லையென்றால் சங்குஸ்தாபனம் எனப்படும் வழிபாடு நடத்தப்படும். நீர் நிரப்பிய சங்குகள் 45 நாட்கள் மந்திரித்து வளமை குறைந்த வீடுகளில் சுவரின் கீழ் புதைக்கப்படும்[3].

இராமநாதபுரம், தூத்துக்குடியைச் சார்ந்த பரதவர்கள் வீட்டின் நுழைவறையின் கீழ் சங்கு புதைத்து வைக்கும் வழக்கம் இருந்து வருகிறது. தற்பொழுது பரதவர்கள் மட்டுமின்றி ஏனைய பிரிவினரும் நுழைவாயில் கதவருகில் வெளியில் தெரியுமளவிற்குச் சிறிய சங்கைப் புதைக்கும் வழக்கம் உள்ளது. வீட்டில் வசிப்பவர்கள் வெளியில் செல்லும்போது அச்சங்கைத் தாண்டிச் சென்றால் நன்மை விளையும் என்ற நம்பிக்கையும் இன்றுவரை உள்ளது.

---

[1] Yule and Burnell 1996:186

[2] Hornell 1914:143

[3] *Tamil Lexicon* 1982:1230

## கண்ணேறு மூடநம்பிக்கை (evil-eye superstitions)

### கால்நடைகளைக் காத்தல்

கண்ணேறு அல்லது கண்படுதல் என்பது தீங்கை விளைவிக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே பண்டைக்காலம் தொட்டுத் தமிழகத்தில் இருந்துவருகிறது. புதிய வீடுகள் கட்டப்பெறும் பொழுதும், உயர்வகைக் கால்நடைகளைப் பெற்றிருக்கும் போதும், கண்ணேறு நிகழ்ந்தால் தீங்கு விளைவிக்கும் என்ற நம்பிக்கை உள்ளது. இக்கண்ணேறிலிருந்து விடுபடச் சங்கு பயன்படுத்தப் படுகிறது. காட்டாக, எருதுகள் கண்ணேறிலிருந்து விடுபட நெற்றியில் சிறிய சங்கு ஒன்றைக் கட்டும் வழக்கம் தமிழகத்தில் இன்றுமுள்ளது. கிராமங்களில் உள்ளோர் அதன் காரணம் அறிந்தோ அறியாமலோ சங்கு மற்றும் கடற் சோழிகளை அணிகலனாகக் கால்நடைகளுக்குக் கட்டும் வழக்கம் உள்ளது. இச்சங்குகளின் பின்பகுதியில் துளையிடப்பட்டு சங்கின் வாய்ப்பகுதி வழியாகக் கயிறு செலுத்தப்பட்டு கழுத்திலோ நெற்றியிலோ கட்டப் பட்டிருக்கும். சங்கின் மேல் பகுதி சுருள் வடிவம், அல்லது திருகுச்சுருள் வடிவங்கள் செலுத்தப்பட்டிருக்கும்[1]. சென்னை நகர்ப்பகுதியில் பசு, எருமைகளின் கழுத்தில் சங்கிலியிலோ, கயிற்றிலோ சங்கொன்று மாலையாகத் தொங்கவிடப் பட்டிருக்கும். சங்குக் கட்டுவதால் பிறர் கண்படுவது தவிர்க்கப்படுவதுடன் நீண்ட நாள் பசுக்கள் பால் கறக்கும் என்ற நம்பிக்கையும் உள்ளது. கிராமங்களில் தேங்காய்சிரட்டை சங்கின் இருபுறங்களில் சேர்த்துத் தொங்கவிடப்பட்டிருக்கும். குதிரைகளுக்கும் சங்குடன் கூடிய கழுத்தணி பயன்படுத்தப் படுகிறது. தற்பொழுது இப்பழக்கம் அருகி வருகின்றது. கறவை ஆடுகளின் கழுத்திலும் குழந்தைகளுக்குப் பாலூட்டப் பயன்படும் சங்குப் போன்ற அளவுடைய சங்குகள் கழுத்தில் கட்டப்பட்டன. கடந்த

[1] Hornell 1914:152

நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆந்திர மாநிலப் பகுதியிலும் சங்கு கட்டும் முறை இருந்துள்ளது.

ஆந்திர மாநிலம், குண்டக்கல் என்னும் ஊரிலுள்ள தொடர்வண்டிச் சந்திப்பின் அருகில் ஒரு குழியில் 10 சிறிய சங்குகள் கொண்ட மாலை கிடைத்தது. இரும்புக் காலத்தைச் சார்ந்த இது கால்நடையின் கழுத்தை அலங்கரித்திருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

மலபார் பகுதியில் பசுவின் கொம்பில் நன்கு தெரிகிறாற்போல் சங்கைக் கட்டும் வழக்கம் உள்ளது. சங்கு கட்டவில்லையெனில் பசு பால் கொடுப்பதை நிறுத்திவிடும் என்னும் நம்பிக்கை அப்பகுதி மக்களிடையே உள்ளது. உயர்வகை ஆடுகளுக்கும் சங்கு தொங்கவிடும் வழக்கம் இருந்துள்ளது.

ஐம்படைத்தாலி

குழந்தைகளுக்கு ஆபத்து ஏற்படாவண்ணம் தண்டு, வில், வாள், சங்கு, சக்கரம் ஆகிய ஐந்து உருவங்களையும் கோர்த்த மாலையை அணிவது தமிழகத்தில் வழக்கமாயிருந்தது. அது ஐம்படைத்தாலி என வழங்கப்பட்டது. சங்க காலத்தில் வீரத்தைக் குறிக்கப் புலிப்பல் தாலியை அணிந்தனர். குழந்தைகளுக்கு ஐம்படைத் தாலியை அணிவித்தனர்[1]. இளம்பருவம் கழிந்தபின் ஐம்படைத்தாலியைக் கழற்றிவிடுவர். ஐம்படைத் தாலியைக் கழற்றுமுன்னரே பாண்டியன் நெடுஞ்செழியன் தமது பகைவர்களான சேர, சோழ மன்னர்களை வென்றான் என்ற குறிப்பு இலக்கியத்தில் சுட்டப்பெறுகிறது.

தாலி களைந்து மிலனே (*புறநானூறு 77:7*)

என்னும் குறிப்பால் ஐம்படைத்தாலி பண்டைக் காலத்திலிருந்தே அணியப்பட்டது என்பதை அறிய இயலுகிறது.

---

[1] Jayadev 1960:44

சிந்துப சின்னீர் ஐம்படை நனைப்ப (*மணிமேகலை 3:137-8*)
அமளி துஞ்சும் ஐம்படைத்தாலி (*மணிமேகலை 7:56-7*)

என *மணிமேகலை* ஐம்படைத்தாலியைச் சுட்டுகிறது. ஐம்படைத்தாலியைக் குழந்தைக்கு அணியும் வழக்கம் தொடர்ந்து இருந்து வந்துள்ளது. முதலாம் குலோத்துங்கனைக் கிருஷ்ணனின் மறுபிறப்பாகக் கருதி அவன் பிறந்தபோது திருமாலின் ஐந்து கருவிகளான தண்டு, வில், வாள், சங்கு, சக்கரம் போன்றவற்றைக் கோர்த்து ஐம்படைதாலியை அணிந்தனர் எனக் *கலிங்கத்துப் பரணியில்*(240) குறிப்பிடப் படுவதிலிருந்து ஐம்படைத் தாலியின் பண்பாட்டு முக்கியத்துவத்தை அறியலாம்.

*பெரியாழ்வார் திருமொழி* (1:4-5), *கம்பராமாயணம்* (நாடு.58), பெரும்பற்றப்புலியூர் நம்பியின் *திருவிளையாடற் புராணம்* (39:25) ஆகியவற்றிலும் ஐம்படைத்தாலியைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஐம்படைகளும் திருமாலின் உடைமையாகக் கருதப்படுவதால் தீயசக்திகளிடம் இருந்து குழந்தைகளைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்தது எனலாம்.

சுமார் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்ட, தங்கத்தாலான ஐம்படைத்தாலி ஒன்று தஞ்சாவூர்ப் பகுதியில் கண்டெடுக்கப் பட்டுள்ளது[1]. இந்த ஐம்படைத்தாலியின் பின்புறம் வழுவழுப்பாகவும் முன்புறம் திருமாலின் ஐம்படைச் சின்னங்களும் புடைப்புருவங்களாகக் காணப் படுகின்றன (படம் 88). குழந்தைகளுக்கு ஐந்தாம் மாதத்தில் இதைக் கழுத்தில் கட்டும் வழக்கம் இருந்தது. மேற்காணும் இலக்கியச் சான்றுகளுக்கு வலுவூட்டுவதாக இந்த ஐம்படைத்தாலி அமைகிறது.

---

[1] ஆறுமுக சீதாராமன் 2003 a:114



படம் 88. ஆயிரமாண்டு பழைய சங்குருவம் பொறித்த ஐம்படைத்தாலி (நன்றி– ஆறுமுக சீதாராமன்)

**பிற காரணங்கள்**

முக்குவர் எனப்படும் சாதியிடையே சிறுவர்கள் சங்கு மாலை அணியும் வழக்கம் இருந்து வருகிறது. மொகயன், தியன், மலபார் ஆகிய பகுதியைச் சார்ந்த செருமான், திருவனந்தபுரம் பகுதியைச் சார்ந்த மலைவேடன் ஆகிய சாதியினரும் சங்கைத் தாயத்து போல அணிகின்றனர்.

சங்கு மோதிரங்களைத் தமிழகக் கேரளப்பகுதியில் கண்ணேறுதலால் ஏற்படும் தீமையைத் தவிர்க்கத் தாயத்தாகப் பயன்படுத்தினர். இவ்வழக்கம் தற்பொழுது மிகவும் அருகி வருகின்றது. கணைநோயிலிருந்து (rickets) குழந்தைகளைக் காப்பாற்றவும் சங்கு மோதிரங்களை அணிவித்து வந்துள்ளனர். மேலை மருத்துவத்தின் தாக்கத்தால் சங்கு மோதிரங்களை அணியும் பழக்கம் மிக அருகி வருகின்றது. குழந்தை பிறந்து இரண்டாம் மாதத்திலிருந்து மூன்று வயதை அடையும் வரை சங்கு மோதிரமோ, அல்லது சங்குத்துண்டோ கையில் கட்டி வைத்தால் நோய் மற்றும் தீய எண்ணங்களின் ஆளுமை நீங்கும் என நம்பிக்கை இருந்து வருகிறது.

முகத்தில் ஏற்படும் பருக்களிலிருந்து விடுதலைபெறச் சங்குத்துண்டுகளைத் தாயத்துபோல் கட்டிக்கொள்ளும்

வழக்கம் செட்டி, கொல்லர், தச்சர், தட்டான், நாயுடு, இடையர், சாஹுவர் ஆகிய சாதிகளிடையே இருந்துள்ளது. கீழ்சாதி எனக் கருதப்பட்ட பள்ளர், வலையர், பறையர் ஆகியோரும் சங்காலான தாயத்தைப் பயன்படுத்தியுள்ளனர். "சங்குப்பூ" வையும் குழந்தைகளின் கையில் கட்டி வைக்கும் வழக்கம் தூத்துக்குடி கத்தோலிக்கர்களிடையே இருந்து வருகிறது.

சங்குமாலை, சங்குபாசி ஆகியவற்றையும் சங்குத் துண்டங்களால் செய்யப்பட்ட கழுத்தணிகலன்களையும் அழகிற்காகவும் தீயசக்திகளிடமிருந்து காப்பாற்றவும் பயன்படுத்தினர். 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சங்கு மோதிரம் தாயத்தாகவும், தீய சக்திகளிடமிருந்து காப்பாற்றவும் தமிழகம் முழுவதும் பிராமணர் தவிர்ந்த பிறரால் பயன்படுத்தப்பட்டது.

## பழமொழிகளில் சங்கு

பழமொழிகளில் அதிக அளவில் குறிப்பிடப்படும் பொருட்களில் சங்கும் ஒன்று. இப்பழமொழிகளில் சங்கொலியின் பண்பைக்குறிக்கும் கருத்துக்களும், அதன் நிற உயர்வைக் குறித்த கருத்துக்களும் காணப்படுகின்றன. ஒரு பழமொழி சங்கு வணிகத்தின் நிலையற்ற தன்மையைக் குறிக்கிறது. சங்கிலிருந்து வார்க்கப்பட்ட நீரின் உயர்ந்த தன்மையை ஒரு பழமொழி சுட்டுகிறது. அதிக எண்ணிக்கையிலான பழமொழிகள் ஜென்சன்[1], லாசரஸ்[2], ஜகந்நாதன்[3] ஆகியோரால் தொகுக்கப்பட்டன.

(Jensen 1993)

1. செவிடன் காதிலே சங்கு ஊதினால் போல் *(எண், 526)*
2. உடைந்த (ஓட்டைச்) சங்கில் ஊதை (காற்று) பறியுமா? *(1690)*
3. ஊதுகிற சங்கு ஊதினால் விடிகிறபொழுது விடிகிறதா *(2559)*

---

[1] Jensen 1993 Reprint.

[2] Lazarus 1991 Reprint

[3] ஜகந்நாதன் 1989

4. சும்மா கிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி *(3097)*
5. ஆண்டி மகன் ஆண்டியானால் நேரமறிந்து சங்கு ஊதுவான் *(2065)*
6. சங்கு சூத்தாகிறது ஆண்டி வாயாகிறது *(3085)*

(Lazarus 1991)

7. சங்கனும் புங்கனும் சந்நியாசிக்கு உதவியா *(4414)*
8. சங்கிலே வார்த்தால் தீர்த்தம் சட்டியிலே வார்த்தால் தண்ணீர் *(4415)*
9. சங்கு ஆயிரம் கொண்டு வங்காளம் போனால் பொன்பளம் வந்தாலும் வந்தது. மண்பாளம் வந்தாலும் வந்தது. *(4416)*
10. சங்கு ஆயிரம் கொண்டு காசிக்குப் போனாலும் தன்பாவம் தன்னோடே *(4417)*
11. சங்கு உடைந்தது மண் கரைந்தது *(4418)*
12. சங்கு சூத்தும் ஆண்டி வாயும் *(4419)*
13. சங்கை சுட்டாலும் தன் வெண்மை குன்றாது *(4420)*

*(ஜகந்நாதன் 1989)*

14. ஆண்டி சங்கை ஏன் ஊதுகிறான் *(2130)*
15. சங்கு ஊதாமல் தாலி கட்டுவதுண்டா *(10171)*
16. சங்கு ஊதி பொழுது விடியுமா *(10172)*
17. சங்கூதிப் பண்டாரம் அங்கூதி இங்கு வராதே இங்கு ஊதி அங்கே போ *(10176)*
18. சங்கைச் சுட்டாலும் மங்குமா நிறம் *(10177)*

# 7. சங்கொலி

சங்கு ஊதுவதால் ஏற்படும் ஒலியைச் சங்கநாதம் என்றும் சங்கத்தொனி என்றும் அழைத்தனர்[1]. இசைக் கருவியாகப் பயன்படுத்தப்படும் சங்கு ஏறக்குறைய 8 அங்குலம் நீளமும் 4 அங்குலம் விட்டமும் உடையதாக இருக்கும். ஒலியெழுப்பும் சங்கைச் செய்ய சங்கின் உச்சிப்பகுதி அறுத்தெடுக்கப்பட்டு துளை உருவாக்கப்படும். துளையில் வேகமாகக் காற்றைச் செலுத்தினால் ஒலி உருவாகும். சங்கு ஊதும் முறை *ஊதுதல்* (dhamana>blowing) அல்லது *அடைத்தல்* (purana>filling) எனக் கூறப்படுகிறது[2]. சங்கின் வாய்ப்பகுதியை வாய்க்குப் பக்கவாட்டில் வைத்தும், நேரடியாக வைத்தும், சங்கின் துளைப்பகுதியில் குழாய் ஒன்றைச்(mouthpiece) செருகியும் மூன்று நிலைகளில் ஊதுவர் (படம் 89,90). சங்கு ஊதுதல் என்பது சங்கு சாதித்தல் எனவும் வழங்கப்பெற்றது[3].

### சங்கொலி உருவாகும் விதம்

சங்கிலிருந்து ஓசை எவ்வாறு உருவாகிறது என்பதற்கான ஆய்வு இதுவரை முழுமையாகச் செய்யப் படவில்லை. திருகுச்சுருள் வழியாகச் சங்கு நாதம் வருவதால் திருகுச்சுருளின் நீளத்தை அளப்பதற்கு இலகுவான கணிப்புமுறை ஏதும் இதுவரை வகுக்க இயலவில்லை. திருகுச்சுருளின் மையப்பகுதியிலிருந்து அதன் துளை சீராக இல்லாததால் துளை நீளத்தை ஓடு ஒட்டிய பகுதியில் அளவிடுவதா? அல்லது திருகுச்சுருளை ஒட்டிய பகுதிகளை அளவிடுவதா? என்பதற்கான விளக்கங்கள் இதுவரை பெறப்படவில்லை. மேலைநாட்டில் சங்கின் திருகுச்சுருளைச் சீரான தூம்புக்குழாயாக கருத்தில் கொண்டு ஆய்வுகள்

---

1 *Tamil Lexicon* 1982:1221

2 Krishnamurthy 1977:188

3 கதிரைவேற்பிள்ளை 1918



படம் 89. ஊதுகுழல் பொருத்தப் பட்ட சங்கு
(நன்றி– **Hornell 1914**)



படம் 90. சங்கு ஊதுதல்
(நன்றி– **Deva 1977**)

நிகழ்த்தப்பட்டன. நியூகினியா (New Guinea) பகுதியில் வாழும் மக்கள் பயன்படுத்தும் சங்கைப் போன்று ஒலி எழுப்பும் மூங்கிலாலான இசைக்கருவியை ஆய்வு செய்து, சங்கில் எழும் (காற்றலை) ஒலி திருகுச்சுருளின் பக்கங்களில் மோதி முன்னோக்கித் தள்ளப்பட்டுத் தொடர்ந்து வெளியேறுவதால் உருவாக்கப்படுகிறது என ஆய்வுகள் தெரிவிக்கின்றன[1].

**சங்கொலித்தலின் பழமை**

இந்தியாவில் கிட்டும் வெண்சங்கு மட்டுமன்றி இதே இனத்தைச்சேர்ந்த அளவில் பெரியதான சங்கு வகைகளிலிலும் ஒலி எழுப்ப இயலும். மற்ற வகைச் சங்குகள் உலகின் பிற இடங்களில் ஒலிக்கருவியாக மிகப்பழமையான காலத்திலிருந்தே பயன்பட்டு வந்துள்ளன.

ஐரோப்பாவில் செம்புக் காலத்தைச் சார்ந்த, பெக்காமெகைர் (Bekasmegyer II) என்னுமிடத்தில் வாழ்ந்த பாதென்-பேசல் பண்பாட்டினர் (Baden-Pecel-Culture) பயன்படுத்திய, சரோநியா நொடிஃபெரா (*Charonia nodifera.* Lamarck) என்னும் வகையில் செய்த ஊதுசங்கு அகழாய்வில் கிடைத்துள்ளது. ஹங்கேரியில் கெஸ்ட்லே (Kesthely)க்கு அருகில் பலாட்டன் (Balaton) ஏரிப்பகுதியில் ஃபெனபுஸ்டா (Fenepusta) என்னுமிடத்தில் அமைந்த பண்டைய வழிபாட்டுத் தலத்திலும் கிடைத்த சங்குப் பொருட்கள் ஐரோப்பாவின் உட்பகுதியில் வெண்கலக் காலத்தில் சங்கு ஒலிக்கருவியாகப் பயன்படுத்தப்பட்டதைக் காட்டுகின்றன[2].

ஓஸியானியா (Oceania) தீவுப் பகுதியில் சடங்குகளில் சங்கு பயன் படுத்தப்படும் பொருளாக இருக்கிறது. புதிய ஹெப்ரைட்ஸில் (New Hebrides) உள்ள மால்குலா (Malekula) வில் சரோனியா ட்ரைடானிஸ் (Charonia tritonis (L)) என்னும் வகைச் சங்குகளில் ஊதும்போது சங்கின் ஒலியின் ஏற்ற இறக்கங்களை ஏற்படுத்தி

[1] Montagu 1980:274

[2] Montagu 1980:273

மற்றவர்களுக்கு சில செய்திகளைத் தெரிவிப்பது வழக்கமாயுள்ளது[1]. இதே முறையில் சாலமன் தீவுகளில் காசிஸ் கொர்னுடா (Cassis cornuta) என்னும் வகைச் சங்குகளிலும், ஃபிஜி (Fiji) தீவுகளில் பர்ஸா ப்யூபோ (Bursabubo) என்னும் சங்கிலும் விரல் அளவிற்கு பின்புறத்தில் துளையிடப்பட்டு இருவகை ஒலியை எழுப்பும் விதமாக அமைக்கப்பட்டுள்ளது[2].

ஆஸிரியா, மெக்சிகோ, பெரு, சீனா ஆகிய பழங்கால நாகரிகப் பகுதிகளில் முதன்முதலில் தோன்றிய ஒலிக்கருவி சங்காகும்[3]. தென் அமெரிக்காவில் தெற்கு, மத்தியப் பகுதிகளில் சங்கு வாத்தியங்களின் பயன்பாடு குடியேற்றத்திற்கு முன்பே பயன்படுத்தப்பட்டு உள்ளது[4]. கிரீட்டிலுள்ள (Crete) முன்-மினோான் (Pre-Minoan), மினோான் (Minon) பண்பாடுகளில் முக்கியமாக இவை கடற்செலவில் ஒலி எழுப்பும் கருவியாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனைச் சிற்பங்களிலும், தொல்லியல் ஆய்வுகளில் கிடைக்கும் சங்குப் பொருட்களினால் அறியலாம்[5]. சுடுமண், கல் ஆகியவற்றில் சங்குகள் செய்து ஒலியெழுப்பும் வழக்கம் இவர்களிடம் இருந்துள்ளது. பெரிய சிப்பிகள் வளரும் சூழ்நிலையற்ற கடல் பகுதியைக் கொண்ட வட அமெரிக்கக் கடல் பகுதிகள் (பசிபிக், அட்லாண்டிக்), தெற்கு, கிழை மத்திய தரைக்கடல் பகுதிகள், வடக்கு ஆப்ரிக்கா, மத்திய கிழக்கு நாட்டுப் பகுதிகள் ஆகிய இடங்களைத் தவிர மற்ற இடங்களில் கிடைக்கும் கடல் சிப்பிகள் ஒலியெழுப்பும் கருவியாகப் பயன்படுத்தப்பட்டது. வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே இவை பயன்படுத்தப் பட்டதற்கான சான்றுகள் பல உள்ளன[6]. மொஹஞ்சதாரோ,

---

[1] Montagu 1980:274

[2] Montagu 1980:279

[3] Deva 1977:59

[4] Montagu 1980:279

[5] Montagu 1980:274

[6] Montagu 1980:276&7

ஹரப்பாவில் சங்குப் பொருட்கள் கிடைத்தாலும் அவை ஒலிக்கப் பயன்படுத்தப் பட்டவையா என அறுதியிட்டுக் கூற இயலவில்லை[1]. சங்கொலித்தல் வேத காலத்திலும் அதற்குப் பிந்தைய காலங்களிலும் வழக்கத்தில் இருந்துள்ளது. தமிழகத்தில் சங்கொலித்தலுக்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன (பின்னிணைப்பு 1).

இசைக் கருவியாகச் சங்கு

தமிழகத்தில் இசைக் கருவியாகச் சங்கு பயன்படுத்தப் பட்டதற்கான சான்றுகள் இலக்கியங்களிலும் அகழாய்வுகளிலும் மிகுதியாகக் கிடைக்கின்றன. சங்க காலத்தில் பல்லியம் எனப்படுவது பலவகை இசைக் கருவிகளைக் குறிக்கும். இதற்குச் சான்றுகளாக *அகநானூறு* (51:15), *புறநானூறு*(281:2,336:2), *சிறுபாணாற்றுப்படை*(124-125), *திருமுருகாற்றுப்படை*(119-121) *நற்றிணை*(95:1), ஆகியவற்றில் காணமுடிகிறது (பின்னிணைப்பு-1). ஆனால் பல்லியத்தில் சங்கும் ஓர் இசைக்கருவியாக கருதப்பட்டதா என அறிய இயலவில்லை. ஆனால் இடைக்கால இலக்கியமான *புறப்பொருள் வெண்பாமாலை* ( 24:1-2)

சங்கு கருங்கோடு தாழ்பீலிப் பல்லியமும்
எங்கும் பறையோ டெழுந்தார்ப்ப

எனச்சுட்டுவதிலிருந்து பண்டைக் காலத்தில் பல்வகை இசைக் கருவிகளில் சங்கும் ஒன்றாக இருந்ததெனலாம்.

மேலும் இலங்கை மன்னன் கீட்டி ஸ்ரீராஜசின்ஹாவனி ஊர்வலத்தில் வாசிக்கப்படும் வாத்தியங்களுள் சங்கு வாத்தியமும் இருந்தது (*மகாவம்சம்* 100:34) என்பதால், சங்கு இசைக்கருவியாகப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது என்பது புலனாகும்[2].

பல்லியத்தில் ஓர் இசைக் கருவியாகச் சங்கு பயன்படுத்தப்பட்டமைக்கு வட இந்தியாவில் காற்றால்

---

[1] Deva 1977:59

[2] Adithiya 1981:40

ஒலிக்கப்படும் இசைக் கருவிகளில் (ஷீஹிர வாத்யா) சங்கும் ஒன்றெனக் குறிப்பதைச் சுட்டலாம்[1]. 'சங்கு வாத்யம்' என்ற பெயருடன் கச்சேரி மேடைகளில் இடம்பெறும். சங்கு சந்தக் குறிப்பையும் தாள விஸ்தரிப்பையும் தந்து மனவெழுச்சிற்குக் காரணமாகவும் இருக்கிறது. வேதங்களில் அழைக்கப்படும் பகூரா (bakura) என்னும் ஒலிக்கப்படும் சங்கு இசைப் பயன்களின் தொன்மையைக் காட்டுவதாகும்[2]. வடமொழிச் சூத்திரங்களில் கூறப்படும் கோமுகா (gomukha) என்னும் இசைக்கருவி சங்கு அல்லது அதுபோன்ற ஊது கருவியைக் குறிப்பதாகலாம்[3]. அறிவனார் என்பார் இயற்றிய *பஞ்சமரபு* என்னும் நூலில் யாழ் மரபில் குரல் என்னும் நரம்போசை சங்கின் ஒலியை ஒத்ததாகக் கூறப்பட்டுள்ளது[4]. மேலும் திருத்த மரபில் வலம்புரியின் ஓசை உத்தமவோசையாகக் கூறப்படுகிறது[5]. இசைமரபில் துளைக்கருவிகளைக் குறிக்கையில் வங்கியம், கொம்பு, தாரை, குழல் (குறுங்குழல், நெடுங்குழல்), காளம் ஆகியவற்றுடன் சங்கும் குறிப்பிடப் படுகிறது[6]. சங்கின் ஓசையை எழுவகை ஓசைகளில் ஒன்றாக அகராதி நிகண்டு குறிப்பிடுகிறது[7]. இவற்றில் அனைத்துச் சுரங்களையும் உருவாக்க இயலாது. எனினும் சங்கூதுவாரின் உதடுகளின் அசைவாலும் நீண்ட மூச்சினாலும் ஒருவிதமான மயக்க உணர்வும் மனத்தை இழுக்கும் உணர்வும் இருக்கும்[8]. சீவகன் ஆட்சிப் பொறுப்பேற்றபொழுது சங்கின் இசை மொகுமொகென ஒலித்ததெனக் கூறுவதிலிருந்து சங்கின் ஒலிமாற்றம் விரல்களாலோ அல்லது உதடுகளாலோ சங்கூதுவர் ஏற்படுத்தியிருக்கலாம் எனச் *சீவேந்திரர் சரிதம்*

---

[1] Bandyopadyaya 1980:18

[2] Deva 1977:59

[3] Deva 1977:59

[4] தெய்வசிகாமணிக் கவுண்டர் *1975:1.24*

[5] தெய்வசிகாமணிக் கவுண்டர் *1975:1.96*

[6] தெய்வசிகாமணிக்கவுண்டர் *1975:1.103*

[7] *நாகசாமி 1983:28*

[8] Hornell 1914:136

*(3125)* வாயிலாக அறிய வருகிறது[1]. இதனால் பண்டைக் காலங்களில் சங்கு இசைக்கருவியாகப் பயன்படுத்தப்பட்டது உறுதியாகிறது.

உதடுகளின் கட்டுப்பாட்டை எளிதாகச் செய்ய இயலாது என்பதால் ஒலி ஏற்ற இறக்கங்களையும் சங்கில் அதனால் எளிதில் செய்ய இயலாது. எனவே இசைக்கலையில் சங்கு நிலையான ஓரிடத்தைப் பெறவில்லை என்பதை அறிய இயலுகிறது[2]. மேலும் சங்கின் ஒலி மற்ற இசைக்கருவிகளின் தன்மையைக் கொண்டிராததால், மரம் மற்றும் உலோகங்களால் செய்யப்படும் காற்று இசைக்கருவிகள் சங்கின் இசைப் பயனைக் குறைத்தன[3].

சங்கொலித்தல்

பண்டைக் காலம் தொட்டு வெவ்வேறு காரணங்களுக்காகச் சமுதாயத்தில் சங்கொலி எழுப்புவது வழக்கமாயிருந்துள்ளது. இன்றளவும் இந்தியாவில் பெரும்பாலான பகுதிகளில் கோயில்களில் சங்கு ஒலிக்கப் பயன்படுகிறது[4]. அது தற்காலங்களில் வழிபாட்டுக் காலங்களில் ஒலிப்பதற்கும், நாட்டுப்புற இசைகளிலும், நடனங்களிலும் பயன்படுகிறது[5]. போர் நிமித்தம், ஊர்வலங்கள், நன்னிமித்தம், இறுதி ஊர்வலம், பிச்சையெடுத்தல் போன்ற பல நிமித்தங்களுக்காகச் சங்கு ஒலிக்கப்பட்டது. சங்கூதும் மரபு பற்றியும் சங்கூதுவோர் பற்றியும் பல சான்றுகள் இலக்கியங்களிலும், பிற குறிப்புகளிலும் காணப்படுகின்றன. 10-11 ஆம் நூற்றாண்டில் உருவான கன்னட இலக்கியங்களான *அஜித தீர்த்தங்கரா புராண திலகம்* (Ajitatirthankara purana Tilakam), *சாந்தி புராணம்* (Shanti purana), *சுகுமார சரிதம்* (Sukumara

---

[1] *சண்முகம் பிள்ளை 1985:223*

[2] Deva 1978:110

[3] Deva 1978:113-4

[4] Deva 1977:59

[5] Deva 1977:59

Charitra) என்னும் நூல்களிலும் சங்கொலி இசைப்பது பற்றிய குறிப்புகள் உள்ளன[1].

திருக்கோயில்களில் சங்கொலித்தல்

கோயில்களில் வழிபாட்டு நேரத்தில் இறைவனின் கவனத்தைத் திருப்பச் சங்கூதுவதாக நம்பிக்கையுண்டு. ஆயினும் பிராமணத் தாக்கத்திற்கு முன்னரே ஆதி மக்கள் தீய சக்தி, ஆவிகளை விரட்டும் செயலுக்குச் சங்கூதுதலைப் பயன்படுத்தியுள்ளனர். எனவே பிராமணர் வருகைக்குப் பின்னர் இந்துச் சமய வழக்கில் சங்கூதுதல் நுழைந்திருக்கக் கூடும் என ஹார்னல் கருதுகிறார்[2].

வங்காளத்தில் ராமாவத் பிரிவு வைணவர்கள் சங்கு நாதத்திற்குத் தனி மதிப்பளிப்பர். ராமா அல்லது ஹரி எனும் மந்திரச் சொல்லைவிட இறைவனுக்கு வழிபாடு செய்யும் போது சங்கொலிப்பதே உன்னதம் என நினைத்தனர்[3]. இது போன்று இந்தியாவில் பிற இடங்களிலும் கோயில்களில் சங்கொலித்தல் நிகழ்ந்தது.

திருவெண்காட்டுச் சிவபிரானைப் புகழேந்திப் புலவர் பாடுகையில்

சங்குமுள பறையுமுள தாநல்ல கவரியுள
எங்குமுள துரவுகிண றெறியுமறி கொடியுமுள
(*வீரசோழியம்* 88:1-2)

எனக் கூறுகிறார்[4].

மார்கழி மாதம் விடியற்காலையில் சேலம், தருமபுரி ஆகிய மாவட்டப் பகுதிகளில் தாசர் அல்லது தாதர் என்னும் திருமாலடியார் சங்கு ஊதிக்கொண்டு இறைவன் திருப்பெயர்களைப் பாடிக்கொண்டு செல்லும்போது

---

1 Deva 1989:39

2 Hornell 1914:124

3 Hornell 1914:136

4 இராகவையங்கார் 1935:21

இறந்தவர் பற்றியும் பாடுவர்[1]. சுசீந்திரம் தாணுமாலயப் பெருமாள் ஆலயத்தில் மதிய வேளை வழிபாட்டின் தொடக்கக் காலத்தைச் சங்கூதி அறிவிப்பர்[2].

கண்டியிலும் மற்ற புத்தவிகாரைகளிலும் சங்கு முக்கியத்துவம் பெற்று விளங்கியது. இலங்கையிலும் திருவிழாக் காலங்களில் சங்கு ஒலிக்கப்பட்டது. மேலும் திருவிழா முடிந்ததையும் சங்கொலித்து அறிவிப்பர் என *மகாவம்சம்* (89:46) குறிப்பிடுகிறது[3]. இவ்வாறான வழக்கம் இன்றுவரை அங்கு நீடிக்கிறது.

**போரில் சங்கொலித்தல்**

போர்த் தொடக்கத்தை அறிவிக்கப் பண்டைக் காலத்தில் சங்கொலிக்கப்பட்டது. இக்கருவியை எளிதில் எடுத்துச் செல்ல ஏதுவாக இருப்பதாலும் உணர்வைத் தட்டி எழுப்ப உதவுவதாலும் மன்னர்கள் போர்க்காலங்களில் படைகளுடைய மனவெழுச்சிக்குப் பயன்படுத்தினர்[4]. பண்டைக்காலம் முதல் அருணகிரிநாதர் காலம் வரையிலுள்ள இலக்கியங்களில் இக்கருத்தைப் பரவலாகக் காணமுடிகிறது[5]. போரின் தொடக்கத்தின்போது சங்கொலிக்கப் படுவதை நன்னிமித்தமாகக் கொள்வது அவர்களின் வழக்கமாயிருந்தது. நந்தி கிராமத்திலிருந்த இராமனைப் பார்க்கப் பரதன் சென்றபொழுது சங்கும், துந்துபியும் முழங்கின என *வால்மீகி இராமாயணத்தில்* கூறப்பட்டுள்ளது[6].மகாபாரதப் போரின் தொடக்கத்தின்போது போர் தொடுப்பதை அறிவிக்கக் கௌரவர்கள் தமது சங்கினை ஒலித்தனர். அதற்குப் பதிலாக பாண்டவர்கள் பகுதியிலிருந்து கிருஷ்ணன் 'பாஞ்சசன்னியம்' என்னும் சங்கை ஒலித்ததாகவும், அர்ச்சுனன் 'தேவதத்தம்'

---

1 வெங்கட்ராமன் 2001:129

2 Pillay 1953:214

3 Adithiya 1981:40

4 Deva 1977:59

5 ஸ்ரீநிவாசன் 1984:12

6 Deva 1977:59

என்னும் சங்கினையும், பீமன் 'பௌண்டுரங்கம்' என்னும் சங்கினையும், தர்மன் 'அனந்தவிஜயம்' என்னும் சங்கினையும், சகாதேவன் 'மணிபுஷ்பகம்' என்னும் சங்கினையும், அவர்களது படைத்தளபதிகள் தத்தமக்குரிய சங்குகளையும் ஒலித்தமை கௌரவர்களைப் பயமுறுத்துவதாக இருந்ததாகப் *பகவத்கீதை* சுட்டுகிறது[1]. இராமாயணத்தில் போர் அறிவிப்பின்போது சங்கொலியுடன் பலவகை இசைக் கருவிகள் முழங்கியபோது கடலும் துன்பப்பட்டது எனக் கூறப்பட்டுள்ளது[2].

ஒவ்வொரு நாள் போரின் போதும் சங்கின் முழக்கம் இராமனது சேனைகளின் எழுச்சியைக் கூட்டியதாகவும் இராவணனது சேனைகள் ஐயமுற்றதாகவும் வருணிக்கப் படுகிறது. போரைக் கண்டுக்கொண்டிருந்த சங்கரன், நான்முகன் ஆகியோர் கைகள் அமைதி நீங்கி அஞ்சயவும், பழமையான அண்டமுகடு வெடிக்கவும், மேலுலகில் இருந்த தேவர்களின் ஆரவாரத்தை முன்னர் ஒழித்த சங்கினை இராவணன் ஊதினான் எனக் கூறப்பட்டுள்ளது[3]. அந்த சங்கின் ஓசையைக் கேட்டுப் பொறுக்க முடியாமல் இராமனின் தெய்வ நிலையில் உரியதாயிருந்த வெள்ளிய பாஞ்சசன்னியம் என்னும் சங்கு, இராவணனின் சங்கோசை துலங்கும்படியும், *என்ன சங்கு இது?* எனத் தேவர்கள் ஏங்கும் படியும் தானும் முழங்கியது என்னும் குறிப்பும் இங்குச் சுட்டத்தக்கது[4].

போர் அறிவிப்பைச் சுட்டும் சங்கின் ஒலி பல்லவர் மன்னர்களின் பறையான கடுவாயின் ஒலிபோல் இருந்ததாக *நந்திக்கலம்பகம்* கடுவாய் போல் வளையதிர *(61:12)* என்று தெரிவிக்கிறது. இதிலிருந்து பல்லவர்காலத்திலும் போர்த்

---

[1] Chidbhavananda 1962:82-92

[2] *சுப்பிரமணியன் 1987:213*

[3] *சுப்பிரமணியன் 1987:114-5*

[4] *சுப்பிரமணியன் 1987:115*

தொடக்கத்தை அறிவிக்க சங்கொலிக்கப்பட்டமை தெரியவருகிறது[1].

பரிவேட்டைக்கு குலோத்துங்கன் புறப்பட்டு யானை மீதமர்ந்த போது ஒப்பற்ற வலம்புரிச் சங்குகளின் ஒலியுடன் வேறு பல சங்குகளின் ஒலியும் முழங்கி ஆர்த்தன. கார்கால மேகங்கள் முழங்கி ஆர்ப்பது போல, பலவகை வாத்தியங்களும் ஆரவாரித்து எழுந்து முழங்கின (*கலிங்கத்துப்பரணி* 284). மேலும் கருணாகரத் தொண்டைமானை கலிங்கத்தின் மீது போர்த்தொடுக்க குலோத்துங்கன் ஆணையிட்ட பின் படைகள் புறப்படும்போது சங்கு, முரசு, பறை ஒலிக்கப்பட்டதாகவும் *கலிங்கத்துப்பரணி* (345) குறிப்பிடுகிறது.

### போரில் வெற்றி

போரின் வெற்றியைக் குறிக்கவும் சங்கொலிக்கப் பட்டமையை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இடங்கை வலங்கை வரலாற்றில் வரும் வில்வீரன் பாத்திரம் வெற்றியுடன் வந்தபோது ஊர்வலத்தில் துந்துபி, பேரிகை, டமாரம், பூரிகை, நாகசாரம், திருச்சின்னம், எக்காளை, கொம்பு, வலம்புரிச் சங்கம், டக்கை, மத்தளம், மேளம், தாளம், அனேகபிருது என்னும் பதினெட்டு மேள வாத்தியமும் இசைக்கப்பட்டது என கூறப்படுகிறது[2].

### விடியல் நிமித்தம்

சங்க காலத்தில் விடியலை உணர்த்துவதற்குச் சங்கொலிக்கப்பட்டது என்பதை

இரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
இரவுப்புறங் கண்ட காலைத் தோன்றி

(*புறநானூறு 397:5-6*)

---

[1] *அருணாசல தேசிகர் 1966:129*

[2] *சௌந்தரபாண்டியன் 1995:20*

வால் வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய
காலை முரசம் கனைகுர லியம்ப

(சிலப்பதிகாரம் 14:13-14)

என்னும் பாடல் வரிகளால் அறியலாம். காலை நேரத்தில் சங்கொலித்தல் இடைக்காலத்திலும் தொடர்ந்து வந்ததை

குலம்புரி கோதையைக் கார்பணிந் தார்கொடி மாடமொன்றில்
வலம்புரி யோடு முழங்கும்கொல் காலை மணமுரசே

(பாண்டிக்கோவை 196:3-4)

என்னும் பாடலாலும் அறிய இயலுகிறது.

நன்னிமித்த ஊர்வலங்கள்

மன்னன் ஊர்வலத்தின் போது பல இசைக் கருவிகளுடன் சங்கும் ஒலிக்கப்பட்டது. இது குறித்து இலக்கியங்கள் பல இடங்களில் சுட்டுகின்றன. *சிலப்பதிகாரம்*(1:46) மங்கல வாழ்த்துப் பாடலில் அவ்விடத்து முரசு முதலியன இயம்பின; முருகு முதலிய அதிர்ந்தன, பணிலம் முதலிய முழங்குதல் எழுந்தன, வெண்குடைகள் அரசனுயர்வு எழுந்தபடி எழுந்தன என்பதை முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்குடை எனக் குறிப்பிடுகிறது[1].

*ஸ்ரீமத் பாகவதத்தில்* கிருஷ்ணன் துவாரகைக்கு வந்தவுடன் தன் வருகையைச் சங்கொலித்து மக்களுக்கு அறிவிக்க ரோஜாவைப் போன்ற கைகளில் வெண்மையான சங்கைப் பிடித்துப் பவளம் போன்ற உதடுகளில் வைத்து ஒலித்தது, தாமரைகள் நிறைந்த தடாகத்தில் அன்னப்பறவை இருப்பதுபோல் இருந்தது என்றவாறு வருணிக்கப் பட்டுள்ளது[2].

மன்னரன்றிப் பல முக்கியப் பதவி வகித்தவர்களும் தாம் பல்லக்கில் செல்லும் போது சங்கொலிக்க மன்னரிடம்

---

[1] சாமிநாதையர் 1985:40

[2] Deva 1977:59

அனுமதி பெற்றிருந்தனர். இவ்வுரிமையை மன்னர்கள் இவர்களுக்கு வழங்கியதைக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன[1].

நன்னிமித்தம் காரணமாய்ச் சங்கு முழங்குதலைச் *சீவகசிந்தாமணி* (701, 1888) பாடல்களில் முறையே சீவகன் தேர் முதலியன சூழ சங்குகள் ஆர்ப்ப யாழ் மண்டபத்தை அணுகினான் என்றும், கனகமாலையையும், மைத்துனர்களையும் பிரியும்போது ஆரத்தழுவிப் பின் குதிரையேறிய பொழுது சங்குகள் முழங்கின எனவும் குறிக்கிறது[2].

*முத்தொள்ளாயிரத்தில்* காதலி தோழியிடம் மன்னர் வருவதை அறிவிக்கும் திருகிய சங்கின் ஒலி வந்த காரணத்தினால் என்னுடைய அழகிய வேலைப்பாடுகள் செய்த வளையல்கள் நெகிழாமல் நின்றுவிட்டன எனக் குறிப்பிடப்பட்டுள்ளது[3]. இடைக்காலத்தில் இந்தியாவிற்கு வந்திருந்த இபின் குஃர்தாப் (கி.பி.844-888) என்பாரின் குறிப்பில் சங்கு ஊதுதலை ஒரு முக்கிய நிகழ்ச்சியாகக் குறிப்பிடுகிறார்.

*சீவகசிந்தாமணியைத்* தழுவி இயற்றப்பட்டதும் இன்றைக்கு இருநூறாண்டுகளுக்கு முற்பட்ட *சீவேந்திர சரிதம்* (756, 3125) என்னும் நூலில் மன்னர் ஊர்வலத்தின்போது பல இசைக்கருவிகளுடன் சங்கொலிப்பதைப் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன[4].

**திருமணம்**

திருமணத்தின் போது சங்கொலித்தல் நீண்ட காலமாக உள்ள மரபாகும். திருமால் தன்னை மணப்பதாகக் கனவு கண்ட ஆண்டாள், தன் தோழியிடம் விளக்கும் போது

---

[1] *IPS* 715:27, *ARE* 1921/473

[2] சாமிநாதையர் 1986:348,952

[3] சிதம்பரநாத முதலியார் 1947:120

[4] சண்முகம்பிள்ளை 1985:68,223

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடை தாமநி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிம துசூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி நான்
*(நாச்சியார் திருமொழி 6:6)*

என்று கூறுவதிலிருந்து பண்டைக் காலத்திலிருந்தே திருமணச் சடங்கில் சங்கூதும் வழக்கம் இருந்ததென அறியலாம்.

தமயந்தியின் சுயம்வரத்தை அறிந்து மன்னர் முரசு முழங்க, வெண்சங்கு ஒலிக்கச் சுயம்வர மண்டபத்தை நோக்கி வரலானார்கள் என்பதை *நளவெண்பாப்* பாடல் (134) குறிப்பிடுகிறது. மேலும் சங்கின் ஒலியைச் சுயம்வரத்தில் ஒலிக்கப்படும் குறிப்பும் *நளவெண்பாவில்* (95) காணப்படுகிறது[1].

இன்றும் நாட்டுக்கோட்டை செட்டியார் இனத்தாரின் திருமணங்களில் சங்கொலிக்கப்படுகிறது. இவ்வினத்தாரின் திருமணத்தின் போது பெண்களும் சங்கொலிக்கின்றனர். வங்காளத்தில் திருமணச் சடங்குகளிலும் சங்கூதும் வழக்கம் இருந்து வந்துள்ளது. அங்கும் பெண்கள் சங்கூதும் வழக்கம் உண்டு. திருமணச் சடங்குப் பாடலில் கங்கையின் நீரும் கடலின் சங்கும் இம்மணமக்களை ஆசீர்வதிப்பார்களாக என்னும் விளக்கம் பொதிந்த வரிகள் பாடப்படும். பிராமணர் திருமணச் சடங்குகளின்போது ஏழு மணமான பெண்களுடன் மணமகளின் தாய் குலவைச் சத்தமிட்டு மணமகளைச் சுற்றி வலம் வரும் வழக்கம் இருந்துள்ளது. சுற்றி வரும் ஏழு பெண்களில் ஒருவர் சங்கூதி வருவார்[2].

தென்னிந்தியாவில் பிராமணரல்லாதோரின் திருமணச் சடங்குகளில் குறிப்பாக முடிதிருத்தும் வகுப்பைச் சார்ந்தவர்களிடம் சங்கூதும் வழக்கம் இருந்துள்ளது. திருமணச் சடங்கில் தாலிகட்டும் போது மணமக்கள் மேடையைச் சுற்றிச் சங்கூதி வலம் வருவார். ஆயினும்

---

[1] புலியூர் கேசிகன் 1978:47

[2] Hornell 1914:145

தெலுங்கு மொழி பேசுபவர்கள் பகுதியில் இது தீய ஒலியாகக் கருதப்படுவதால் அவர்கள் திருமணச் சடங்குகளில் இசைக்கப்படுவதில்லை. தெலுங்கு, தமிழ்ப்பகுதியைச் சார்ந்த பிராமணர்கள் சங்கொலியை மங்கள நிகழ்ச்சிகளுக்குப் பயன்படுத்தாத பொழுது வங்காளம், ஒரிசா ஆகிய பகுதிகளில் உள்ள பிராமணர்கள் அதை நல்ல சகுனமாக நினைத்துப் பயன்படுத்துகின்றனர் என்பது இங்குச் சுட்டத்தகுந்தது[1].

தமிழகத்தில் கள்ளர் பிரிவைச் சார்ந்தோர் திருமண நிகழ்வின்போது பெண்கள் ஊர்வலமாக மணமகன் வீட்டிற்கு பூ, தேங்காய், நெல், மஞ்சள், பால், நெய் முதலியவற்றை ஊர்வலமாக எடுத்துச் செல்லும்போது சங்கூதிச் செல்வது வழக்கமாக இருந்து வந்துள்ளது. இசுலாமியர் வழக்கமான சுன்னத் எனும் சடங்கு பிறமலைக் கள்ளர்களும் மேற்கொண்டனர். அச்சடங்கில் சங்கூதும் வழக்கம் இருந்துள்ளதாகத் தெரிகிறது[2].

## சமண, பௌத்த சமயங்களில் சங்கொலித்தல்

திபெத்தில் ஷிகேட் (Shigate) என்னும் இடத்திற்கு அருகே அமைந்துள்ள சாக்கிய மத ஆலயத்தில் குப்ளாய்கானால் நன்கொடையாக வழங்கப்பட்ட வலம்புரிச்சங்கை ஏழு அவுன்ஸ் வெள்ளியை நன்கொடையாக வழங்கினால் லாமாக்கள் ஊதுவர். இச்செயலை நன்கொடையாளர் பெருமையாகக் கருதினர்[3].

திபெத்தில் லாமாக்கள் சங்கின் நாத அழைப்பு மிகவும் புகழ் பெற்றது. திபெத்திற்கு வருகை புரிந்த அனைத்து பயணிகளும் இந்நம்பிக்கையைப் பற்றிக் குறிப்பு எழுதியுள்ளனர். சுவன் ஹெடின் (Sven Hedin) எனும் பயணி திபெத்தில் நடைபெற்ற தான் கண்ட புத்தாண்டு வருகைக் கொண்டாட்டத்தைக் குறித்துள்ளார். உயரமான கூரையில் மேலுள்ள மேடைகளில் திடீரென காதைப் பிளக்கும் அளவிற்கு இரு துறவிகள் வானத்தை நோக்கிச் சங்குகளை

[1] Hornell 1914:145
[2] Hornell 1914:145
[3] Hornell 1914:145

ஒலித்தனர். அந்நாதம் மிகவும் மனத்தை ஊடுருவிச் சென்றதாகவும் சங்கொலி மலை முகடுகளில் பட்டு எதிரொலித்ததாகவும் கூறுகிறார். இதனால் சகோதரத் துறவிகளை ஒன்றுசேர வைத்தது. லாமாக்கள் முக்கியப் பணியிலிருந்தாலும் நாள்தோறும் அனைவரும் ஓரிடத்தில் கூடித் தேநீர் அருந்துதலுக்குச் சங்கூதி அழைக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது[1].

## இறுதி ஊர்வலம்

இந்தியாவில் இறுதி ஊர்வலங்களில் சங்கொலிப்பது வழக்கமாகவுள்ளது. இறுதி ஊர்வலத்தில் பட்டினத்தார் பாடல்களைப் பாடிக்கொண்டும் சங்கு, தாளம் முழங்கிக் கொண்டும் செல்லும் வழக்கம் உள்ளது[2].

பரஞ்சோதி முனிவரின் *திருவிளையாடற் புராணத்*திலுள்ள பரியை நரியாக்கிய படலத்தில் (11), சங்கு பிணப்பறையுடன் ஒலிக்கப்படுவது பற்றிய குறிப்பு காணப்படுகிறது[3].

தமிழகத்தில் பிராமணரல்லாத குலங்கள் அனைத்திலும் இறுதிச் சடங்குகளில் சங்கு ஊதப்பட்டு இறுதி ஊர்வலம் நடைபெறும். இறுதி ஊர்வலத்தில் சங்கூதும் வழக்கம் தெலுங்கு பேசும் மக்களிடையேயும் உண்டு. ஆயினும் வைணவர்கள் இவ்வழக்கத்தைப் பின்பற்றுவது இல்லை. தமிழ், தெலுங்கு பேசும் பகுதிகளில் பிராமணர்கள் இவ்வழக்கத்தைப் பின்பற்றாமையினால், சங்கின் சமய வெளிப்பாடு பிற சமய நம்பிக்கையிலிருந்து பிறந்தது என்பது தெளிவாகிறது என்று ஹார்னல் கருதுகிறார்.

மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் அம்பட்டன் எனப்படும் முடிதிருத்துபவர்களின் இறுதிச் சடங்குகளில் சங்கு ஊதுவர். இடையர் குல மக்களின் இறுதிச்

---

[1] Sven Hedin 1999:19

[2] ஸ்ரீநிவாசன் 1984:2

[3] பட்டுசாமி ஓதுவார், 1951:87

சடங்கில் இறந்தோரின் மகன் பானையில் நீர் ஊற்றி மூன்று முறை சுற்றி வரும்போது ஒவ்வொரு சுற்றுக்கும் சங்கு கொண்டு ஒரு துளையை முடிதிருத்துபவர் இடுவார்[1].

தஞ்சாவூர், சேலம், கிருஷ்ணா நதிவரை உள்ள பகுதிகளில் இறுதிச் சடங்குகளில் பணிசவன் எனும் குலத்தினர் சங்கூதுவர். இவர்களே இறந்த செய்தியையும் இறந்தோரின் உறவினர்க்குத் தெரிவிக்கும் செயலையும் புரிந்தனர். கரும காரியம் அன்று இறந்தோரின் மனைவியின் தாலியைக் கழற்றும்போதும் இவர்களே சங்கூதுவர்[2].

பணிசவர்களின் குலக்குறியாக சங்கும் இருந்தது. கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளிப் பகுதியில் இத்தொழிலைப் பறையர்கள் செய்து வந்தனர். கோயமுத்தூர் பகுதியில் இத்தொழில் புரிவோர் சங்குப் பறையர் என்றே அழைக்கப் பெற்றனர்[3].

திருவிதாங்கூர்ப் பகுதியில் இச்சங்கூதும் பறையர் இறந்துவிட்டால் அவருடன் சங்கும் சேர்த்து புதைக்கப்பட்டது[4]. கொச்சி மலபார் பகுதியைச் சார்ந்த செருமான் எனப்படும் வேளாண்மைத் தொழில் அடிமைகள் யாரேனும் இறந்தால் அவரின் மகனோ உடன்பிறந்தார் மகனோ தங்களது குடிசையின் தென்புறத்தில் மணற்குன்று ஒன்றைத் தோற்றுவித்து ஏழு நாட்கள் அக்குன்றைக் காலையிலும் மாலையிலும் நீர் தெளித்து தேங்காயை உடைத்து விழுந்து வணங்குவர். எட்டாம் நாள் பேயோட்டுபவரும் மற்றோரும் மணற்குன்றருகில் கூடிடுவர். பேயோட்டுபவர் சங்கூதிப் பேய் எப்பக்கத்தில் உள்ளது எனக்கண்டு பிடிப்பார். பின் அப்பேயை விடுவித்து குல தெய்வமாக மாற்றுவர்[5].

---

[1] Thurston and Rangachari 1987 II:362
[2] Thurston and Rangachari 1987 VI:56
[3] Thurston and Rangachari 1987 VI:81
[4] Thurston and Rangachari 1987 VI:134
[5] Thurston and Rangachari 1987 II:81

திபெத்தில் வாழும் பௌத்த சமண முனிவர்கள், பெண் துறவிகள் இறந்தபின் நடைபெறும் இறுதி ஊர்வலத்தில் சங்கொலிக்கப்படும். 19ஆம் நூற்றாண்டில் சுவன் ஹெடின் ஒரு நூற்றாண்டுக்கு மேல் வாழ்ந்த துறவி ஒருவர் இறக்கும் தறுவாயில் மந்திரங்கள் உச்சாடனம் செய்து சில வேளைகளில் மெல்லிய சங்கூதினார் எனவும் அவர் இறைவனடி சேர்ந்தபொழுது சங்கு ஊதப்பட்டது எனவும் குறிப்பிடுகிறார்[1].

### பிச்சையெடுத்தல்

ஆண்டிகள் சங்கூதிப் பிச்சையெடுக்கும் வழக்கத்தை இன்றளவும் கிராமப்புறங்களில் காணமுடிகிறது. ஆண்டி சங்கூதிப் பிச்சையெடுக்கும் வழக்கம் குறித்த பழமொழிகள் பல தமிழகத்தில் வழங்கி வருகின்றன. தெற்குத் தக்காணப்பகுதி, வட ஆர்க்காடு பகுதியில் வாழ்ந்த தாசரி என்னும் வைணவ பிச்சாண்டிகள் ஓர் ஊரில் பிச்சை எடுக்க வரும்போது சங்கூதித் தமது வருகையை அறிவிப்பது வழக்கம். அது அவர்கள் குலக்குறியாகவும் இருந்தது. பெரும்பாலும், பிச்சாண்டிகள் வைத்திருக்கும் ஊதுகின்ற சங்குகளின் வாய்ப்பகுதியில் சிறிய ஊதுகுழாய் பொருத்தப்பட்டிருக்கும்.

### பல்வேறு நிகழ்வுகள்

மலபார் பகுதியில் நீரா எனும் முதல் அறுவடை விழாவில் காலையில் புரோகிதர் அறுவடை நடைபெறும் இடத்திற்கு செல்லும்போது ஒருவர் சங்கூதி வருவார். இச்சங்கின் சத்தத்தைக் கொண்டு வீட்டிற்கொருவர் குளித்து நீறணிந்து அறுவடை செய்வர்[2]. 19ஆம் நூற்றாண்டின் தொடக்க காலங்களில் யாழ்ப்பாண வகைக் கப்பல்களில் சிவனுக்கும், சுறாவிற்கும் வழிபாடு செய்யப்படும் போது சங்கு ஊதப்பட்டது[3] (படம் 91).

---

[1] Sven Hedin 1999:18

[2] Hornell 1914:144

[3] Hornell 1918-23, as referred in Cornelius 1955:182



படம் 91. யாழ்ப்பாணத் தோணிகளில் சிவ பூஜை, சுறா பூஜையின் போது சங்கு ஊதுதல் (நன்றி– **Hornell 1918-23)**

வங்கதேசத்தில் சூரிய சந்திர கிரகணக் காலங்களில் கிரகணம் முடியும் வரை சங்கு தொடர்ந்து ஊதப்படும். சியாமில் விதைப்பதற்கு உழும்போது சங்கூதி ஆரம்பிக்கப்படும். சியாமின் ஆறாம் மாதத்தில் இது நடைபெறும். இந்நிகழ்வு ரெஹனா (Rehna) என்றழைக்கப்படும். இச்சடங்கிற்கு சியாம் மன்னரோ, அமைச்சரோ பல்லக்கில் மஞ்சள் உடையணிந்த புரோகிதர் சகிதம் வருவார். சடங்கு முடிந்தபின் மன்னர் ஏர் உழுத பின்னர் விதைகள் விதைக்கப்படும்.

தொழில்கூடத்திற்கு ஆட்களை அழைக்கவும், பெரிய ஊர்களில் நேரத்தைக் குறிப்பிடவும் இயந்திரத்தில் ஒலி எழுப்புதலைச் சங்கூதுதல் என்றும் இன்று தமிழகத்தில் வழங்கப்பெறுகிறது. ஸ்பெயின் நாட்டில் மீன் விற்போர் ஸ்ராம்பஸ் கிகாஸ் (strombus gigas) என்னும் சங்கைப் போன்ற சிப்பி ஓட்டில் ஓசை எழுப்பி வாடிக்கையாளர்களை அழைப்பது வழக்கமாக உள்ளது[1]. மத்திய ஐரோப்பா பகுதியில் இடியுடன் கூடிய கடும் மழை பெய்யும்போது இவை

[1] Montagu 1980:273

ஒலிக்கப்படுகின்றன. சரோநியா நோடிஃபெரா *Charonia nodifera* (Lamark) என்னும் வகைச் சங்கு, கப்பல்களில் பனிக்காலங்களில் ஒலி எழுப்பப் (fog horn) பயன்படுத்தப்படுவது, கடல் தெய்வம் பற்றிய அவர்கள் கொண்ட நம்பிக்கையை வெளிப்படுத்துகிறது[1]. மேலும் பழைய புதிய ஐரோப்பிய இலக்கியங்களிலும் சங்கொலித்தல் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

**சங்கூதுவோர்**

வடமொழியில் இவர்கள் சங்கதாரின் எனவும் சில வேளைகளில் பாத்ரா எனவும் அழைக்கப்பெற்றனர்[2]. சங்கூதி என அழைக்கப்பட்ட இவர்களை பதினெண் குடிமைகளில் ஒருவராகக் குறிக்கப்படுவதிலிருந்து இவர்கள் சமூகத்தில் கீழ்நிலைக் குடிகளாகக் கருதப்பட்டனர் என்பதை அறியலாம்[3]. தாசரி, பண்டாரம் மற்றும் பணிசவன் குலங்களைச் சார்ந்தோர் இச்சங்கை ஊதுவர்[4]. மார்கழி மாதம் விடியற்காலையில் சேலம், தருமபுரி மாவட்டப் பகுதிகளில் தாசர் அல்லது தாதர் என்னும் திருமாலடியார் சங்கு ஊதிக்கொண்டும் இறைவன் திருப்பெயர்களைப் பாடிக்கொண்டும் செல்லும்போது இறந்தவர் பற்றியும் பாடுவார்[5]. இச்சங்கொலி எழுப்புவோர்க்கு (சங்கூதி) இனாம் அளிக்கப்பட்டது[6].

இவர்கள் சங்கூதுமாள் (சங்கு+ஊதும்+ஆள்) என அழைக்கப்பெற்றமையை குளத்தூர் தாலுகா, திருவிளாங்குடி ஊரில் உள்ள முதலாம் இராஜராஜன் கல்வெட்டு (கி.பி.1002) தெரிவிக்கிறது. மேலும் அவர்களுக்கு நிலக்கொடை

---

1 Montagu 1980:273

2 Sircar 1966:298

3 கதிரைவேற்பிள்ளை 1918

4 Sambamoorthy 1976:17

5 வெங்கட்ராமன் 2001:129

6 *Tamil Lexicon* 1982:1221

ஒலிக்கப்பட்டதையும் குறிப்பிடுகிறது[1]. சங்கூதுவோர்க்கு அரிகேசரிமங்கலத்தின் குளத்தில் மீன் பிடிப்பதனால் கிடைக்கும் வருமானத்தை (பாசிப்பற்று) ஊதியமாக வழங்கியதை, திருநெல்வேலி மாவட்டம் கங்கை கொண்டான், கைலாசபதிக் கோயில் கல்வெட்டு இயம்புகிறது[2].

தமிழகத்தில் இந்துக் கோயில்களில் நடைபெறும் வழிபாட்டுக் காலங்களைக் குறிக்க உவச்சன் எனப்படும் சாதியினர் சங்கூதினர்[3]. உறையர் (அரையர்?) எனப்படும் கோயில் பணியாளர்கள் சிவாலயங்களில் கடவுள் ஊர்வலத்தின்போது சங்கூதுவர். இவர்களே கடவுளுக்கு மாலைகள் தொடுப்பவரும் ஆவர்[4]. ஒச்சன்களைப்போல உறையர்கள் முழுநேரப் பணியாளர்கள் அல்லர். ஒச்சர்கள் மற்றத் திருமணங்களில் சங்கை வாசிக்காமல் வெள்ளியினால் செய்யப்பட்ட கொம்பு என்னும் ஒலிக்கருவியை ஊதுவர். ஆனால் ராவுலாஸ் உறையர்கள் பிராமணர்களின் திருமணத்திற்கு சங்கை ஊதுவர். ஒவ்வொரு உறையரும் குறைந்தது இரண்டு சங்குகளைத் தம் வசம் வைத்திருப்பார். இவற்றில் ஒன்று காணாமல் போனாலும் கோயில் பணியை இவர் இழக்க நேரிடும். சங்குப் பறையர் என்னும் பிரிவினர் மரணச்சடங்கில் சங்கூதுவர்[5].

### சிற்பங்களில் சங்கூதுதல்

கி.பி.3-4ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஆந்திர மாநிலம் நாகார்ஜுனகொண்டாவில் நடைபெற்ற அகழாய்வில் எடுக்கப்பட்ட புடைப்புச் சிற்பங்களில் புத்தரின் தலைப்பாகையை மேலுலகிற்குக் கொண்டு செல்வதாகக் காட்டும் சிற்பத்தில் ஒரு சங்கூதுவோன் சிற்பம் உள்ளது.

---

[1] *Inscriptions of Pudukottai State* 89

[2] *South Indian Inscriptions* v:726

[3] Hornell 1914:135

[4] Hornell 1914:135

[5] *Tamil Lexicon* 1982:1230

இரண்டாவது சிற்பத்தில் பல இசைக்கருவிகளின் ஊர்வலத்துடன் ஒரு விண்ணவர் சங்கூதுவதுபோலக் காட்டப்பட்டுள்ளது. மூன்றாவது சிற்பத்தில் விண்ணவர் தனியாகச் சங்கூதுவதுபோல் காட்டப்பட்டுள்ளது[1]. இறுதியில் கூறப்பட்ட இரு சிற்பங்களிலும் சங்கூதுவோர் சங்கை இரு கைகளால் பிடித்தபடி வாயில் வைத்து ஊதுவதைப் போன்று காட்டப்பட்டுள்ளது. நாகார்ஜுன கொண்டாவில் கிடைத்த புடைப்புச் சிற்பங்களில் வாயில் நேரடியாக வைக்கும் முறை செதுக்கப்பட்டுள்ளது. பாரூத் சிற்பங்களில் துந்துபியுடன் சங்கில் குழல் பொருத்தி ஊதுவதுபோல் காணப்படுகிறது. அமராவதி சிற்பங்களில் குழலுடனும், குழலின்றியும் சங்கு ஊதுவதுபோல் செதுக்கப்பட்டுள்ளது. அஜந்தா சிற்பங்களில் ஏராளமான இடங்களில் சங்கூதுவோர் சிற்பங்கள் காட்டப்பெற்றுள்ளன. சாஞ்சியில் காணப்படும் கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிற்பங்களில் சங்கும் செதுக்கப் பட்டுள்ளது[2].

கர்நாடக மாநிலம் அய்யவோளேயில் உள்ள ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்த லட்கான் (Ladkhan) கோயிலில் இரு பூதகணங்கள் சங்கூதுவது போலச் சித்திரிக்கப்பட்டுள்ளது[3] (படம் 92). மேலும் அய்யவோளேயில் 7ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இராவணபதி (Ravanaphadi) கோயிலில் இவ்வுருவங்கள் காணப்படுகின்றன[4].

மஹாராஷ்டிரா மாநிலம் சந்தா மாவட்டத்தில் மார்கண்டி என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட 11ஆம் நூற்றாண்டிற்குப் பிந்தையதாகக் கருதப்படுகிற நினைவுக் கல்தூணில் (Memorial Stone) சிவலிங்கம், திருமால், வேணுகோபாலன், கணேசர் ஆகியோரின் புடைப்புச் சிற்பங்கள், இறந்த வீரன் அவரது மனைவி ஆகியோருடன் சங்கும் காட்டப்பட்டுள்ளது. இறந்தோரின் நினைவுச்

---

[1] Krishnamurthy 1977:187-8

[2] Sambamoorthy 1976:17

[3] Deva 1989:39 and pl.5-2

[4] Deva 1989:39

சின்னத்திலும் இறைவனின் கருவிகளைப் பொறிப்பது வழக்கத்தில் இருந்துள்ளது தெரியவருகிறது[1].



படம் 92. கர்நாடகம் லட்கான் கோயிலில் சங்கூதும் புடைப்புச்சிற்பங்கள்
**(நன்றி– Deva 1989)**

---

[1] Deo 1982:258-59

# 8. மருத்துவத்தில் சங்கு

பழங்காலந்தொட்டே சங்கு மருந்துப் பொருளாகப் பயன்பட்டிருப்பது சித்த மருத்துவ நூல்கள், நிகண்டுகள் ஆகியன கொண்டு அறியலாம். சங்கு தனி மருந்தாகக் கொடுக்கப்படுவதில்லை. பஸ்பமாகவோ, சுண்ணமாகவோ செய்து மற்ற பொருட்களுடன் சேர்த்துக் கொடுக்கப் படுகிறது[1]. ஜீவ வர்க்கத்தில் (உயிர்ப் பொருள்) சித்த மருந்தாகக் கருதப்படும் மருந்துகளின் உபரசமாகவே (துணைப்பொருள்) சங்கு பயன்படுத்தப் படுகிறது. சித்த யுனானி மருத்துவக் குறிப்புகளில் சங்கின் மருத்துவப் பயன்பாடு குறித்துப் பல செய்திகள் உள்ளன. சங்குப் பஸ்பம், சங்கு சுண்ணம், சங்கு செந்தூரம், மாத்திரைகள் ஆகியன பற்றிய தயாரிப்பு முறைகள், நோய்களுக்குப் பயன்படுத்தும் முறைகள் போன்ற செய்திகள் மருத்துவ நூல்களில் காணப்படுகின்றன. ஆயினும் அவை நெறிபடத் தொகுக்கப்படவில்லை. கடலில் கிடைக்கும் மற்ற மெல்லுடலிகளான சிப்பி, முட்சங்கு போன்ற பிற வகைகளையும் வெண்சங்குகளுள் ஒன்றாகக் கருதி ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன[2].

பாஷாணம் என்பது மருந்துச் சரக்கு என்ற பொருள் கொண்டது[3]. சங்கு, பாஷாணமாகப் பயன்படுவதை

தவளச் சங்கஞ் சாதகக் குவடுதான்
புவளம் புனிதம் பொங்கிய தோஷமாம்
மவிளங் கச்ச மாகிய வெண்சிறஞ்
சவளமாஞ் சங்கப் பாஷாண நாமமே

---

1 *கண்ணுசாமி பிள்ளை 1941:285*

2 *பிரேமா 2001:37-76*

3 *Tamil Lexicon* 1982:2643

என்று *சட்டைமுனி நிகண்டு* குறிப்பிடுகிறது[1].

*சித்த வைத்திய பதார்த்தகுண விளக்கம்* (தாது-ஜீவ வர்க்கம்) என்னும் நூல்

கசிவா மிரத்தபித்த ங் கண்ணோய்க ளேகும்
பசியாரும் வாதம் ப றக்கு - மிசிவுடனே
நங்கு முளைவிரணந் தானகலு மே வெள்ளைச்
சங்கமது வுண்டாயிற் றான்

வெண் ச ங்கினால் உதிரபித்தம், விழிரோகம், வாததோஷம், இசிவு, முலைக்கட்டி இவை நீங்கும் என்று குறிப்பிடுகிறது[2].

சங்கு கொண்டு செய்யப்பெறும் மருந்துகளில் சிறுநீர அதிகமாக்கு தன்மை (மூத்திர வர்த்தாகாரி - Diuretic) உள்ளது எனவும் தாதுக்களின் எரிச்சலைத் தணித்து அவைகளைத் துவளச் செய்யும் மருந்து (அந்தாஸ நிக்தகாரி - Demulcent) எனவும் *சித்த வைத்திய பதார்த்தகுண விளக்கம்* (Materia Medica) கூறுகிறது[3].

சங்கிற்கு உடல் உரமாக்கி, துயரடக்கி, அகட்டுவாயுவகற்றி, பசிதூண்டி, துவர்ப்பி, வெப்பகற்றி, கோழையகற்றி ஆகிய குணங்கள் உண்டென்றும் கூறப் படுகிறது[4].

சங்கல்லாமல் மருந்தாகப் பயன்படும் பிற சங்கு வகைகளையும் *சட்டைமுனி நிகண்டு* குறிப்பிடுகிறது.

சுவரேழு சங்கங்கடு கண்டகச் சங்கு
நவரேழு சங்கம் நலங்குங் குலச்சங்கம்
முவரேழு சங்க முயன்றவேற் சங்கமாந்
தவரேழு ரோமந்தனி முள்ளின் சங்கமே[5]

---

[1] *ஆறுமுக சுவாமி 1927:28*

[2] *கண்ணுசாமி பிள்ளை 1941:285*

[3] *கண்ணுசாமி பிள்ளை, 1941*

[4] *பரிமளா 1994:27-28*

[5] *ஆறுமுக சுவாமி 1927:10*

மருத்துவ நிகண்டுகள் சங்குகளின் பல்வேறு பெயர்களையும் வகைகளையும் குறிப்பிடுகின்றன.

அட்டவணை - 5

| போகர் | போகர் முள்சங்கின் பெயர் | சட்டமுனி |
|---|---|---|
| தவளம் | முழக்கெடுக்கும் | |
| திசைநாதம் | சூரச்சங்கம் | |
| வளை | கண்டகச் சங்கம் | கண்டகச்சங்கு |
| வலம்புரி | கதித்த சங்கம் | |
| இடம்புரி | கவரெழுசங்கம் | கவரெழுசங்கம் |
| வாருதினாதம் | உயன்ற வேலச்சங்கு | உயன்ற வேலச்சங்கு |
| சின்னம் | உரோமத்தின் சங்கு | உரோமத்தின் சங்கு |
| பணிலம் | ஒற்றை வாகை | |
| சலம்புரி | கூப்பிடுஞ்சங்கு | |
| படசி | | |
| கம்பு | | |
| நீங்காத வோசையோன் | | |
| சலஞ்சலம் | | |

மருந்துகளில் சங்கு

சங்குபற்பம், சுண்ணம், செந்தூரம், மாத்திரை, வடகம், அஞ்சனம், உப்பு ஆகிய மருந்து வகைகளில் சங்கு ஒரு துணைப்பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது. உப்பு வகைகளில் சூடனுப்பு செய்ய சங்கு பயன்படுகிறது[1]. சூடனுப்பு என்பது ஒரு கற்பூர வகையாகும்[2]. துருசிக்குரு (ammoniac) நவச்சரம் எனப் பொருள்படும். துருசு என்பது மயில் துத்தமாகும். இதைக் களிம்பு (Rust) எனவும் அழைப்பர்[3].

---

[1] பிரேமா 2001

[2] *Tamil Lexicon* 1982:1559

[3] *Tamil Lexicon* 1982:1982

**சங்குபற்பம்**

பஸ்மம் (பற்பம்) என்பது பொடியைக் குறிக்கும்[1]. இதை கால்சியம் கலந்த உலோகம், மருந்துப்பொடி என அகராதி சுட்டுகிறது. ரசவாதம் மற்றும் மருந்துகளுக்குத் தேவையான திராவகங்கள், வாலைரசம், துருசுக்குரு, சூடனுப்பு, கற்பூர உப்பு, வெங்காரச் சுண்ணம், மெழுகுகளுக்குத் தேவைப்படும் குரு ஆகியன தயாரிக்கச் சங்கு பற்பம் பயன்படுகிறது[2].

**சங்குபற்பம் தயாரித்தல்**

குறிப்பிட்ட அளவு சங்கு தூளாக்கப்பட்டு நெல்லிக்காய் அல்லது ஆகாயத்தாமரை இலை அல்லது மருத்துவ நூல்களில் குறிப்பிடப்படும் பிற பொருள்களுடன் சேர்த்து அரைக்கப்படும். வேறு சில பொருட்களுடன் பானையிலிட்டுக் கவசமிட்டுச் சூரிய ஒளியில் காயவைத்துப் பின்னர் வரட்டியில் புடமிடச் சங்குபற்பம் கிட்டும். சங்குபற்பம் செய்யும் முறை *சித்தவைத்திய பதார்த்த குண விளக்கம்* என்னும் நூலில் காணப்படுகிறது[3].

3-பலம் வெள்ளைச் சங்கை இரும்பு உரலில் போட்டு இடித்துத் தூள் செய்து கல்வத்தில் போட்டுப் பிரண்டைச்சாறு விட்டு இரண்டு சாமம் அரைத்து 4, 5 வில்லையாகச் செய்து காயவைக்க வேண்டும். ஒரு அகலில் பரப்பி மூடிச் சீலைசெய்து 20, 25 வறட்டியில் புடமிடவேண்டும். பற்பத்தை எடுத்து மீண்டும் கல்வத்தில் போட்டு முன்போல் பிரண்டைச் சாறுவிட்டு அரைத்து முன்போல் 3-5 முறை புடமிடச் சங்குபற்பம் கிடைக்கும்.

வேறு முறையில், 3 பலம் சங்கைச் சிறு துண்டுகளாக நறுக்கி, ஒரு பீங்கானில் போட்டு கீழாநெல்லி மூலச்சாறு விட்டு 3 நாள் ஊறவைக்க வேண்டும். நான்காவது நாள்

---

[1] *Tamil Lexicon* 1982:2576

[2] *பிரேமா 2001:47-49*

[3] *கண்ணுசாமி பிள்ளை 1941:285-6*

சுத்தமாக நீர் விட்டு அலம்பி ஒரு குடுவையில் போட்டு மூழ்கும்படி கீழாநெல்லிச்சாறு விட்டு வாய்க்கு மூடியிட்டு 30 வறட்டியில் புடமிடவேண்டும். சரிவர வெளுத்துப் பூரிப்பு இல்லாதிருந்தால் மீண்டும் கல்வத்தில் போட்டு மேற்படி மூலிகைச் சாற்றைவிட்டு 2 சாமம் அரைத்து 4,5 வில்லைகளாகத் தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலை செய்து 25 வறட்டியில் புடமிடவேண்டும். வேளைக்கு 1-2 குன்றி எடை நெய் வெண்ணெய் முதலிய அநுபானங்களில் தினம் 2 வேளை கொடுத்துவர வாதகுன்மம், நீர்ச்சுறுக்கு, நீர் எரிச்சல் முதலியவை அகலும்.

சங்குபற்பத்தின் மருத்துவப் பயன் அறிய சில அறிவியற் சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன[1]. சிறிய வகைச் சங்குகள் எலுமிச்சைச் சாற்றில் மூன்று நாட்களுக்கு ஊறவைத்துச் சுத்திகரிக்கப்பட்டபின் கீழாநெல்லிச் சாறு, கற்றாழைச்சாறு, தாமரை இலைச் சாறு ஆகியவற்றில் தனித்தனியே ஊறவைத்து வெவ்வேறு வெப்ப நிலையில் புடமிட்டு வேதியல் சோதனைகள் செய்யப்பட்டன. வெள்ளெலிகளுக்கு இம்மருந்து செலுத்தப்பட்டுப் புண்ணாற்றும் ஆற்றல் ஆய்வு செய்யப்பட்டது. கீழாநெல்லிச் சாறுகொண்டு செய்த சங்குபற்பம் எலிகளின் குடற்புண்களை ஆற்றும் குணம் உள்ளதும், தாமரை இலைச் சாறு கொண்டு தயாரித்த வற்றிற்கு இரத்தத்தை உறையவைக்கும் சக்தியைக் கூட்டியதும் கண்டுபிடிக்கப்பட்டது[2].

சங்குபற்பத்தை வேறு சில பொருட்களுடன் உண்டால், அது தீர்க்கும் நோய் பற்றி *தேரையர் யமக வெண்பா* குறிப்பிடுகிறது[3].

---

[1] Sadique 1985:15-37

[2] Sadique 1985:15-37

[3] *பிரேமா 2001:47-49*

| அனுபானம் | பிணிவியூகம் |
|---|---|
| தேன் | வாதநோய் |
| வெந்நீர் | நடுக்கம் |
| குளிர்ந்த நீர் | பித்தம் |
| ஆளிவிரை ரசம் | கபநோய் |
| கடுகுமூலச் சாறு | சுரம் |
| நெற்கதிர் பசங்காய் சாறு | மூர்ச்சை |
| பசும் பால் | தும்மல் |
| பசுந்தயிர் | விக்கல் |
| மோர் | பித்தவாயு |
| வெள்ளைச் சர்க்கரை | குன்மம் |
| பழவெல்லம் | குளிருடன் கூடிய சீத ஏப்பம் |
| பனங்கள் | கண்ணோய்கள் |
| நெய் | கழலை |
| அறுகுமூலச் சாறு | வாத சுரம் |
| சோற்றுக் கொதிநீர் | பித்த சுரம் |
| கடம்ப மர சமூலச்சாறு | கப சுரம் |

சங்குபற்பம் போலியோ வகைப் பிணிகளை நீக்கும். கை கால்கள் துவண்டு விழுதல் இடுப்பு செயல்படாமல் இருத்தல் போன்ற குறைபாடுகளையும் அகற்றும். இதற்கு சங்கைத் தணலில் இட்டு, சுட்டு பற்பமாக்கிக் கொள்ளவேண்டும். உயிருள்ள நத்தைக் கூட்டிலுள்ள நீரில் ஒன்று அல்லது இரண்டு சிட்டிகை பற்பத்தைக் கலந்து கொடுத்தால் துரிதமான குணம் தெரியும்[1].

நாக சங்குபற்பம் போன்ற வேறு சில சங்குபற்பங்கள் செய்யவும் இது ஒருதுணைப் பொருளாகப் பயன்படுகிறது[2]. மேலும் இருநூறு ஆண்டுகட்கு முற்பட்ட *தன்வந்திரி குழந்தை வாகடம்* என்னும் நூலில் குழந்தைகளுக்கான நீரிழிவு, காமாலை போன்ற நோய்களைத் தீர்க்கப் பயன்படுத்தப்படும் கலியாணி லேகியம் என்னும் மருந்து தயாரிப்பிலும் சங்குபற்பம் கலக்கப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது[3].

---

[1] ஜனார்த்தனம் 1988:100

[2] பிரேமா 2001:51

[3] லலிதாம்பிகா 1984:80-1

சங்குச் சுண்ணம் (நீறு)

நீறுதல் என்பதைச் சுண்ணமாதல் எனவும், நீறு என்பதைச் சுண்ணாம்பு எனவும் அகராதி குறிப்பிடுகிறது[1]. சங்குத் துண்டங்களை வேலிப்பருத்தி பழச்சாறு அல்லது எலுமிச்சைச் சாறில் ஊறவைத்துப் பின்னர் உலரவைத்துப் புடமிட்டால் சங்குச் சுண்ணம் கிட்டும். சங்கு சுண்ணமாக மருந்துகளில் பயன்படுத்தப்படுகிறது. சவர்க்காரச் சுண்ணம், சீனச் சுண்ணம், வெங்காரச் சுண்ணம், துருசுச் சுண்ணம், உப்புச் சுண்ணம், வெடியுப்புச் சுண்ணம் போன்ற மருந்துகளில் சங்கு ஒரு துணைப் பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது[2]. சங்குச் சுண்ணத்துடன் எலுமிச்சைச் சாறு, தும்பைச்சாறு ஆகியவற்றை கலக்கிக் குடித்தால் சுரம், பாண்டு நீர்க்கட்டு, நீர்க்கோவை, மஞ்சள் காமாலை ஆகிய நோய்கள் நீங்கும்[3].

சங்கு செந்தூரம்

செந்தூரம் என்பது செந்நிறமுள்ள பஸ்மவகை ஆகும்[4]. இச்செந்தூரத் தயாரிப்பில் சங்கும் சேர்க்கப்படுகிறது. சுத்தி செய்த சங்கைச் சாறுவேளைச் சாற்றிலும், கற்றாழைச் சாற்றிலும் தனித்தனியே அரைத்துப் புடமெடுக்க சங்கு செந்தூரமாகும். சங்கு செந்தூரத்தைச் சில பொருட்களுடன் உண்டால் அது தீர்க்கும் நோய்கள் பற்றி *தேரையர் யமக வெண்பா* குறிப்பிடுகிறது[5].

| அனுபானம் | பிணிவியூகம் |
|---|---|
| வெள்ளைச்சாறு | உட்டண மேகம் |
| சந்தனக்குழம்பு | வாதம் |
| உள்ளி ரசம் | சுவேத சன்னி பித்தநோய் |

---

[1] *Tamil Lexicon* 1982:2317

[2] *பிரேமா 2001:37-76*

[3] *பரிமளா 1994:29*

[4] *Tamil Lexicon* 1982:1421

[5] *பிரேமா 2001:661*

| | |
|---|---|
| சாம்பிராணி இலைச்சாறு | வீக்கப் பண்டு |
| எலுமிச்சம் பழ ரசம் | வெண்குட்டம் |
| வெல்லம் | குன்மம் மதுமேகம் |
| நாவல் பழ ரசம்தேமல் | மேகம் |
| இலவங்கப் பட்டைச் சாறு | சன்னி தோடக்குளிர்மை |

மேலும் பூபதி செந்தூரம், முப்புச் செந்தூரம் என்னும் செந்தூரவகைகள் தயாரிக்கவும் சங்கு பயன்படுகிறது[1]. குரு என்பதற்கு வசூரி முதலிய கொப்புளங் காணும் நோய் எனவும் உலோகங்களைப் பேதிக்கும் சிந்தூரம் எனவும் பொருளுண்டு[2].

சங்கு மாத்திரைகள்

சங்க பஸ்மத்தால் செய்யப்படுவதும், பித்தகாச முதலிய கண்ணோய்களுக்கு உதவுவதுமான மாத்திரை *சங்குமாத்திரை* என்றழைக்கப்படுகிறது[3]. குளிகை என்பதும் மாத்திரையாகும்[4]. சூதமாத்திரை, சங்காதி மாத்திரை, ஏலாதி மாத்திரை, கண்காச மாத்திரை, வீரசங்கார மாத்திரை போன்ற மாத்திரைகளைத் தயாரிக்கவும் சங்கு பயன்படுகிறது[5].

சூத மாத்திரை

பாதரஸம் 1 பங்கு, காரியம் 2 பங்கு, துத்தம் 4 பங்கு, சங்குத்தூள் 8 பங்கு, தாமிரத்தூள் 16 பங்கு இவைகளை ஒரு சுத்தமான கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச் சாறு விட்டு நன்றாக அரைக்கவேண்டும். பின்னர் இதனை நீண்ட மாத்திரைகளாகத் திரட்டி வைத்தால் சூதமாத்திரை

---

1 பிரேமா 2001:50-1

2 *Tamil Lexicon* 1982:1013

3 *Tamil Lexicon* 1982:1230

4 *Tamil Lexicon* 1982:1040

5 வெங்கட்டராஜன் 1963:342-346, பிரேமா 2001:62-4

கிடைக்கும். ஓர் ஆண்டு சென்ற பின்னர்ப் பயன்படுத்தினால் கண் நோய்கள் தீரும்[1].

### சங்காதி மாத்திரை

அகத்தியர் இரண்டாயிரம் என்னும் நூலில் நயன காசத்திற்குப் பயன்படும் *சங்காதி மாத்திரை* செய்யும் முறை விளக்கப்பட்டுள்ளது. சங்கு, திப்பிலி, மிளகு, சுக்கு, தேவதாரம், அதிமதுரம், புங்கம் வித்து, பீதரோகிணி, துத்தம், மனோ சிலை இவற்றைச் சரியளவு எடுத்து நந்தியாவட்டைப்பூச் சாறுவிட்டு நன்றாக அரைத்து நீண்ட மாத்திரைகளாகத் திரட்டிக் காய வைத்து 2 மாதம் சென்றபின் தேனில் குழைத்துப் பயிற்றம் பருப்பளவு எடுத்துக் கண்களிலிடக் கண்களிலுண்டாகும் காசநோய்கள் தீரும்[2]. பீதரோகம் என்னும் கண் நோய்க்குப் பீதரோகிணி உருண்டை என்னும் மாத்திரையில் சங்கு ஒரு முக்கியக் கலப்புப் பொருளாகும்[3].

### அஞ்சனம்

அஞ்சனம் என்பதற்குக் கண்ணிலிடும் மருந்து என்ற பொருள் உண்டு[4]. படலம், பில்லம், குந்தம் முதலான கண்ணோய்களுக்குப் பஞ்சலோக அஞ்சனம் என்னும் குளிகை பயன்படுத்தப்படுகிறது. இக்குளிகையை தயாரிக்கச் சங்கும் கலக்கப்படுகிறது[5].

கொத்தாதி அஞ்சளம் என்னும் குளிகையில் சங்கு ஒரு முக்கியக் கலப்புப் பொருளாகும். இக்குளிகையை பற்பரோகம், கண்வலிகள் ஆகியனவற்றைப் போக்கப் பயன்படுத்துவர்[6].

---

1 வெங்கட்டராஜன் *1963:342*

2 வெங்கட்டராஜன் *1963:345*

3 வெங்கட்டராஜன் *1963:346*

4 *Tamil Lexicon* 1982:1040

5 வெங்கட்டராஜன் *1963:357-58*

6 வெங்கட்டராஜன் *1963:353-54*

கனகரெத்னாதி அஞ்சனம் என்னும் மருந்திலும் மற்ற பொருட்கள் சங்கு கலக்கப்பட்டு மாத்திரைகள் செய்தபின் மாதுளைப்பூ சாற்றிலுரைத்துக் கண்களிலிட வெள்ளெழுத்துக்கள் தீரும் எனவும், புழுவெட்டு எனும் நோய்க்கு வாழைப்பழச் சாற்றிலிட வேண்டும் எனவும் கையாந்தகரைச் சாற்றிலிழைத்துக் கண்ணிலிட தொண்ணூற்றாறு நோய்கள் நீங்கும் எனவும் *அகத்தியர் இரண்டாயிரம்* நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது[1].

**வடகம்**

அரைத்த மாவுடன் கறிச்சாமான்களைச் சேர்த்துச் சமைத்து வெயிலில் உலர்த்திய சிறு உருண்டை வடகம் எனப்படும்[2]. இம்முறையில் செய்யப்பெறும் சில மருந்துப்பொருட்கள் சிலவற்றில் சங்கு ஒரு பொருளாகப் பயன்படுகிறது.

**சங்குச்சார வடகம்**

சங்குச் சுட்டசாம்பல் எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து அதனுடன் சுத்தி செய்த சாதிலிங்கம், திப்பிலி, சுக்கு, கடுக்காய்த் தோல், மிளகு, தான்றித் தோல், நெல்லி வற்றல், கண்டந் திப்பிலி, வாய்விடங்கம், ஓமம், செவ்வியம், இந்துப்பு, கிராம்பு, பெருங்காயம் ஆகிய ஒவ்வொன்றிலும் 1¼ வராகனெடை, சீரகம் 2½ வராகனெடை எடுத்து இவைகளையிடித்துச் சேர்த்து, கல்வத்திலிட்டு இஞ்சிச்சாறு விட்டு நன்றாக அரைத்துச் சுண்டைக்காயளவுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர வைத்துக் கொள்ளவும். இந்த மருந்தை இஞ்சிச் சாற்றுடன் கொடுக்கவும் ஐந்துவித குன்ம ரோகங்களும் தீரும்[3].

குன்ம நோய்கள் தீர்க்கப் பயன்படும் வீரபத்திர வடகம், சிஞ்சாக்ஷார வடகம், சங்கஹார வடகம் ஆகிய

---

1 வெங்கட்டராஜன் *1963:355-57*

2 *Tamil Lexicon* 1982:3472

3 வெங்கட்டராஜன் *1963:193-95*

மாத்திரைகளில் சங்கும், சங்கு பஸ்பமும் மிக முக்கியச் கலவைப் பொருளாகும்[1].

### கார மருந்துகளில் சங்கு

வெங்காரம் என்பது புண்ணுக்கு இடும் ஒரு காரம். இது மருந்து சரக்கு வகையாகும்[2]. இக்கார மருந்துகள் தயாரிப்பில் சங்கும் பயன்படுத்தப்படுகிறது.

### மூலத்திற்குக் கார மருந்து

சீனாக்காரம், துருசு, சவுக்காரம், சங்குச்சுட்ட பஸ்பம், பாஷாணம்,கொடிவேலிப் பட்டை இவைகளைக் கல்வத்திலிட்டு பொடியாக்கி, 3 பணவெடை தண்ணீரில் குழப்பி, விரல் மூலத்தின் நுனியில் தடவினால் கரைந்து நீராய் விடும்[3].

### சங்கத் திராவகம்

திராவக வகைகளில் சவ்வீர திராவகத்தில் கலந்த சங்குபஸ்பம் மருந்தாகப் பயன்படுகிறது[4], சங்கத் திராவகம் என்பது ஒருவகை அமிலமே. இரசவாதத் தொழிலில் பயன்படுத்தப்படுவதுமன்றி வெள்ளியிலிருந்து தங்கத்தைப் பிரித்தெடுக்கவும் பயன்படுகிறது. சங்கத்திரவாகம் தீய சதையைப் போக்சவும், தேமல், படை, குட்டம் முதலியவைகளைப் போக்கவும் பயன்படுகிறது[5]. சங்குகளில் வேலைப்பாடுகள் செய்யப்பயன்படுவதால் சங்கத் திரவாகம் என்னும் பெயர் பெற்றிருக்கலாம். எனவே சங்கைக் கரைக்கும் சக்தியுள்ளதற்குச் சங்கத் திராவகமெனச் சிலர் கருதுகின்றனர்[6] பழஞ்சுவடிகளிலிருந்து தொகுக்கப்பட்ட மருத்துவ உலகிற்கு பயனளிக்கும் வகையில் அப்துல்லா சாயபு

---

1 வெங்கடராஜன் 1963:193, 195, 197.

2 *Tamil Lexicon* 1982:3766

3 வெங்கட்ட ராஜன் 1966:346

4 பிரேமா 2001:49-50

5 அப்துல்லா சாயபு 1978:261-6

6 அப்துல்லா சாயபு 1978:262

என்பவரால் எழுதப்பட்ட *இரசவாத சிந்தாமணி* என்னும் நூலில் சங்கத் திரவாகம் செய்யும் முறை விளக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் காய்ச்சல் வெடியுப்பு ஒரு பங்கு, படிகாரம் ஒரு பங்கு, நாட்டு நவாச்சாரம் கால் பங்கு ஆகியவற்றைத் தனித்தனியாகப் பொடி செய்து பின்பு ஒன்று சேர்த்து வாலையிலிட்டு அடுப்பேற்றி ஆறு மணிநேரம் வரை எரித்தல் வேண்டும். கீழையுள்ள பாத்திரம் சிவந்து, சிகப்பு நிறமுள்ள புகையுண்டான பின்பு வெள்ளை நிறப் புகையுண்டாகித் திராவகம் வடியும். இந்தத் திராவகமானது காரமான தாகையால் கை முதலிய உடலுறுப்புகளில் படாமல் துணி முதலியவற்றைச் சுற்றிக் கொண்டிருத்தல் வேண்டும். இதை 3 அல்லது 4 தடவைகள் மடக்கி மடக்கி பாகப்படுத்த அதில் இரும்பைப் போட்டால் இரும்பு கரைந்து போகும். இது தவிர பிற வகை சங்கத் திராவகங்களான காளசங்கத் திராவகம், மீளிச்சங்க திராவகம், அயசங்கத் திராவகம், காளகண்ட சங்கத் திராவகம் போன்றவற்றைத் தயாரிக்கும் முறைகளும் அந்நூலில் கூறப்பட்டுள்ளன[1].

**சங்கின் பிற மருத்துவப் பயன்கள்**

80 வகை வாதரோகங்கள், பக்க வாதம், சீதளத்தினாலேற்படும் நடுக்கு வாதம், முடக்கு வாதம், மெய்யசந்த வாதம், முகவாதம் முதலான வாதரோகங்கள் தீர்க்கப் பயன்படும் மருந்துகளில் சங்கு ஒரு முக்கிய பொருளாகும்[2].

வீக்கம், மலச்சிக்கலுக்குப் பயன்படும் சிறுகுறட்டை யெண்ணெய் என்னும் மருந்தில் சங்கு, தேங்காய், பூண்டு, சித்தாமணக்கெண்ணெய் ஆகியன சிறுகுறட்டையுடன் சேர்க்கப்படுகின்றன[3]. சங்குச் சுட்ட சாம்பல், சூலை நோய்க்குப் பயன்படுகிறது சங்கிலுள்ள சுண்ணாம்பானது

---

[1] அப்துல்லா சாயபு 1978:261-6

[2] வெங்கட்டராஜன் 1963:438-39

[3] வெங்கட்டராஜன் 1963:493

எலும்புருக்கு நோய்க்குச் சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. இரத்த கசிவைத் தடுக்கவும் பயன்படும். திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பகுதிகளில் உள்ள மீனவர்கள் சங்குத்தூளில் நல்லெண்ணெய், கொத்தமல்லி ஆகியன அரைத்துத் தலைவலிக்கு நெற்றியில் தடவுவார்கள்[1].

சங்கினைப் பவழம், பால்தூத்தம், பொரித்த துருசு இவற்றுடன் கலந்து நீர்விட்டுக் கழுவி உலர்ந்த பின் தூளாக்கிக் கல்வத்தில் இட்டு, தாய்ப்பாலும் அதன்பின் இளநீரும் விட்டரைத்து அதனை மெழுகுப் பதத்தில் எடுத்துத் தட்டி உலர்த்தி வெள்ளை மாத்திரைகளாக ஓர் ஆண்டு கழித்து உபயோகிக்க வேண்டும்[2].

சங்கினைச் சுத்த நீர் அல்லது தாய்ப்பாலில் இழைத்துப் பயன்படுத்த இரத்தப்படலம் முதலிய கண்ணோய் நீங்கும் என்று கூறப்பட்டுள்ளது. சங்கைத் தாய்ப்பாலில் தனியாகவோ கருவேப்பிலை சேர்த்தோ இழைத்து முகப்பரு மற்றும் கண்ணில் வரும் கட்டிகளுக்கு இட குணமாகின்றன[3].

ஜன்னி என்னும் குளிர்சுரத்திற்குப் பயன்படுத்தும் மருந்துகளில் ஒன்றான *ரத்த சந்தனாதி* உருண்டையில் பயன்படுத்தப்படும் பொருள்களுள் சங்குத்தூள் கலக்கப் படுகிறது[4].

செவியடைப்பு, தலைநோய், செவியிரைச்சல், மந்தக் காய்ச்சல் முதலானவற்றிற்கு தயாரிக்கப் பயன்படும் முக்கூட்டெண்ணெய் மருந்துப் பொருட்களில் சங்கும் ஒன்றாகும்[5].

மண்ணீரல் விரிவடையச் செய்ய டாக்கா பகுதியில் சங்கின் உடல் அகச்சுருள் பயன்படுத்தப்படுகிறது. அம்மைத்

---

1 *பிரேமா 2001:56*

2 *பரிமளா 1994:29*

3 *பரிமளா 1994:29*

4 *சந்திரன் மற்றும் நளினி சந்திரன் 1962:35*

5 *வாஸுதேவ சாஸ்திரி மற்றும் வெங்கட்டராஜன் 1958:3*

தழும்புகளை வெள்ளை வண்ணம் தயாரிக்கவும் சங்கு பயன்படுகிறது.

தைல வகைகளான இலிங்கத்தைலம், ஊன்பூச்சுத் தைலம் ஆகியன தயாரிக்கவும் சங்கு பயன்படுகிறது . மேலும் பாதரசம் கொண்டு தயாரிக்கப்படும் வாலைரசம் செய்யவும் சங்கு பயன்படுத்தப்படுகிறது[1].

சங்கினால் செய்யப்பட்ட ஒரு பொருள் உடனிருந்தால் கொப்புளம், முகப்பரு மற்றும் பிற நோய்கள் வராது என்ற நம்பிக்கை தமிழரிடையே இருந்தது. சங்கு மோதிரம் அணிவதால் உடல் கழுவப்படும்போது சங்கு நீரில் கரைந்து நோய் தீர்க்கும் குணம் உடல் முழுவதும் பரவுகிறது என்ற நம்பிக்கையும் உண்டு. புண், முகப்பரு உள்ள இடங்களில் சங்குப் பொருளைத் தேய்த்தாலோ, வைத்தாலோ விரைவில் குணமடையும் என்ற நம்பிக்கையும் உண்டு. தோல் வியாதிகள், கொப்புளம், கழலை, மூலநோய் ஆகிய நோய்கள் சங்கினால் சரிப்படுத்தப்படும் என்ற நம்பிக்கையும் இருந்து வந்துள்ளது. உடற் சூட்டைக் குறைக்கச் சங்கைப் பாலுடன் தேய்த்து வரும் பசையை இமைகளில் இட்டுக்கொள்வர்[2].

சூட்டுக்கொப்புளங்கள், ஆஸ்துமா, இருமல் ஆகியவற்றைத் தீர்க்க மென்மையான சங்குத்தூள் மருந்தாக உட்கொள்ளப்பட்டது. தூத்துக்குடிப் பரதவர்கள் சூடத்தைச் சற்று எரித்து, தாய்ப்பாலை அதன்மேல்விட்டுச் சுத்தமான சங்கு வைத்துத் தேய்த்து வரும் பசையைக் கண் எரிச்சலுக்காக இமையில் வைத்துக் கொள்வர்[3]. வயிறு மந்தமான நோயாளிக்குச் சங்குத்தூள் உட்கொள்ள அளிக்கப் படுகிறது. சங்கிலிருக்கும் கார்பனேட் வயிற்றில் உள்ள அதிக அமிலத்தை நீர்க்கச் செய்து வயிற்றைச் சுத்தப்படுத்துகிறது.

---

1 *பிரேமா 2001:50*

2 Hornell 1914:168

3 Hornell 1914:169

*குஜராத் பகுதியில் மஞ்சள் காமாலை, காசநோய், பக்கவலி, நரம்புத்தளர்ச்சி, கண்நோய் ஆகிய நோய்களுக்கு மருந்தாகச் சங்குத் தூள் பயன்படுத்தப்படுகிறது*[1].

*சங்கில் சில மருந்துப் பொருட்கள் இருப்பதால் நோய் தீர்க்கும் குணமுடையது எனக் கருதிக் குழந்தைகளுக்குச் சங்கினால் பால் வார்க்கும் வழக்கம் இன்றளவும் கிராமப் புறங்களில் உள்ளதென்பதை கீழ்வரும் ஒரு பாண்டி நாட்டுத் தாலாட்டுப் பாடல் கூறுகிறது*[2].

தங்கத் தலைப்பாவும் சாலுவையும் மேல் போட்டு
சங்கு கழுகி தளிகையிலே பாலாத்தி
சங்கு கொள்ள போன வுங்களம்மான் சந்திரரோ
சூரியரோ

*தலைவலிக்குச் சங்குப்பூவை அரைத்து நெற்றியில் தடவினால் தலைவலி மறைந்து போகும் என்ற நம்பிக்கை தூத்துக்குடி மக்களுக்கு உண்டு. சங்கின் வாய்மூடியும்* (operculum) *மருந்துப்பொருளாகப் பயன்படுகிறது*[3].

---

1 Hornell 1914:169

2 *வசந்த கல்யாணி 1994:95*

3 *பரிமளா 1994:26*

# 9. சங்கின் பிற பயன்கள்

சங்கு முன்னர் கண்ட பயன்களின்றி பின் வரும் காரணங்களுக்காகவும் பயன்படுத்தப்படுவதை சான்றுகள் மூலம் அறிய இயலுகிறது.

**சங்குச் சுண்ணம்**

சுண்ணாம்பு செய்ய சங்கு பயன்படுகிறது. இதனால் செய்யப்படும் சுண்ணாம்பு 'சங்குச்சுண்ணம்' எனவும் 'சங்கு வெள்ளை' எனவும் வழங்கப்படுகிறது. இவற்றுடன் மணல் கலந்து உருவாக்கப்படும் சங்குச் சுண்ணக்காரை 'சங்குவெள்ளை' எனவும், 'சுத்த வெள்ளை' எனவும் வழங்கப்பெறுகிறது. சங்குச் சுண்ணத்தாலான காரை சுவரில் ஒட்டும் பொருளாகப் பயன்படுத்தப்பட்டது[1]. சங்குச் சுண்ணம் மாவு போன்று மென்மையாக இருக்குமாதலால் சுவற்றில் பூசவும் பயன்பட்டது. சங்குச் சுண்ணம் சங்க காலத்திலிருந்து பயன்பாட்டில் இருந்துவந்துள்ளதைச் சங்கு சுடுவோரைக் கோடுசுடு நூற்றினர் என மதுரைக்காஞ்சி(401) கூறுவதிலிருந்து அறியலாம்[2]. மேலும் வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய கண்கவர் ஓவியங் கண்டு நிற்குநரும் (மணிமேகலை 3:130-1) என்னும் கூற்று சங்குச் சுண்ணம் கொண்டு தயாரிக்கப்பட்ட சுவற்றில் வரைந்த ஓவியத்தைக் குறிப்பதாகலாம்.

கம்ப இராமாயணம் பால காண்டத்தில் அயோத்தி நகரை வர்ணிக்கும்போது அங்குள்ள மாளிகையைச் சங்க வெண் சுதை யுடைத் தவள மாளிகை எனச் சங்குச் சுட்டு விளைந்த வெண்மையான சுண்ணாம்பைக் கொண்டு உருவாக்கப்பட்ட வெள்ளை மாளிகை என்னும் பொருளில்

---

[1] கதிரைவேற்பிள்ளை 1918

[2] சாமிநாதையர் 1986:382

கம்பர் சுட்டியுள்ளார்[1]. கி.பி.1246 ஆம் ஆண்டைச் சார்ந்த மூன்றாம் கோப்பெருஞ்சிங்கன் காலக் கல்வெட்டு சங்கு சுண்ணாம்பு சுடுவோருக்கு (சங்கடுவான்) நிலக்கொடை அளித்ததைக் குறிப்பிடுவதிலிருந்து கோயிலுக்குச் சங்குச் சுண்ணம் பயன்படுத்தப்பட்டதை அறிய இயலுகிறது[2]. இச்சான்றுகளிலிருந்து சங்குச்சுண்ணம் பண்டைய காலத்திலிருந்தே பயன்பாட்டில் இருந்து வருவதை அறியலாம்.

சங்குச்சுண்ணம் வெற்றிலையுடன் சேர்த்துச் சுவைக்கும் சுண்ணாம்பிற்கும் பயன்படுத்தப்பட்டது. தற்கால அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி, நாகரிக மாற்றங்களினால் சங்குச் சுண்ணத்திற்கு வரவேற்பின்றிப் போய்விட்டது.

சங்கு கிடைக்கும் கடற்கரையோரப் பகுதிகளிலும் வங்காளத்தில் சங்கு தொழிற்கூடப் பகுதிகளிலும் உடைந்த, புழு அரித்த சங்குகளைக் காளவாயில் சுட்டுச் சுண்ணாம்பு தயாரிக்கும் வழக்கம் தற்பொழுதும் உள்ளது. தமிழகப் பகுதியில் சங்குச் சுண்ணாம்பைக் கோயில்கள், புதிய வீடுகள் ஆகியவற்றின் சுவருக்குப் பூசுவதைச் சிறப்பாகக் கருதினர். சங்குகள் அனைத்தும் மேற்கு வங்கத்திற்கு ஏற்றுமதி செய்யப்படுவதால் ஒரு நூற்றாண்டுக்கு முன்புவரையே சங்குச் சுண்ணாம்பு தமிழகத்தில் செய்யப்பட்டது எனலாம். கொற்கையில் காணப்படும் பழைய கோயிலில் சங்குக் சுண்ணக் காரையில் கட்டியதற்கான சான்றுகள் உள்ளன[3]. முழுமையான சங்கின் உயர்ந்த மதிப்பின் காரணமாகச் சங்கின் உடைந்த பகுதி அல்லது பூச்சிகளால் துளையிடப்பட்ட சங்குகளைக் கொண்டுதான் சங்குச்சுண்ணம் தயாரிக்கப் படுகிறது. டாக்காவில் சங்குத் தொழிற் கூடங்களில் உருவாகும் சங்குக் கழிவுகள் போக்ரா (Bogra) மாவட்டத்திற்குப் படகில் ஏற்றிச் செல்லப்பட்டு மஹாராஜன்

---

[1] சுப்பிரமணியன் *1987:147*

[2] *South Indian Inscriptions* viii:50

[3] Hornell 1914:168

(Mahajan) மற்றும் பூரிகுஞ்ச் (Burigunje) என்னும் ஊர்களில் கொட்டி வைக்கப்பட்டு அங்குள்ள சுண்ணாம்பு சுடுவோரால் விலைக்கு எடுத்துச் செல்லப்பட்டு சுண்ணம் தயாரிக்கப்பட்டது.

கடற்பாசிகள்(sponges), பாலிசேடஸ் (Polychaetous) எனப்படும் முட்கள் கொண்ட புழுக்கள் துளைகளிட்ட சங்குகள் வளையல்கள் செய்ய ஏற்றவையல்ல[1]. இப்புழுக்கள் அரித்த சங்குகளும் சுண்ணம் செய்யப் பயன்படுகின்றன. சங்கு குளிப்போரில் சிலர் சிறிய அளவினதான (60 மிமீ வட்டத்திற்கு குறைந்த) சங்குகளை மறுபடியும் கடலில் விடாமல் சங்குச் சுண்ணாம்பு தயாரிப்பதற்காக விற்று விடுகின்றனர்[2]. கரைகளில் அலைகளால் ஒதுக்கப்பட்ட சங்குகளுக்கு முக்கியத்துவம் இல்லை என மெக்லீன் தெரிவிக்கிறார்[3]. இச்சங்குகளைச் சேகரித்தும் சுண்ணம் செய்தனர். கடல் சிப்பிகளில் சுண்ணாம்பு தயாரிப்போர் கடையர்பிரிவைச் சார்ந்தோராக இருந்தனர்[4].

### ஊதுபத்தி தயாரிப்பில் சங்கு

சங்கின் செவுள் மூடிகள் (நாகணம்) மாவாக்கப்பட்டு ஊதுபத்தியின் மூல நறுமணப் பொருள்களுடன் கலக்கப்பட்டு ஊதுபத்திகள் தயாரிக்கப்படுகின்றன. செவுள் மூடிகள் அனைத்தும் கர்நாடக மாநிலத்திற்குக் கொண்டு செல்லப்படுகின்றன. குஜராத் பகுதிகளில் சங்கின் செவுள் போன்ற கடின கால்பகுதி எடுக்கப்பட்டு தனியாருக்கு விற்கப்படுகிறது[5].

### உணவு

பண்டைக் காலங்களில் சங்குச் சதை உணவாகப் பயன்பட்டதற்கான சான்றுகள் இல்லை. 1877ஆம் ஆண்டில்

---

[1] Sreenivasan 1991:87

[2] Sreenivasan 1991:86

[3] Maclean 1893:187

[4] Simon Casie Chitty 1934:51

[5] Pota and Patel 1991:449

நிகழ்ந்த பெரும்பஞ்சத்தில் சங்குச்சதை உணவாகப் பயன்பட்டது[1]. இக்காலங்களில் இருந்தே சங்கை உணவுப் பொருளாகப் பயன்படுத்தத் தொடங்கப் பட்டிருக்கலாம் எனக் கருதமுடிகிறது. ஒரு சங்கின் எடையில் அதன் மெல்லுடல் 10-15 விழுக்காடுகளே இருக்கும்[2]. சங்கில் உள்ள சத்துப் பொருட்களின் அளவு பற்றிப் பிற நூல்களில் காணலாம்[3]. சங்கு கடலில் எடுக்கப்பட்டபின் படகு கரைக்கு வரும்போதே சங்கு குளிப்போர் சங்கின் மெல்லுடல் மற்றும் செவுள் மூடி ஆகியவற்றைக் கூரிய இரும்புக் கம்பிகொண்டு பிரித்தெடுப்பர். அதன் உச்சிப்பகுதியில் உள்ள சதை தவிர மற்றவை வெளியே எடுக்கப்படும். வெளியே எடுக்கப்பட்ட மெல்லுடல் *சங்குச்சதை* எனப்படும். தூத்துக்குடிப் பகுதிகளில் செவுள்மூடி தனியே பிரிக்கப்பட்டுச் சங்குச்சதை சுடுநீரில் வேக வைக்கப்பட்டு துண்டங்களாக்கப்படும். பின்னர் சூரிய ஒளியில் காய வைத்து வற்றலாக்கப்படும. இவற்றை எண்ணெயில் வறுத்து உணவுடன் கலந்து கொள்வர். எனினும் இவ்வுணவு தரம் குறைந்ததாகவே மீனவ மக்களிடையே கருதப்படுகிறது என்பதைப் பின்வரும் நாட்டுப்புறப்பாடலால் அறியமுடிகிறது.

ஆமை தின்னி தூமை தின்னி
அடைக்கோழி முட்டை தின்னி
சங்கு வளலை தின்னி
இப்போ சருவாதடா என்னோட[4]

எனவே சங்கு உணவாக மிகச்சிலராலேயே பயன்படுத்தப்படுகிறது என்பதை அறிய முடிகிறது. அரபிக்கடல் பகுதியில் கொங்கணக்கடற்கரையில் கிளிஞ்சல்களை உணவாகக் கொள்ளும் வழக்கம் உண்டாகையால் குஜராத் பகுதிகளில் சங்குச்சதைகளையும்

---

[1] Hornell 1914:25

[2] சுந்தரராஜ் மற்றும் கிருஷ்ணதாஸ் 1989:158

[3] சுந்தரராஜ் மற்றும் கிருஷ்ணதாஸ் 1989:162 & பரிமளா 2003

[4] முருகானந்தம் 1990: 245

உண்ணும் வழக்கம் உள்ளது என்பதை அறியமுடிகிறது. இதை மீனவர்கள் கொதிக்க வைத்து உணவாகப் பயன்படுத்துவர்[1].

சங்காடுதல்

சங்கின்மேல் பகுதி வழுவழுப்பாக இருப்பதால், புடவை, காகிதம் ஆகியவற்றை மினுங்கச் செய்ய அவற்றின் மீது சங்கை அழுத்தித் தேய்ப்பர். இதற்குச் சங்காடுதல் எனப்படும்[2].

ஓலைச்சுவடிகள் தயாரிக்க தகுதியான காய்ந்த ஓலைகளை அளவாக நறுக்கிப் பதமாக நீரில் வேகவைத்துப் பின்னர் நிழலில் உலர்த்தி, வழவழப்பான கூழாங்கல் அல்லது சங்கு கொண்டு அழுத்தித் தேய்த்துப் பதப்படுத்தி செம்மையான எழுதும் பரப்பைக் கொண்ட ஏடுகளை உருவாக்கினர்[3].

சங்குக் கழிவுகள்

சங்குக் கழிவுகள் சுண்ணம் தயாரிக்கப் பயன்படுவதோடல்லாமல் பெயிண்ட், எனாமல், ஸ்நோ, பாலிஷ், பவுடர் ஆகியன செய்யவும் உதவுகின்றன[4].

---

[1] Pota and Patel 1991:449

[2] *Tamil Lexicon* 1982:1225

[3] பூமிநாகநாதன் *2001:173*

[4] முருகானந்தம் *1990:81*

# 10. முடிவுரை

சங்கு என்று அழைக்கப்படும் வெண்சங்கு, இந்திய, இலங்கைக் கடற்பகுதியில் மட்டுமே கிட்டுவதாகும். இவை இந்தியக் கடற்பகுதியில் மன்னார் வளைகுடா, பாக் விரிகுடா, கட்ச் வளைகுடா, கேரளக் கடற்கரையின் தென்பகுதி முதலிய இடங்களில் வாழ்கின்றன. எனினும் குறிப்பாகத் தமிழகக் கடற்பகுதியில் அதிக அளவில் கிடைக்கின்றன. சங்கின் உயரம், அகலம் ஆகியனவற்றைக் கணக்கில் கொண்டு ஐந்து சிறு பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். அவை 1. அப்டியூசா 2. அக்யூடா 3. குளோபோசா 4. கொமொரினெசிஸ் 5. பூயூசஸ் ஆகியனவாகும். கடற்பகுதியில் உள்ள பெரிய நகரங்களை மையமாகக் கொண்டு சங்கெடுத்தல் தொழில் நடைபெற்று வருகிறது. இந்தியக் கடற்பகுதியில் எடுக்கப்படும் சங்குகள் பெருமளவில் மேற்கு வங்காளத்திற்கு அணிகலன்கள் செய்வதற்காக ஏற்றுமதி செய்யப்பெறுகின்றன.

சங்ககாலம் முதற்கொண்டு இக்காலம் வரை பரதவர் குலத்தினர் சங்கெடுத்தல் தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். இடைக்காலத்தில் தமிழகக் கடற்கரைப் பகுதியில் குடியேறிய இசுலாமியரும் சங்கெடுக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். தூத்துக்குடிப் பகுதியில் வசித்த பரதவர்கள் அதிக எண்ணிக்கையில் போர்த்துக்கீசியரால் கிருத்துவ சமயத்திற்கு மாற்றப்பட்டனர். இவர்களும் சங்கெடுக்கும் தொழில் புரிகின்றனர். சங்குக் குளிக்கும் தொழில் நுட்பம் சங்க காலம் தொட்டு இன்றுவரை மாற்றமின்றி நடைபெற்று வருகிறது. மரபுவழியாக நிகழ்ந்து வந்த சங்கெடுத்தல் தொழிலில் ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்கு முன்னர், முகக்கண்ணாடி, துடுப்புத்தட்டு ஆகியன அறிமுகப்படுத்தப்பட்டன. சங்குக் குளிப்போர் காற்றுக் குப்பியின் உதவியின்றி ஆழமான பகுதிக்குச் சென்று சங்குகளைத் தமது வலைகளில் சேகரிப்பர். கட்ச் வளைகுடாவில் சங்கெடுக்கும் முறை தமிழகப்பகுதி முறைகளிலிருந்து வேறுபடுகிறது. கட்ச்

வளைகுடாவில் குறைவோதக் காலங்களில் கடலில் நடந்து சென்று சங்கு சேகரிக்கப்படுகிறது.

சங்கு எடுத்தல் தொழில் அப்பகுதியைச் சார்ந்த மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. காலனியாதிக்க காலங்களின் காலனியர்களே தமது ஆதிக்கத்தின் கீழ் அவ்வுரிமையை வைத்திருந்தனர். தற்பொழுது சங்கெடுத்தல் மாநில அரசுகளின் கட்டுப்பாட்டின் கீழ் உள்ளது.

சங்கு என்பது வடமொழியிலிருந்து பிறந்த சொல்லாகும். சங்க காலத்தில் வலம்புரி, வளை, கோடு, பணிலம், நந்து, நாகு என்றே அது அழைக்கப்பட்டது. சிலப்பதிகாரத்தில் முதன்முதலில் சங்கு என்ற சொல் வழக்கு காணப்படுகிறது. இடைக்காலத்தில் சுரிமுகம், கம்பு, சலஞ்சலம், பாஞ்சசன்னியம், கம்புள், மனவு, ஏறு, வாரணம் ஆகிய சொற்கள் சங்கைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டன. சங்குகளின் வணிகப் பெயர்கள் அவை கிட்டும் கடற்பகுதியைக் கொண்டு அழைக்கப்பட்டன. காட்டாக, *தூத்திக்குடி* என்னும் சங்கு வகை தூத்துக்குடி கடற்பகுதியில் கிடைப்பதாகும். சூர்தி என்னும் சங்கு வகை குஜராத் மாநிலம் சூரத்திலிருந்து பெறப்படுபவையாகும். சங்கில் முத்து பிறக்கும் என்பதும், வலம்புரி தானே முழங்கும் என்பதும் சங்கு பற்றிய சில தொன்மங்கள் அறிவியற் கோட்பாட்டின்படி உண்மையல்ல என்பதும் தெரியவருகிறது.

சிந்து சமவெளி நாகரிகக் காலத்திலிருந்து அணிகலன்கள், விளையாட்டுப் பொருட்கள், அடுக்களைப் பாத்திரங்கள் ஆகியனவற்றைச் செய்யச் சங்குகள் பயன்பட்டன. பெரும்பாலும் வளையல்கள் செய்ய இவை பயன்படுத்தப்பட்டன. சங்கு மணிமாலைகளும், மோதிரங்களும், தொங்கணிகளும் இவற்றில் செய்யப்பட்டன. தக்காணப் பகுதியில் இரும்புக் காலத்திலும் சங்கு வளையல் பெருமளவு பயன்படுத்தப்பட்டது. தமிழகத்திலும் இரும்புக் காலத்திலும் அதைத் தொடர்ந்த சங்க காலத்திலும், வளையல்கள், தொங்கணிகள், சங்கு மணிமாலைகள் ஆகியன பயன் படுத்தப்பட்டன. வலம்புரிச் சங்கில் செய்த வளையல்

உயர்வாகக் கருதப்பட்டது. இடைக்காலம் வரை சங்கணிகலன்களுக்குத் தமிழகத்தில் நல்ல வரவேற்பிருந்தது. கண்ணாடி வளையல்களின் வருகையால் இதன் முக்கியத்துவம் குறைந்து இருக்கலாம். மேற்கு வங்கப் பகுதிகளில் இன்றும் சங்கில் செய்யப்பெற்ற வளையல்களுக்கு மிக்க வரவேற்புள்ளது. வங்காளத்தில் செய்யப்பெறும் வளையல்கள் பல்வேறு வகைகளைக் கொண்டவை.

அணிகலன்களைச் செய்யும் தொழில்நுட்பம், சிந்து சமவெளிக் க லத்திலிருந்து . பெரிய மாற்றங்களின்றித் தொடர்ந்து வந்துள்ளது. ஆயினும் அவைகளை அறுக்கப் பயன்படுத்தப்பட்ட கருவிகள் மாற்றம்பெற்று வந்துள்ளன. 1960கள் வரை வங்காளப் பகுதியில் வளைவான தோற்றம் கொண்ட ரம்பங்கள் வளையல்கள் அறுக்கப் பயன்பட்டன. வங்கப்பகுதியில் சங்கு வளையல் செய்யும் தொழில்நுட்பம் தமிழகப் பகுதியின் தொழில்நுட்பத்துடன் ஒத்துள்ளது. சங்கறுக்கும் தொழில் நுட்பம் குறித்த இலக்கியச் சான்று தமிழில் மட்டுமே உள்ளது. *திருவிளையாடற்புராணத்தில்* சங்கறுக்கும் தொழில் நுட்பம் குறித்த கருத்துக்கள் காணப்படுகின்றன. இடைக்காலத்திற்குப் பின்னர் சங்கு வளையல்களின் முக்கியத்துவம் குறைந்துபோனதால் ஒருசில தொழிலகங்கள் மட்டும் தமிழகத்தில் உள்ளன. தற்பொழுது இராமேஸ்வரம் பகுதியில் உள்ள தொழிற்கூ: -ங்களில் சங்கறுக்க இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

சங்க காலத்தில் சங்கு சமய முக்கியத்துவம் பெற்றதாகச் சான்றுகள் இல்லை. சமுதாய முக்கியம் வாய்ந்த விழாக்கள், ஊர்வலங்களிலும், காலை புலரும் நேரத்திலும், மன்னரின் வருகையைக் குறிப்பதற்கும் சங்கொலி முழங்கியது. சங்க காலத்தின் இறுதிப் பகுதியில் வைணவ சமயப் பரவலாக்க காலங்களில் திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகச் சங்கு சித்திரிக்கப்பட்டதோடு, சிற்பங்களிலும் இடம்பெறாலாயின. சிவனின் காதணியாகவும் சங்கு சித்திரிக்கப்பட்டது. துர்க்கை, ஹரிஹரன், சுப்பிரமணியன், வீரபத்திரர், சப்த மாதரில் காயத்ரி தேவி, சமண முனிவரான

நேமிநாதர் ஆகிய சிற்பங்களில் ஒரு கரத்தில் சங்கு வைத்திருப்பது சுட்டப்பெற்றது.

சங்கு உருவம் கொண்ட பொருட்களுக்குச் சங்கு என்ற அடைமொழி பயன்படுத்தப்பட்டது. இவ்வடிப்படையில் சங்கு போன்ற உருவமுடைய கைரேகை சங்கரேகை என வழங்கப் பெற்றது. ஆடற்கலையில் சங்கு முத்திரை என்னும் முத்திரைவகை காட்டத் தொடங்கப்பெற்றது. சங்கில் செய்யும் திருமுழுக்காட்டு மிகவும் முக்கியமானதாகக் கருதப்பட்டது. அரிதாகக் கிட்டும் வலம்புரிச் சங்கு கோவில்களுக்கு நன்கொடையாக வழங்கப்பெற்றது. கல்வெட்டு, ஓவியம், நாணயம் ஆகியவற்றில் சங்குருவம் பொறிக்கப்பட்டது. சங்கு நாணயமாகவும் பயன்படுத்தப் பட்டது. குபேரனுடைய நிதியில் சங்கநிதி, பத்மநிதி போன்றன முக்கியமானவையாகக் கருதப்பட்டன. கோயில்களில் சங்கநிதிச் சிற்பங்களும் செதுக்கப்பட்டன. வைணவர்கள் சங்கு, சக்கர முத்திரைகளைச் சூடேற்றப்பட்ட உலோக முத்திரைகொண்டு தமது உடம்பில் இட்டுக் கொண்டனர். மேலும் சங்கு மங்கலப் பொருளாகக் கருதப்பட்டது. கோயில்களுக்கு நன்கொடையாக வழங்கப்படும் சில சங்குகளில் எழுத்துப் பொறிப்புகள் செய்யப்பெற்றன. வீடுகட்டத் தொடங்கும்போது சங்கு மற்றும் பிற பொருட்களை வைத்து வணங்கப்பெற்றுக் கட்டடம் எழுப்பப்பட்டது. வளமை குறைந்த வீடுகளில் அடிக்கட்டுமானத்தில் வழிபடப்பட்ட சங்கு வைக்கும் வழக்கம் இன்றளவும் உள்ளது. கால்நடைகளைக் கண்ணேறு மூடநம்பிக்கைகளிலிருந்து காக்க அவற்றின் கழுத்திலோ கொம்பிலோ சங்கு கட்டும் வழக்கம் தொடர்ந்து இருந்து வருகின்றது. சங்க காலத்திலிருந்து இன்றுவரை குழந்தைக்கு அணியப்படும் ஐம்படைத்தாலியில் சங்குருவமும் ஒன்றாகும்.

சங்கின் தலைப்பகுதியில் துளைசெய்து காற்றை வேகமாகச் செலுத்தினால் மட்டுமே சங்கொலி பிறக்கும். சங்கில் ஒலி எழுப்புதல் மிகப் பழைமையான வரலாறு கொண்டது. உலகில் பெரும்பாலான கடற்கரைப் பகுதிகளில்

உள்ள மக்கள் சங்கை ஒலியெழுப்பும் கருவியாகப் பயன்படுத்தினர். சங்க காலத்தில் சங்கு இசைக் கருவிகளில் ஒன்றாக விளங்கியது. ஒலி ஏற்ற இறக்கங்களைச் சங்கில் செய்வது கடினம் என்பதால் பிற்காலங்களில் இவற்றின் இசை முக்கியத்துவம் குறைந்தது. போர் அறிவிப்பு, போரில் வெற்றி, மன்னர் வருகை திருக்கோயிலில் ஒலித்தல், ஊர்வலங்கள், திருமணம், இறுதி ஊர்வலம் ஆகிய காரணங்களுக்காகச் சங்கொலிக்கப்பட்டது. பண்டையச் சிற்பங்களில் சங்கூதும் காட்சி பல இடங்களில் காணப்பெறுகிறது. சங்கு கப்பல்களில் சைகை செய்யும் ஒலிக்கருவியாகப் பயன்பட்டது. பிச்சாண்டிகளும் சங்கூதிப் பிச்சையெடுக்கும் வழக்கம் உள்ளது. சங்கூதும் தொழிலைப் பல குலத்தோர் புரிந்துள்ளனர். பெரும்பாலும் அவர்கள் கீழ்நிலையிலிருந்தனர். திருமணச் சடங்கில் வங்கப் பகுதியிலும் தமிழகத்தில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் இனத்திலும் பெண்கள் சங்கூதுவர். சூரிய கிரகணத்தின் போதும், அறுவடை நாட்களிலும், சங்கொலிப்பது உலகில் பிற பகுதிகளில் இருந்துள்ளது.

சங்கின் மருத்துவப் பயன்கள் ஏராளம். சங்கில் செய்யப் பெறும் மருந்துகள் சிறுநீரை அதிகமாக்கும் தன்மையையும், தாதுக்களி[illegible]லத் தணித்து அவைகளைத் துவளச் செய்யு[illegible]யும் கொண்டன. சங்கு பற்பம், சங்கு சுண்ணம், சங்கு செந்தூரம், சங்கு மாத்திரை, சங்கு வடகம், அஞ்சனம், உப்பு ஆகியன சங்கு கலந்த மருந்துப் பொருட்களாகும். இவை சித்த மருந்துகளாகும். இவை பற்றிய அறிவியற் சோதனைகள் செய்யப்பெறின் மருத்துவ உலகில் இவை முக்கியத்துவம் பெறும் எனலாம்.

சங்கு சுவரில் பூசும் சுண்ணாம்பு செய்யவும், செவுள் மூடிகள் ஊதுபத்தி செய்யவும், சங்குச் சதை உணவுப் பொருளாகவும் பயன்படுகிறது. புடைவைகளை மினுங்கச் செய்யவும், எழுத தயாரிக்கப்படும் ஓலைகளின் மேற்புறத்தை வழுவழுப்பாக்கவும் சங்கு பயன்படுத்தப்படுகிறது. சங்கு, குழந்தைகளுக்கு பால் புகட்டும் பாலடை செய்யப் பயன்படுகிறது. சங்கு குறித்த பழமொழிகளும், நாட்டுப்புறப் பாடல்களும் தமிழகத்தில் இன்றும் வழங்கப் பெறுகின்றன.

# அட்டவணை 1. நிகண்டுகளில் சங்கின் பெயர்

| திவாகரம் | பிங்கலம் | கயாதரம் | பாரதி தீபம் | சூடாமணி | அகராதி | ஆசிரியம் | நாமதீபம் |
|---|---|---|---|---|---|---|---|
| நந்து | நந்து | நத்து (நந்து?) | நந்து | நந்து | --- | நந்து | நந்து |
| பணிலம் | பணிலம் | பணிலம் | பணிலம் | பணிலம் | பணிலம் | பணிலம். | பணிலம் |
| வளை | வளை | வளை | வளை | வளை | வளை | வளை | வளை |
| நாகு | நாகு | நாகு | நாகு | நாகு | நாகு | நாகு | நாகு |
| சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் | சுரிமுகம் |
| கம்பு | கம்பு | கம்பு | கம்பு | கம்பு | கம்பு | கம்பு | கம்பு |
| கோடு | கோடு | கோடு | கோடு | கோடு | கோடு | கோடு | கோடு |
| சங்கு | சங்கு | சங்கு | சங்கு | சங்கு | சங்கு | சங்கு | சங்கு |
| --- | சுத்தி | --- | --- | சுத்தி | சுத்தி | சுத்தி | சுத்தி |
| --- | வண்டு | --- | --- | வண்டு | வண்டு | வண்டு | வண்டு |
| --- | வெள்ளை | --- | --- | வெள்ளை | வெள்ளை | --- | வெள்ளை |
| --- | இடம்புரி | --- | --- | இடம்புரி | இடம்புரி | இடம்புரி | இடம்புரி |
| வலம்புரி | வலம்புரி(கொக்கரை) | வலம்புரி | வலம்புரி | வலம்புரி | வலம்புரி | வலம்புரி | வலம்புரி |
| --- | --- | வாரணம் | வாரணம் | வாரணம் | --- | வாரணம் | வாரணம் |
| சலஞ்சலம் | சலஞ்சலம் (பணிலம்) | சலஞ்சலம் | சலஞ்சலம் | சலஞ்சலம் | சலஞ்சலம் | சலஞ்சலம் | சலஞ்சலம் |
| பாஞ்ச சன்னியம் | பாஞ்ச சன்னியம் | --- | --- | பாஞ்ச சன்னியம் | --- | பாஞ்ச சன்னியம் | பாஞ்ச சன்னியம் |
| --- | தரா | --- | --- | --- | கம்புள், | --- | --- |
| --- | | --- | --- | --- | சங்கம் | --- | --- |
| --- | | --- | --- | --- | மனவு,ஏறு | --- | --- |

## அட்டவணை 2. இந்தியாவில் சங்கு வளையல்கள் கிடைத்த இடங்களும், காலமும்

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| மோஹஞ்சதாரோ | -- | பாகிஸ்தான் | ஹரப்பா | மணிகள், பந்து, வண்டி | Mackay E.J.H., 1937 |
| ஹரப்பா | மாண்ட்கோமரி | பாகிஸ்தான் | ஹரப்பா | மணிகள், பந்து, வண்டி | *AI 1947* Vol. 3. பக். 123-125<br>Vat 1974 பக். 37-469 |
| ரூப்பர் | அம்பாலா | பஞ்சாப் | ஹரப்பா | --- | IAR 1954-55 பக்.9 |
| லோத்தல் | அகமதாபாத் | குஜராத் | ஹரப்பா | மணிகள் | IAR 1954-55பக்.12<br>IAR 1956-57 பக்.13-16 |
| ஓரியோ திம்போ | பாவநகர் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | IAR 1989-90 பக்.14 |
| பத்ரி | பாவநகர் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக்.63-80 |
| நக்வதா | சுரேந்திரநகர் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | IAR 1989-90 பக்.26 |
| சுர்கோததா | கட்ச் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக். 63-80 |
| ஷிகார்பூர் | கட்ச் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | IAR 1987-88 |
| நாகேஷ்வர் | ஜாம்நகர் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக்.63-80 |
| குண்டாசி | ராஜ்கோட் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக்.63-80 |
| பகஸ்ரா | ராஜ்கோட் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக்.63-80 |
| மால்வான் | சூரத் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | Arati 1998 பக்.63-80 |
| நௌதத்தோலி | ---- | மத்தியப் பிரதேசம் | கி.மு.1500 | மணிகள் | Sankalia, H. D. et. al., 1971, பக். 353, 363 |
| காலிபங்கன் | கங்காநகர் | இராஜஸ்தான் | கி.மு. 2000 - 300 | --- | IAR 1960-61 & 1963-64 பக். 39 |

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| தௌலத்பூர் | குருஷேத்திரம் | ஹரியானா | பிற்கால ஹரப்பா | --- | IAR 1976-77 பக்.19 & IAR 1976-77 |
| வெர்சஸ் | தூலே | மகாராஷ்டிரா | பிற்கால ஹரப்பா | --- | IAR 1978-79 பக்.16 |
| பிரகாஷ் | தூளியா | மகாராஷ்டிரா | கி.மு. 1700-1300 | --- | AI 1964 Vol.20-21 பக். 116-117 |
| எரான் | சாகர் | மத்திய பிரதேசம் | கி.மு. 1500 | --- | IAR 1960-61 பக். 17 IAR 1961-62 பக். 24-25 |
| ரோஜ்டி | ராஜ்கோட் | குஜராத் | பிற்கால ஹரப்பா | சங்குப் பட்டறை | IAR 1962-63 பக்.8 IAR 1982-83 பக்.28 |
| இனாம்கான் | பூனா | மகாராஷ்டிரம் | ஜோர்வே | --- | IAR 1968-69 Vol. பக்.18-19 |
| ரங்பூர் | சுரேந்திரநகர் | குஜராத் | பிற்கால ஹரப்பா | மணிகள் | AI 1962-63 Vol.18-19 பக்.142-143 |
| ஓரியோ திம்போ | பாவநகர் | குஜராத் | ஹரப்பா | சங்குப்பட்டறை | IAR 1989-90 பக்.19 |
| ஹஸ்தினாபுரம் | மீரட் | உத்திர பிரதேசம் | கி.மு. 1000-800 | --- | AI 1954-55 Vol.10-11 பக். 90-91 |
| மாஸ்கி | ரெய்ச்சூர் | கர்நாடகம் | கி.மு. 1000-400 | மணிகள், சங்குப்பட்டறை | AI 1957 Vol. 13 பக். 10 |
| ஹுலாஸ் | ஷரன்பூர் | உத்திர பிரதேசம் | பிற்கால ஹரப்பா | --- | IAR 1979-80 பக்.82 |
| ராமபுரா | கர்நூல் | ஆ. பிரதேசம் | பெருங்கற்காலம் | மணிகள் | IAR 1981-82 பக்.3 |
| மதுரா | மதுரா | உத்திரப் பிரதேசம் | வடக்கத்திய கருப்பு ஓடுகள் | உடைந்த சங்கு | IAR 1975-76 பக்.55 |

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| தேயூர் | பூனே | மகாராஷ்டிரம் | பெருங்கற்காலம் | மணிகள் | IAR 1969-70 பக்.27-28 |
| பெத்த மாற்றூர் | மஹபூப்நகர் | ஆந். பிரதேசம் | பெருங்கற்காலம் | --- | IAR 1977-78 பக்.12 |
| ஜவ்கதா | கஞ்சம் | ஒரிஸ்ஸா | இரும்பு காலம் | மணிகள் | IAR 1956-57 பக்.30-31 |
| ஹஸ்தினாபுரம் | மீரட் | உத்திர பிரதேசம் | கி.மு. 600-300 | --- | AI எண் 10 & 11 1954-55 பக். 90-91 |
| எரான் | சாகர் | மத்திய பிரதேசம் | கி.மு. 600-300 | --- | IAR 1960-61 பக். 18<br>IAR 1961-62 பக். 24-25 |
| தத்வா | சூரத் | குஜராத் | கி.மு. 600-200 கி.பி. | --- | Metha and Chowdhary 1975 பக். 20-23 |
| கயத்தா | உஜ்ஜைனி | மத்தியப் பிரதேசம் | கி.மு. 600-200 கி.பி. | --- | Ansari and Dhavilikar 1975 பக். 115,137 |
| பிரகாஷ் | தூளியா | மகாராஷ்டிரா | கி.மு. 600-100 | --- | AI எண் 20 & 21 1964-65 |
| பாகல் | கிழக்கு கண்தேஷ் | மகராஷ்டிரா | 300 கி.மு.- 100 கி.பி. | --- | IAR 1956-57 பக்.17-18 |
| துமெய்ன் | குணா | மத்திய பிரதேசம் | கி.மு. 500-200 | சங்காலான மோதிரம் | IAR 1971-72 பக்.27-28 |
| மாஸ்கி | ரெய்ச்சூர் | கர்நாடகம் | கி.மு. 200-50 கி.பி. | மணிகள், சங்குப்பட்டறை | AI 1957 Vol. 13 பக். 10 |
| ஆக்ரோகா | கிசார் | ஹரியானா | பிற்கால குஷாணர் | மணிகள் | IAR 1978-79 பக்.69 |
| சகத்தூர் | மஹ்பூநகர் | ஆந்திர பிரதேசம் | கருப்பு சிவப்பு ஓடுகள் | மணிகள் | IAR 1977-78 பக்.11 |
| அஹார் | உதைப்பூர் | ராஜஸ்தான் | கி.பி100-300 | --- | IAR 1961-62 பக். 50 |
| பாதேஸ்வரம் | ஆக்ரா | உ. பிரதேசம் | கி.பி.100-600 | --- | IAR 1975-76 பக்.43 |
| சம்பா | பகல்பூர் | பிகார் | கருப்புப்பானை ஓடுகள் (NBP) | உடைந்த திருகுச்சுருள் | IAR 1982-83 பக்.24 |

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| உஜ்ஜயின் | | மத்திய பிரதேசம் | மெருகேற்றப்பட்ட கருப்புப்பானை ஓடுகள் (NBP) | சங்குகள் | IAR 1956-57 பக்.20-27 |
| மதுரா | மதுரா | உத்தர பிரதேசம் | கி.பி.100-300 | பானையோட்டில் சங்கு சித்திரம் | IAR 1974-75 பக்.50 |
| ராஜ கர்ண கா கிலா | கர்னல் | ஹரியானா | கி.பி. 100 | சங்கு | IAR 1970-71 பக்.15-16 |
| துமெய்ன் | குணா | மத்திய பிரதேசம் | கி.மு. 200-கி.பி. 100 | --- | IAR 1971-72 பக்.27-28 |
| நந்தூர் | ரெய்சன் | மத்திய பிரதேசம் | கி.மு. 200 - 100 கி.பி | --- | IAR 1980-81 பக்.37 |
| தௌலத்பூர் | குருஷேத்திரம் | ஹரியானா | வரலாற்றுத் தொடக்க காலம் | --- | IAR 1977-78 பக். 23 |
| கர்வன் | வதோதரா | குஜராத் | வரலாற்றுத் தொடக்க காலம் | அறுக்கப்பட்ட திருகுச் சுருள் | IAR 1977-78 பக்.22 |
| எரான் | சாகர் | மத்திய பிரதேசம் | வரலாற்றுத் தொடக்க காலம் | --- | IAR 1960-61 பக். 18<br>IAR 1961-62 பக். 24-25 |
| இர்லா | ஒஸ்மானாபாத் | மகாராஷ்டிரா | வரலாற்றுத் தொடக்க காலம் | ---- | IAR 1989-90 பக். 69 |
| பொகர்தன் | அவுரங்காபாத் | மகாராஷ்டிரா | சாதவாகனர் காலம் | பறவை 1 | IAR 1972-73 பக்.20-21 |
| தேர் | ஒஸ்மானாபாத் | மகாராஷ்டிரா | சாதவாகனர் காலம் | | IAR 1966-67 பக்.25-26 |
| பெத்த மாற்றூர் | மஹபூப்நகர் | ஆ. பிரதேசம் | சாதவாகனர் காலம் | --- | IAR 1977-78 பக். 12 |
| ஆர்ணி | யவத்மால் | மகாராஷ்டிரம் | சாதவாகனர் | சங்குகள் | IAR 1978-79 பக்.71-72 |
| நெவாசா | அஹமத் நகர் | மகாராஷ்டிரா | சாதவாகனருக்குப்பின் | சங்குகள் | IAR 1954-55 பக்.7 |

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| பிரகாஷ் | தூலியா | மகாராஷ்டிரா | கி.மு. 200-கி.பி.600 | மணிகள் | AI 1964&65, Vol.20 & 21 பக்.109117 |
| ஹஸ்தினாபுரம் | மீரட் | உத்திர பிரதேசம் | கி.மு. 200- கி.பி. 300 | --- | AI 1954&55, Vol.10-11 பக். 90-91 |
| ஆண்டிசாக் | பகல்பூர் | பிகார் | கி.மு. 200 | சங்குபோன்ற பானை ஓடு | IAR 1973-74, பக்.8-9 |
| பண்போர் | கராச்சி | பாகிஸ்தான் | ஹரப்பா | --- | Khan, F.A., 1969 |
| தட்சசிலம் | --- | வடக்கு பஞ்சாப் | கி.பி.50- 200 | மணிகள் பதக்கம் | AI 1947-48 Vol. 4 பக்.74 -80 |
| அரிக்கமேடு | பாண்டிச்சேரி | பாண்டிச்சேரி | கி.பி. 50 | மோதிரம் மணிகள் | AI 1946 Vol.2 பக். 96-102 |
| மாஸ்கி | ரெய்ச்சூர் | கர்நாடகம் | கி.பி. 50-300 | மணிகள், சங்குப்பட்டறை | AI 1957 Vol. 13 பக். 10 |
| பிரமகிரி | சித்தல்துர்க்கம் | கர்நாடகம் | கி.பி. 100 | மோதிரம் மணிகள் | AI 1948 Vol. 4 பக்.263-267 |
| சாலிகுண்டம் | ஸ்ரீகாகுளம் | ஆந்திர பிரதேசம் | கி.பி. 100 | எழுத்துகள் பொறிக்கப் பட்ட சங்குகள் | IAR 1953-54 பக்.53-54 |
| கிளைவ் விகேரா | மோரேனா | மத்திய பிரதேசம் | குஷாணர் | --- | IAR 1981-82 பக்.33-34 |
| சங்கோல் | லூதியானா | பஞ்சாப் | குஷாணர் | --- | IAR 1985-86 பக்.69<br>IAR 1989-90 பக்.92 |
| ராஜ்பதிதங்கா | முர்ஷிதாபாத் | மேற்கு வங்காளம் | கி.பி.500-900 | சங்குகள் | IAR 1966-67 பக். 47 |

| இடம் | மாவட்டம் | மாநிலம் | காலம் | பிற பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|---|
| பிரகாஷ் | தூளியா | மகாராஷ்டிரா | 600-1100 கி.பி. | --- | AI 1964-65 vol. 20-21 பக். 116-7 |
| பிரபாஸ்பாதன் | சோரத் | மகாராஷ்டிரம் | குப்தர் காலம் | --- | IAR 1956-57 பக்.16-17 |
| கொலுஹா | வைசாலி | பிகார் | குப்தர் காலம் | --- | IAR 1989-90 பக்.12-13 |
| ஹர்ஸ்-கா-திலா | தானேசர் | ஹரியானா | குப்தர் காலம் | சங்கு சுடுமண் முத்திரை | IAR 1989-90 பக்.29 |
| எரிச் | ஜான்சி | உ. பிரதேசம் | குப்தர் காலம் | --- | IAR 1989-90 பக்.101 |
| துமெய்ன் | குணா | ம. பிரதேசம் | கி.பி. 600-1200 | --- | IAR 1971-72 பக்.27-28 |
| துமெய்ன் | குணா | ம. பிரதேசம் | கி.பி. 600-1200 | --- | IAR 1971-72 பக்.27-28 |
| ஹர்ஸ்-கா-திலா | தானேசர் | ஹரியானா | கி.பி. 600-1200 | --- | IAR 1989-90 பக்.30 |
| ஹர்ஸ்-கா-திலா | தானேசர் | ஹரியானா | இராஜ புத்திரர் காலம் | --- | IAR 1989-90 பக்.29 |
| ஹஸ்தினாபுரம் | மீரட் | உ. பிரதேசம் | c.1100 -1500 கி.பி. | --- | AI 1954-55 Vol. 10&11 பக்.90-91 |
| கர்வான் | வதோதரா | குஜராத் | இடைக்காலம் | --- | IAR 1977-78 பக்.22 |
| ஸ்ரீசைலம் | கர்னூல் | ஆ. பிரதேசம் | வரலாற்றுக்காலம் | --- | IAR 1989-90 பக்.4 |

## அட்டவணை 3. தமிழகத்தில் அகழாய்வில் கிட்டிய சங்கு அணிகலன்கள்

| ஊர் | மாவட்டம் | காலம் | கிட்டிய பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|
| டி.கல்லுப்பட்டி | மதுரை | பெருங்கற் படைக் காலம் (இரும்புக்காலம்) | சங்கு வளையல்கள் | IAR - 1976-77<br>IAR - 1979-80 |
| அப்புக்கல்லு | வேலூர் | இரும்புக் காலம் | சங்கு வளையல்கள் | IAR - 1976-77, 1979-80 |
| ஒடுகத்தூர் | வேலூர் | புதிய கற்காலம், இரும்புக் காலம் | சங்கிலான பொருட்கள் | இராசவேலு திருமூர்த்தி - 1995:24 |
| கல்லேரிமலை (இராஜாக்கல்லு) | வேலூர் | புதிய கற்காலம் இரும்புக் காலம் | கண்ணாடி மற்றும் சங்கு வளையல்கள் | இராசவேலு மற்றும் திருமூர்த்தி - 1995: 27 |
| பெரும்பேர் | செங்கல்பட்டு | இரும்புக்காலம் | சங்குப் பொருட்கள் | Rea, A., 1915 |
| மல்லபாடி | தருமபுரி | இரும்புக்காலம் | சங்கு வளையல்கள் | IAR 1977-78 |
| கோவலன் பொட்டல் | மதுரை | இரும்புக் காலம் | சங்குமணி, வளையல்கள் | இராசவேலுமற்றும் திருமூர்த்தி 1995:45 |
| சானூர் | செங்கல்பட்டு | இரும்புக் காலம் | சங்கிலான பொருட்கள் | AI Vol.15 |
| பேரூர் | கோயம்புத்தூர் | இரும்புக் காலம் | சங்கு வளையல் | IAR 1970-71 |
| பூம்புகார் | நாகபட்டினம் | இரும்புக் காலம் | சங்கு வளையல் | Soundararajan, 1994 |
| கொடுமணல் | ஈரோடு | இரும்புக் காலம் | சங்கு தொழில் கூடம் | Rajan, K, 1994 |
| கொற்கை | திருநெல்வேலி | இரும்புக் காலம் | சங்கு தொழில் கூடம் | Nagasamy, 1970 |
| இடையார் பாளையம் | கோயம்புத்தூர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | IAR 1989-90 |
| அதியமான் கோட்டை | தருமபுரி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு, கண்ணாடி, செம்பு, சுடுமண் | IAR 1980-81 & 1981-82 |
| அரிக்கமேடு | பாண்டிச்சேரி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | AI 1946 Vol.2 |

| ஊர் | மாவட்டம் | காலம் | கிட்டிய பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|
| அழகரை | திருச்சி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு/கண்ணாடி வளையல்கள் | Mahalingam, T.V, 1970 |
| அழகன்குளம் | இராமநாதபுரம் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு தொழிற்கூடம் | Abdul Majeed, et.al, 1992 |
| உறையூர் | திருச்சி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு பொருட்கள் | Raman, K.V., 1988 |
| கரூர் | கரூர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | Abdul Majeed, 1987 |
| குட்டூர் | தருமபுரி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு | IAR 1982-83 |
| குடிகாடு | கடலூர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு மணி, கண்ணாடி மணி | IAR 1987-88, 1988-89 |
| செங்கமேடு | கடலூர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கினாலான கொண்டை வாரி வளையல் | இராசவேலு திருமூர்த்தி 1995: :134-135 |
| திருக்காம்புலியூர் | திருச்சி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு மணி , சங்கு வளையல் | இராசவேலு திருமூர்த்தி 1995: 135-141 |
| அப்புக்கல்லு | வேலூர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | IAR - 1976-77, 1979-80 |
| அப்புக்கல்லு | வேலூர் | கி.பி.900-1600 | கண்ணாடி வளையல்கள் | IAR - 1976-77, 1979-80 |
| பாளான் குளம் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , நஞ்சாவுர் ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| ஈஞ்சார் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் சங்குத் தொழிலகம் | எம்.ராஜேஷ் , நஞ்சாவுர் ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| சுக்கிரவார்பட்டி | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , நஞ்சாவுர் ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| திருத்தங்கல் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , நஞ்சாவுர் ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| காரிசேரி | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , நஞ்சாவுர் ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |

| ஊர் | மாவட்டம் | காலம் | கிட்டிய பொருட்கள் | நோக்கீடு |
|---|---|---|---|---|
| கன்னிசேரி | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| செங்குன்றபுரம் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| வேம்பக்கோட்டை | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள்<br>சங்குத் தொழிலகம் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| கரிசல்குளம் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| கம்பத்துப் பெருமாள் கோயில் | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| செட்டிக்குறிச்சி | விருதுநகர் | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |
| சங்கரலிங்கபுரம் | தூத்துக்குடி | வரலாற்றுத் தொடக்க காலம் | சங்கு வளையல்கள்<br>சங்குத் தொழிலகம் | எம்.ராஜேஷ் , தஞ்சாவூர்<br>ஆர்.பாலசந்திரன், திருத்தங்கல் |

## அட்டவணை 4. இராபர்ட் புரூஸ் ஃபூட் (Robert Bruce Foote) கள ஆய்வில் கண்டுபிடித்த சங்குப்பொருட்கள்*

| ஊர் | வட்டம் | மாவட்டம் | கிடைத்த பொருட்கள் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீநிவாஸ்புரா (Srinivaspura) | கோலார் | மைசூர் | 6-வளையல்கள் | பெருங் கற்காலம் இரும்புக்காலம் | -- |
| மனகுர்தி மலை | — | பெல்லாரி | அறுக்கப்பட்ட திருகுசுருள் | பெருங் கற்காலம் இரும்புக்காலம் | பூடான் பழங்குடிகள் காது, கழுத்துக்கு பயன்படுத்துவது போன்றவை |
| நகல்தின்னி (Nagaldinni) | அதோனி | பெல்லாரி | பல சங்கு வளையல்கள் | இரும்புக்காலம் | (பெல்லாரியிலிருந்து 40 மைல் வடகிழக்கே) |
| முகதி (Mugati) | அதோனி | பெல்லாரி | 2-உடைந்த வளையல்கள் | இரும்புக்காலம் | |
| சந்துர் வள்ளம் (SandurVallam) | -- | பெல்லாரி | 2-உடைந்த வளையல்கள் | இரும்புக்காலம் | பெல்லாரியிலிருந்து 15½ மைல் வடகிழக்கு |
| ஹம்பஸாக்ரா (Hampasagra) | -- | பெல்லாரி | 18-உடைந்த சங்கு துண்டங்கள் | இரும்புக்காலம் | துங்கபத்திரா தெற்கு கரை 53 மைல் பெல்லாரியிலிருந்து மேற்கு |

* இக்கண்டுபிடிப்புகளில் பெரும்பாலானவையை இராபர்ட் புரூஸ் ஃபூட் புதிய கற்காலத்தைச் சார்ந்தவை எனக் குறிப்பிட்டுள்ளார் (Foote 1916). ஆனால் சங்கறுக்கும் தொழில் நுட்பம், கிடைத்த பழைய சங்குகளின் விளிம்பிமைவுகள் ஆகியனவற்றைக் கருத்தில் கொண்டு இரும்புக் காலத்திற்குப் பின்பே இவை செய்யப்பட்டிருக்க வேண்டும் என ஹார்னல் கருதுகிறார் (Hornell 1914:54).

| ஊர் | வட்டம் | மாவட்டம் | கிடைத்த பொருட்கள் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| ஹடகள்ளி (Hadagalli) | -- | பெல்லாரி | 1-உடைந்த சங்கு துண்டம் | இரும்புக்காலம் | ஹூவினா (Huvina) நதியின் வடகரை, 65 மைல் பெல்லாரியிலிருந்து மேற்கு |
| ரெய்துர்க் (Raidurg) | ரெய்துர்க் | பெல்லாரி | 1- உடைந்த சங்கு துண்டம் | இரும்புக்காலம் | -- |
| மல்யம் (Malyam) | ரெய்துர்க் | பெல்லாரி | 3-சங்கு வளையல் துண்டங்கள் | இரும்புக்காலம் | -- |
| பெல்லகுப்பா (Bellaguppa) | — | பெல்லாரி | வேலை செய்யப்பட்ட சங்கு 3- சங்கு வளையல் துண்டங்கள் | இரும்புக்காலம் | -- |
| ஹவலிகி (Havaligi) | கூட்டி (Gooty) | அனந்த்பூர் | 8 சங்கு துண்டங்கள் வேலைப் பாடற்றது | இரும்புக்காலம் | அனந்த்பூரிலிருந்து 40 மைல் வடமேற்கு |
| தாட்பத்ரி | தாட்பத்ரி (Tadpatri) | அனந்த்பூர் | சங்கு வளையல் துணைடங்கள் | இரும்புக்காலம் | --- |
| முண்ட்லவரிப்பள்ளி | கத்ரி (Kadiri) | கடப்பா | 29 உடைந்த சங்கு வளையல்கள் | இரும்புக்காலம் | பாப்பாக்னி ஆற்றின் இடதுபுறம் (Papaghni River) |
| பஸ்திபாட் (Bastipad) | --- | கர்நூல் | பல உடைந்த சங்கு வளையல்கள் (சங்குத் தொழிலகம்) | இரும்புக்காலம் | ஹந்ரி ஆற்றின் இடது கரை, பஸ்திபாடின் எதிர்புறம் |
| மாஸ்கி | --- | ரெய்ச்சூர் தோப் Raichur Doab | சங்குத் தொழிலகம் | இரும்புக்காலம் | துங்கபத்திரா நதியின் துணைநதியின் கரை |

| ஊர் | வட்டம் | மாவட்டம் | கிடைத்த பொருட்கள் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| கொடேகல்லு (Kotegallu) | லிங்க்சுகுர் (Ling Sugur) | ரெய்ச்சூர் தோப் Raichur Doab | சங்கு வளையல் துண்டங்கள் | இரும்புக்காலம் | --- |
| ராவல்கொண்டா (Rawal Konda) | --- | ரெய்ச்சூர் தோப் Raichur Doab | சங்கு வளையல் துண்டங்கள் | இரும்புக்காலம் | --- |
| குடிவாடா (Gudiwada) | --- | கிருஷ்ணா | சங்கு வளையல் துண்டங்கள் | வரலாற்றுத் தொடக்க காலம் | --- |
| அமராவதி | --- | குண்டூர் | 1. சங்கு மோதிரங்கள் 2. உடைந்த வளையல்கள் 3. வட்டத்தட்டுகள் (¾") துளையிடப்பட்டவை கழுத்தணியாக இருக்கலாம் | கி.மு. 200 | --- |
| பெத்தமுடியம் | --- | கடப்பா | வட்டத்தகடுகள் உருளை மணிகளுடன் கோர்க்கப்பட்ட கழுத்தணி | --- | --- |
| அம்ரேலி ப்ராண்ட் (Amreli Prant) | ஜாம் நகர் (Jamnagar) | கத்தியவார் | 41 உடைந்த சங்கு வளையல்கள் | --- | |
| பாபாபூர் (Babapur) | --- | கத்தியவார் | 13 சங்கு வளையல்கள் 2 வேலைப்பாடுகளுடன் திருகுச்சுருள் | --- | அம்ரேலியிலிருந்து 13 மைல் மேற்காக |
| அம்பாவல்லி (Ambavalli) | --- | கத்தியவார் | 71-உடைந்த சங்கு வளையல்கள் | இரும்புக்காலம் | --- |

| ஊர் | வட்டம் | மாவட்டம் | கிடைத்த பொருட்கள் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| சொன்னாரியா (Sonnaria) | --- | கத்தியவார் | 2 உடைந்த சங்கு வளையல்கள் | --- | |
| கோடிநார் (Kodinar) | --- | கத்தியவார் | சங்குத் தொழிலகம் அறுக்கப்பட்ட சங்குத் துண்டங்கள் | --- | |
| வாலாபிபூர் (Walah)Valabipur | --- | கத்தியவார் | 62 சங்கு வளையல் துண்டங்கள் | --- | |
| சிகாம் (Sigam) | --- | குஜராத் | 9 - வேலைப்பாடுடன் கூடிய வளையல்கள் | --- | ஹொரான் நதியின் வடபுறம் |
| காம்ரெஜ் | --- | குஜராத் | அழகிய வேலைப்பாடுடன் ஒரு வளையல் மற்றும் பல வளையல்கள் | --- | சூரத்திலிருந்து 12 மைல் வடகிழக்கு தபி நதிக்கரை |
| மாஹூரி (Mahuri) | விஜய்பூர் (Vijapur) | குஜராத் | உடைந்த சங்கு வளையல்கள் சங்குத் துண்டங்கள் சங்குத் தொழிலகம் | --- | --- |

# பின்னிணைப்பு - 1

## இலக்கியங்களில் சங்கு

### வளை நெகிழ்தல்

அவ்வளை வெரிநின் அரக்கு ஈர்த்தன்ன (நற்றிணை 25-1)
நோகோ யானே; நெகிழ்ந்தன வளையே (நற்றிணை 29:1)
வான்கோல் எள்வளை வெளவிய பூசல் (நற்றிணை 100:5)
திருந்து கோல் எல் வளைவேண்டி யான் அழவும் (நற்றிணை 136:1)
மாண் நலம் இழந்த சிறை ஏர் எல்வளை குறுமகள் (நற்றிணை 167:10)
ஒள் இழை மகளிர் இலங்குவளை தொடூஉம் (நற்றிணை 188:4)
பணைத் தோள் எல் வளை ஞெகிழ்த்த எம் காதலர் (நற்றிணை 193:6)
இலங்கு வளை நெகிழ்த்த கலங்கு அஞர் எள்ளி (நற்றிணை 214:10)
புரை இல் நுண்நேர் எல் வளை
நெகிழ்த்தோன் குன்றத்து (நற்றிணை 236:6-7)
இவள் நெருங்கு ஏர் எல்வளை ஓடுவ கண்டே (நற்றிணை 258:10-11)
யாழ நின் இறைவரை நில்லா வளையும் (நற்றிணை 262:1-2)
தோடு அமை செறிப்பின் இலங்கு வளை ஞெகிழ (நற்றிணை 282:1)
சிறுவளை விலை எனப் பெருந் தேர் பண்ணி (நற்றிணை 300:5)
இளைமை கொண்ட வளையார் முன்கை (நற்றிணை 323:5)
சில விளங்கு எல் வளை ஞெகிழ (நற்றிணை 363:9)

கோடு ஈர் இலங்கு வளை நெகிழ (குறுந்தொகை 11:1)
தொகுவளை முன்கை மடந்தை நட்பே (குறுந்தொகை 15:6)
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்ந்த (குறுந்தொகை 31:5)
இறை இறந்து இலங்கு வளை நெகிழ (குறுந்தொகை 0:3-4)
அழுகற் சில் நீர் வளையுடைக் கையாள் (குறுந்தொகை 6:2-3)
இலங்கு வளை நெகிழச் சாஅய், யானே (குறுந்தொகை 125:1)
சில்நிரை வால் வளைக் குறுமகள் (குறுந்தொகை 189:6)
செறிவளை நெகிழ (குறுந்தொகை 190:2)
அம்சில் ஓதி ஆய் வளை நெகிழ (குறுந்தொகை 211:1)
தோடு ஆர் எல் வளை நெகிழ (குறுந்தொகை 216:3)
நெடிய திரண்ட தோள் வளை நெகிழ்த்த (குறுந்தொகை 252:1)
இறைவளை நெகிழ்த்த எவ்வ நோயொடு (குறுந்தொகை 289:2)
தொல்நிலை நெகிழ்ந்த வளையள் (குறுந்தொகை 303:4)
ஆய்வளை நெகிழவும் (குறுந்தொகை 316:1)

ஆய்வளை நெகிழவும் (குறுந்தொகை 316:1)
நிரைவளை முன்கை நேர் இழை மகளிர் (குறுந்தொகை 385:1)
கைவளை நெகிழ்தலும் மெய்பசப்பு ஊர்தலும் (குறுந்தொகை 371:1)
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ (குறுந்தொகை 365:1)
வளை ஏர் மென் தோள் ஞெகிழ்த்ததன் தலையும் (குறுந்தொகை 377:2)

சில்வளை விறலி (பதிற்றுப்பத்து 40:21)
சில்வளை விறலி (பதிற்றுப்பத்து 57:6)
சில்வளை விறலி (பதிற்றுப்பத்து 78:3)

இறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே (ஐங்குறுநூறு 20:5)
கெல்வளை நெகிழச் சாஅய் (ஐங்குறுநூறு 27:3)
தேனூரன்ன விவ டெரிவளை நெகிழ (ஐங்குறுநூறு 54:3)
புல்லென் றணிவென் புரிவளைத் தோளே (ஐங்குறுநூறு 133:3)
கோணே ரிலங்கு வளை நெகிழ்த்த (ஐங்குறுநூறு 136:2)
இறைகே ழெல்வளை நீங்கிய நிலையே (ஐங்குறுநூறு 140:3)
என் இறையே ரெல்வளை கொண்டு நின்றதுவே (ஐங்குறுநூறு 165:4)
வீங்கிள மாதோ தோழியென் வளையே (ஐங்குறுநூறு 192:4)
செறிவளை நெகிழத்தோ ளெறிகட ணாதே (ஐங்குறுநூறு 199:461)
மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉம் (ஐங்குறுநூறு 218:2)
வீங்குவளை நெகிழப் பிரிதல் (ஐங்குறுநூறு 285:4)
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழ (ஐங்குறுநூறு 310:696)
நிரைவளை முன்கை வருந்தலோ விலளே ([illegible]குறுநூறு 422:888)
எல்வளை நெகிழ மேனி வாட ([illegible]நூறு 471:1)

வளை களைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன ([illegible]னூறு 24:2)
சுடர்ந்து இலங்கு எல் வளை நெகிழ்ந்த ([illegible] 68:12)
செறிந்து இலங்கு எல் வளை
நெகிழ்ந்தமை நோக்கி (அகநானூறு 98:7)
இலங்கு வளை நெகிழச் சாஅய், அல்கலும் (அகநானூறு 127:1)
சூர்ப்புறு கோல் வளை செறித்த முன்கை (அகநானூறு 142:17)
சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழ (அகநானூறு 163:4)
எல்வளை ஞெகிழச் சாஅய், ஆய் இழை (அகநானூறு 185:1)
நீடலர்யாழ, நின் நிரை வளை நெகிழ (அகநானூறு 197:9)
சில்கோல் எல் வளை ஒடுக்கி, பல்கால் (அகநானூறு 224:16)
எல்வளை நெகிழ்ந்த முன்கை (அகநானூறு 242:13-14)
இறைவளை நெகிழ்ந்த நம்மொடு (அகநானூறு 250:13)
அரம்போழ் அவ்வளை நிலை நெகிழ்ந் தோரே (அகநானூறு 251:20)
நுண்கோல் எல்வளை தெளிர்க்கும் முன்கை (அகநானூறு 257:10)
இலங்கு வளை தெளிர்ப்ப வீசி (அகநானூறு 261:5)
வாள் ஏர் எல்வளை நெகிழ்த்த (அகநானூறு 267:16)

இலங்கு வளை நெகிழ்த்த செல்லல் (அகநானூறு 292:7)
இலங்கு வளை நெகிழ (அகநானூறு 328-9)
நேர் இறை முன்கை வீங்கிய வளையே (அகநானூறு 336:23)
அரம்போழ் அவ்வளை செறிந்த முன்கை (அகநானூறு 349:1)
இலங்கு வளை நெகிழ்த்த எவ்வம் காட்டிப் (அகநானூறு 355:10)
வளையுடை முன்கை அளைஇ (அகநானூறு 385:11)
சில்நிரை வால் வளைப் பொலிந்த (அகநானூறு 390:16)

எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து (புறநானூறு 36:8-9)
முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்கு வளை மகளிர் தெற்றியாடும் (புறநானூறு 53:1-3)
தொழி கழித் திடுதல் யான் யாயஞ் சுவலே (புறநானூறு 83:1-2)
சுரன் முதலிருந்த சில்வளை விறலி (புறநானூறு 103:4)
கோறிரண் முன்கைக் குறுந்தொடி மகளிர் (புறநானூறு 113:8)
அடிபுனை தொடு கழன் மையற் காளைக்கென்
வளைக்கை விறலியென் பின்னளாக (புறநானூறு 135:4)

சில நிரை வால் வளை செய்யாயோ! (கலித்தொகை 14:6)
வாடுபு வனப்பு ஓடி வணங்கு இறை வளை ஊர (கலித்தொகை 16:2)
செலவு ஒழிந்தனனால்: செறிக நின் வளையே! (கலித்தொகை 24-10)
நெகிழ்பு ஓடும் வளை எனவும் உள அன்றோ (கலித்தொகை 25:18)
வருந்தினை வதிந்த நின் வளை நீங்க (கலித்தொகை 29:23)
கையில் உகுவன போலும், வளை (கலித்தொகை 33:19)
வளை ஆனா நெகிழ்பு ஓடும் தோள் ஆயின் (கலித்தொகை 34:19)
வளை நெகிழ வாராதோள் குன்று (கலித்தொகை 41:27)
இலங்கு ஏர் எல்வளை, இவளுடைய நோயே (கலித்தொகை 46:27)
ஊழ் ஊறு கோடல் போல், எல் வளை
உகுபவால் (கலித்தொகை 48:11)
நிரைவளை முன்கை என் தோழியை நோக்கிட (கலித்தொகை 50:8)
இறைவளை நெகிழ்பு ஓட, ஏற்பவும் ஒல்லுமன் (கலித்தொகை 53:9)
வளை நெகிழ்பு யாம் காணுங்கால் (கலித்தொகை 80:13)
செறிவளை நெகிழ்த்தான் கண் சென்றாய் (கலித்தொகை 123:13)
இலங்கு ஏர் எல் வளை ஏர் தழை தைஇ (கலித்தொகை 125:12)
இறை வரை நில்லா வளையள் இவட்கு (கலித்தொகை 125:22)
செறி வளை தோள் ஊர, இவளை நீ துறந்ததை (கலித்தொகை 127:13)
இறை வளை நெகிழ்த்த எவ்வ நோய் இவள் தீர (கலித்தொகை 127:19)
நீடு இறை நெடு மென் தோள் நிரை
வளை நெகிழ்ந்ததை (கலித்தொகை 132:15)
ஒள் வளை ஓடத்துறந்து (கலித்தொகை 145:36)
நிறை வளை கொட்பித்தான் செய்த துயரால் (கலித்தொகை 145:57)

தோள் ஞெகிழ்பு, வளை நெகிழ்ந்தனள் (கலித்தொகை 147:63)

பவள வளைசெறித்தாட் கண்டணிந்தான் பச்சைக்
குவளை பசுந்தண்டு கொண்டு (பரிபாடல் 11:101)
இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர் (பரிபாடல் 12:23)
வளைமுகை வணங்குகிறையார் (பரிபாடல் 17:33)
இடுவளை யாரமோ டீத்தா னூடனகக்
கெடுவளை பூண்டவண் மேனியிற்கண்டு (பரிபாடல் 20:33-34)
எங்கள் கோல் வளைக ணில்லா
விபரீத மிகுந்த வாறே (நந்திக்கலம்பகம் 39:4)
வெள்வளை நெகிழவு மெம்முள்ளாத
கள்வனைக் காணாதிவ் ஆரெனக் கிளந்தன்று
(புறப்பொருள் வெண்பாமாலை 333)

## சங்குமணி ஆரம்

மணவுக்கோப்பு அன்ன நெடுங்கூந்தல் (குறுந்தொகை 23:2)

## உடைந்த சங்கு வளையல்கள்

ஊழினிருப்ப வெருச்சய மகளிர்
வாழைப்பூவின் வளைமுறி சிதற (புறநானூறு 237:10-11)
உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல் (புறநானூறு 90:1-2)
வளை உடைந்தன்ன வள் இதழ் காந்தள் (மலைபடுகடாம் 519)

## அரத்தால் அறுத்த வளையல்

கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை (ஐங்குறுநூறு 194:1)
இலங்குமுத் துறைக்கு மெயிறு கெழு துயர்வாய்
அரம்போ ழவ்வளைக் குறுமகள்
நரம்பாத் தன்ன தீங்கின வியளே (ஐங்குறுநூறு 15:3)
கோடீ ரெல்வளைக் கொழும்பல் கூந்தல் (ஐங்குறுநூறு 196:1)

அரம் போழ் அவ்வளை பொலிந்த முன்கை (அகநானூறு 6:2)
வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளை களைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன (அகநானூறு 24:2)
அரம் போழ் அவ்வளை தோள் நிலை நெகிழ (அகநானூறு 125:1)
அரம் போழ் அவ்வளை நிலை நெகிழ்த்தோரே (அகநானூறு 251:20)
வாள் ஏர் எல் வளை நெகிழ்த்த (அகநானூறு 267:16)

அரம் போழ் அவ்வளை செறிந்த முன்கை (அகநானூறு 349:1)
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ (குறுந்தொகை 11:1)
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த (குறுந்தொகை 31:5)
சில் நிரை வால் வளைக் குறுமகள் (குறுந்தொகை 189:6)
அம்சில் ஓதி ஆய் வளை நெகிழ (குறுந்தொகை 211:1)
தோடு ஆர் எல்வளை ஞெகிழ (குறுந்தொகை 216:3)
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ (குறுந்தொகை 365:1)
ஆய்பு உடன்
வள் உருள் நேமியான் வாய் வைத்த வளை போலத்
தெள்ளிதின் விளங்கும் சுரி நெற்றிக் காரியும் (கலித்தொகை 105:8-10)
வல்லோன் வாள் அரம் பொருத
கோண்ஏர் எல்வளை
அகன் தொடி செறித்த முன்கை (நற்றிணை 77:9-11)
அரம் போழ்ந்தறுத்த கண்ணேரிலங்கு வளை (மதுரைக்காஞ்சி 316)
கோறிரண் முன்கைக் குறுந்தொடி மகளிர் (புறநானூறு 113:8)
அரம்போழ் அவ்வளை மகளிர் (பெருங்கதை 1.50.10 )
அரம்போழ் வளை யணிந்த முன்கை (பெருங்கதை 2.3.69)

## வலம்புரி மற்றும் சங்கு உவமையாகச் சுட்டப்பெறுதல்

கடல்வளர் புரிவளை புரையு மேனி (புறநானூறு 56:3)
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி (புறநானூறு 225:12)
இரங்குரன் முரசமொடு வலம்புரியார்ப்ப
இரவுப்புறங் கண்ட காலைத் தோன்றி (புறநானூறு 397:5-6)
மாயுடை மலர் மார்பின் மையில்
வால் வளைமேனி (பரிபாடல் 1:3)
நீயே வளையொடு புரையும் வாலியோற்கவன் (பரிபாடல் 2:20)
பொலம்புரி யாடை வலம்புரி வண்ண (பரிபாடல் 3: 88)
நேமியும் வளையு மேந்திய கையால் (பரிபாடல் 13:9)
வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்கு செல் (பரிபாடல் 1.:44)
சலம்புரி தண்டேந்தினவை
வலம்புரி வய நேமியவை (பரிபாடல் 15:58-9)
பொலந்தொடி நின்ற மயிர் வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து (நெடுநல்வாடை 141-142)
வலம்புரி புரையும் வானரை முடியினர்
(திருமுருகாற்றுப்படை 127)
இலங்கு நீர் ...ப்பின் வளைமீக் கூறும்
வலம்புரியன்ன வசைநீங்கு (பெரும்பாண். 34-35)
வளைகண்டு அன்ன வால் உளைப் புரவி (பெரும்பாண். 489)
இருகடல் வான்கோடு புரைய (மதுரைக்காஞ்சி 407)

## சங்கொலி

| | |
|---|---|
| பறைபட பணிலம் ஆர்ப்ப | (குறுந்தொகை 15:1) |
| ஒருதலைப் பணில மார்ப்ப | (அகநானூறு 350:12) |
| இரங்குரன் முரசமொடு வலம்புரியார்ப்ப | |
| இரவுப்புறங் கண்ட காலைத் தோன்றி | (புறநானூறு 397:5-6) |
| வாடுபு வனப்பு ஓடி வணங்கு இறை வளை ஊர | (கலித்தொகை 16 : 2) |
| தாழ் அடும்பு மலைந்த புணரி வளை ஞரல | (பதிற்றுப்பத்து 30:6) |
| வளை ஞரலும் பனிப் பௌவத்து | (பதிற்றுப்பத்து 51:14) |
| கோடு முழங்கு இமிழ் இசை எடுப்பும் | (பதிற்றுப்பத்து 50:25) |
| வயங்கு கதிர் வயிரொடு வலம்புரி ஆர்ப்ப | (பதிற்றுப்பத்து 67:6) |
| இருதலைப் பணிலம் ஆர்ப்ப | (மதுரைக்காஞ்சி 380) |
| பணிலம் கலி ஆர் தடங்க | (மதுரைக்காஞ்சி 621) |
| வளை நரல வயிரார்ப்ப | (மதுரைக்காஞ்சி 185) |
| முந்தை யாமஞ் சென்ற பின்றைப் | |
| பணிலங் கலியவிந் தடங்கக் காழ் சாய்த்து | (மதுரைக்காஞ்சி 621-622) |
| வயிரும் வளையுமார்ப்ப | (முல்லைப்பாட்டு 92) |
| வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல | (திருமுருகாற்றுப்படை 120) |
| நணிமுரல் வளை முடியழிபிழிபு | (பரிபாடல் 2:40) |
| வலம்புரி வாய்மொழி யதிர்புவான் முழக்கு செல் | (பரிபாடல் 13:44) |
| முரசியம்பின, முருட திர்ந்தன முறையெழுந்தன, பணிலம் | (சிலப்பதிகாரம் 1:45-46) |
| வால்வளை செறிய வலம்புரி வலனெழ | (சிலப்பதிகாரம் 27:257) |
| வலம்புரி சங்கம் வறிதெழுந் தார்ப்ப | (சிலப்பதிகாரம் 7:113) |
| வால் வெண் சங்கொடு வகை பெற் றோங்கிய | |
| காலை முரசம் கனைகுர லியம்ப | (சிலப்பதிகாரம் 14:13-14) |
| கொடியுங் கவரியு மிடியுறழ் முரசும் | |
| சங்கப் படவமும் கம்பல விதானமும் | (பெருங்கதை 1.57.57-58) |
| சங்கிசை வெரீஇச் சால்பில பொங்கலின் | (பெருங்கதை 1.38.99) |
| சங்கமுந் துரமு முரசினோ டியம்ப | (பெருங்கதை 4.2.15) |
| கடுவாய் இரட்ட வளைவிம்ம - மன்னர் | |
| கழல்சூட அம்கண் மறுகே | (நந்திக்கலம்பகம் 6:1-2) |
| போகிடுக சங்கு புறகிடுக சேரி | |
| பொருபுணரி சங்கு வளைமென் | |
| ணாகிடறு கானல் வளமயிலை யாளி | |
| நயபரனு மெங்க ள்ளவே | (நந்திக்கலம்பகம் 51:2-3) |
| கடுவாய் போல் வளையதிர | (நந்திக்கலம்பகம் 61:12) |

